بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

# حَائِيَّةُ

## الْإِمَامِ ابْنِ أَبِي دَاوُدَ فِي السُّنَّةِ

ஸுன்னாவைப் பற்றி

இமாம் இப்னு அபீ தாவூத் ﵁ அவர்களின்

# ஹாஇய்யா

## கவிதை தொகுப்பு

**அஹ்லுஸ் ஸுன்னா வல்ஜமாஆ உடைய சரியான கொள்கைகளை தெளிவாக விளக்கிக் கூறி, வழிகேடர்களின் தவறான சித்தாந்தங்களைப் பிரித்தறிவிக்கும் கொள்கை நூல்!**


தமிழாக்கம் மற்றும் விளக்க உரை :

**உமர் ஷரீஃப் அப்துஸ் ஸலாம்**




ABOUT THIS BOOK

| | |
|---|---|
| NAME OF THE BOOK | : HAAYIYYATU IBNI ABEE DAWOOD |
| MEANING IN ENGLISH | : THE POEM OF IMAM IBNU ABEE DAWOOD |
| NAME IN ARABIC | : حائية ابن أبي داود ﷫ |
| SUBJECT | : BELIEF OF AHLUS SUNNAH |
| AUTHOR | : IBNU ABEE DAWOOD ﷫ |
| TRANSLATOR | : **OMAR SHERIFF ABDUS SALAM** |
| LANGUAGE | : TAMIL |
| DATE OF PUBLICATION | : NOV 2020 |
| EDITION | : 1st |
| TOTAL PAGES | : 288 |
| COPIES | : 2000 |
| REF. NO. | : DH-TML 2067 |
| PRINTED BY | : PATEL GRAPHICS, CHENNAI - 6. |

**HADIYAH: RS. 110/-**




Published by

DARUL HUDA

Invite | Educate | Publish | Contribute

# 211(102), 1st Floor, Linghi Street, Mannady, Chennai-1.
Ph: 044-25247866, 98401 74121, 98844 69044
darulhuda.chennai@gmail.com | www.darulhuda.net

# பொருளடக்கம்

--------------------

# பதிப்புரை

எல்லாப் புகழும் அல்லாஹ்விற்கே. ஸலவாத்தும் ஸலாமும் நமது நபி முஹம்மது ﷺ அவர்கள் மீதும் அவர்களின் குடும்பத்தார்கள் மற்றும் தோழர்கள் மீதும் நிலவட்டும்.

இஸ்லாமிய மார்க்கத்தில் கொள்கையின் முக்கியத்துவம் உடலில் தலையின் முக்கியத்துவத்தைப் போன்றாகும். கொள்கை சரி இல்லை என்றால் அமல்கள் அதிகமாக இருந்து பலனில்லை. கொள்கையில் வழிகேடு நுழைவதை விட்டும் தன்னை பாதுகாத்து கொள்வது ஒவ்வொரு முஸ்லிமின் மீது கட்டாயக் கடமையாகும்.

ஏனைய மதங்களுக்கு மத்தியில் இஸ்லாம் தனித்து விளங்குவதைப் போல் அஹ்லுஸ் ஸுன்னாவின் கொள்கை முஸ்லிம்களுக்குள் இருக்கின்ற பல கொள்கைகளுக்கு மத்தியில் தனித்து விளங்குகிறது.

பலர், அல்லாஹ்வின் தெளிவான நேர்வழியை புறக்கணித்துவிட்டு வழிகெட்டவர்களாக அலைவதின் காரணம் அவர்கள் இஸ்லாமில் தங்கள் சுய கருத்துக்களை புகுத்தி, குர்ஆன், ஹதீஸுக்கு தங்கள் மனோ இச்சைக்கு ஏற்ப விளக்கம் கூறியதாகும்.

இந்நூலின் ஆசிரியர் கவிதைவாயிலாக கூறிய அஹ்லுஸ் ஸுன்னாவின் கொள்கையை என்னால் முடிந்தளவு விளங்கி, பிறகு கவிதைகளுக்கு பொருள், கருத்து, விளக்கம் எழுதியுள்ளேன். இதற்கு அருள் புரிந்த அல்லாஹ்விற்கே எல்லாப் புகழும்.

ஆசிரியர் அவர்களுக்கும் அவர்களுக்கு முன்சென்ற அஹ்லுஸ் ஸுன்னாவின் அறிஞர்களுக்கும் அவர்களுக்குப் பின் வந்த அறிஞர்களுக்கும் அல்லாஹ் நம் சார்பாக நற்கூலியை வழங்குவானாக! அவர்கள் எல்லோரையும் தனது கருணையில் நுழைவிப்பானாக! ஆமீன்.

இதில் தவறு இருந்தால் என் புறத்திலிருந்து நிகழ்ந்ததாகும்.

அல்லாஹ்வின் மார்க்கம் தவறுகளை விட்டு பரிசுத்தமானதாகும். இதில் சரியான கருத்துக்கள் இருந்தால் அது அல்லாஹ்வின் புறத்திலிருந்தாகும்.

இந்நூலை வாசிப்பவர்கள் இதன் மூலம் நற்பலன் அடைய வேண்டும். இந்நூலை சரிபார்ப்பதில் உதவி செய்த மார்க்க அறிஞர்கள், இன்னும் சகோதர சகோதரிகள் அனைவருக்கும் அல்லாஹ் நற்கூலி வழங்குவானாக! அல்லாஹ்வின் அருளால், பிறகு, அந்த உதவியாளர்களின் ஒத்துழைப்பால் இந்த நூலை முடிந்தளவு திருத்தமாக வெளியிட முயற்சி செய்து இருக்கிறோம். இருப்பினும் மனித முயற்சிகள் குறைகளை விட்டு நீங்கியவை அல்ல. ஆகவே, இந்நூலில் உள்ள கருத்துகளில் பிழை இருந்தால் அல்லது வாசகங்களில் எழுத்துப் பிழைகள் இருந்தால் எங்களுக்கு தெரியப்படுத்தவும் என வாசகர்களிடம் அன்போடு கோருகிறோம். அல்லாஹ் எங்களின் இந்நூலை ஏற்று எல்லோரும் பலன் பெறும்படி செய்வானாக! ஆமீன்.

தாருல் ஹுதாவிற்கு இதுவரை உதவி செய்த அனைத்து சகோதர சகோதரிகளுக்கும் அல்லாஹ் தனது நற்கிருபைகளை பூரணமாக வழங்குவானாக! அவர்களுக்கு சொர்க்கத்தை கூலியாக வழங்குவானாக! அவர்களை மன்னித்து அவர்கள் மீது கருணை காட்டுவானாக! ஆமீன்.

தாருல் ஹுதாவின் பணியாளர்கள் எல்லோருக்கும் அல்லாஹ் தனது ரஹ்மத்துகளையும் பரகத்துகளையும் வழங்குவானாக! ஆமீன்.

அல்லாஹ்வே! எங்களை மன்னிப்பாயாக! எங்களிடமிருந்து ஏற்றுக் கொள்வாயாக! நீ நன்கறிந்தவன், அனைத்தையும் நன்கு செவியுறுபவன்.

உமர் ஷரீஃப் அப்துஸ் ஸலாம்
குர்ஆன், ஸுன்னா பணியாளன்
தாருல் ஹுதா, மண்ணடி - மதராஸ் 1.

# தாருல் ஹுதா
# அறிமுகம்

எல்லாப் புகழும் அகிலங்களின் இறைவன் அல்லாஹ் ஒருவனுக்கே! இறையருளும் ஈடேற்றமும் நபி முஹம்மது ﷺ அவர்களுக்கும், அவர்களது குடும்பத்தார், தோழர்கள், அவர்களைப் பின்பற்றும் அனைவருக்கும் உண்டாகட்டும்.

இஸ்லாமியச் சகோதர சகோதரிகளே!

அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹி வபரகாதுஹு

தாருல் ஹுதா அறிமுகத்தின் வாயிலாக உங்களைச் சந்திப்பதில் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறோம். இதில் தாருல் ஹுதாவின் நோக்கத்தையும் அதன் பணிகளையும் விவரிப்பதுடன் அதன் இன்றைய தேவையையும் தங்கள் முன் சமர்ப்பிக்கிறோம்.

*அல்லாஹு தஆலா கூறுகிறான்: "இறை நம்பிக்கையுடைய ஆண்களும், இறை நம்பிக்கையுடைய பெண்களும் (தங்களுக்குள்) ஒருவருக்கொருவர் உறுதுணையாக இருக்கின்றனர். அவர்கள், (ஒருவர் மற்றவரை) நன்மை செய்யும்படித் தூண்டியும், பாவம் செய்யாது தடுத்தும், தொழுகையைக் கடைப்பிடித்து, (மார்க்க வரி) ஜகாத்து கொடுத்தும் வருவார்கள். அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் கட்டுப்பட்டு நடப்பார்கள். இத்தகையோருக்கு வெகு விரைவில் அல்லாஹ் அருள்புரிவான்..."*

*(அல்குர்ஆன் 9 : 71)*

*மேலும், அல்லாஹு தஆலா கூறுகிறான்: (நம்பிக்கையாளர்களே!) உங்களில் ஒரு கூட்டத்தார் மனிதர்களைச் சிறந்ததின் பக்கம் அழைத்து, நன்மையைச் செய்யும்படி ஏவி, பாவமான காரியங்களில்*

*இருந்து அவர்களை விலக்கிக் கொண்டும் இருக்கட்டும். இத்தகையவர்கள்தாம் வெற்றியாளர்கள். (அல்குர்ஆன் 3 : 104)*

நபி ﷺ அவர்கள் கூறுகிறார்கள்: உங்களில் யாராவது ஒரு தவறைக் கண்டால் அதை தனது கரத்தால் மாற்றட்டும். அது இயலாவிட்டால் தனது நாவால் மாற்றட்டும். அதுவும் இயலாவிட்டால் உள்ளத்தால் (வெறுத்து விலகி விடட்டும்). இது ஈமானின் குறைந்தபட்ச அளவாகும்.

**(ஸஹீஹுல் புகாரி)**

மேலும் நபி ﷺ கூறுகிறார்கள்: இறைநம்பிக்கையாளர்கள் தங்களிடையே நேசங்கொள்வதற்கும், கருணை காட்டுவதற்கும், அன்பு செலுத்துவதற்கும் உதாரணம் ஓர் உடலைப் போல! உடலில் ஏதேனும் ஓர் உறுப்பு பாதிக்கப்பட்டால் அனைத்து உறுப்புகளும் காய்ச்சல் மற்றும் தூக்கமின்மையால் முறையிடுகின்றன. **(ஸஹீஹுல் புகாரி)**

இன்று நமது சமுதாயத்தில் சிறியோர் முதல் பெரியோர் வரை பெரும்பாலோர் சரியான மார்க்க ஞானத்திற்கும் முறையான வழிகாட்டலுக்கும் அதிகம் தேவையுள்ளவர்களாக இருப்பதைப் பார்க்கிறோம். ஆகவே, மேற்கூறப்பட்ட குர்ஆன் வசனங்கள் மற்றும் நபிமொழிகளுக்கிணங்க சமுதாய சீர்திருத்தப் பணியில் ஈடுபடுவது மார்க்கக் கடமை என்பதை உணர்ந்து, அல்குர்ஆன் மற்றும் நபிவழியின் அடிப்படையில் அந்த உயர்ந்த பணியை நிறைவேற்றி இறைப்பொருத்தத்தை அடைய வேண்டும் என்ற தூய எண்ணத்தில் தொடங்கப்பட்டதுதான் **தாருல் ஹுதா.**

## பணிகளும் தொண்டுகளும் :

### அழைத்தல் :

இதுவே இஸ்லாமின் அடிப்படையாகும். உலகில் இப்பணி இறைத் தூதர்கள் வாயிலாக நிலை நிறுத்தப்பட்டது. இறுதித் தூதர் முஹம்மது ﷺ அவர்களுக்குப் பின் அவர்களுடைய சமுதாயத்தினர் அனைவரின் மீதும் இப்பணி கடமையாக்கப்பட்டது. மேன்மைமிகு குர்ஆனும், சிறப்புமிகு நபி மொழியும் இதன் அவசியத்தை நமக்கு வலியுறுத்துகின்றன. இதற்கிணங்க இயன்ற அளவு அனைத்து வழிகளிலும் மனித சமுதாயத்திற்கு

இஸ்லாமை அறிமுகப்படுத்துவதும், அதன் உயர்வுகளை விளங்கச் செய்வதும் தாருல் ஹுதாவின் தலையாயப் பணியாகும்.

**கற்பித்தல் :**

இஸ்லாமை அறிய விரும்பும் சிறுவர்கள், வாலிபர்கள், முதியவர்கள், ஆண்கள், பெண்கள் என அனைவருக்கும் மேன்மைமிகு குர்ஆன், சிறப்புமிகு நபிமொழிகளை அவரவர் தகுதிக்கேற்ப கற்றுத் தருவது தாருல் ஹுதாவின் இரண்டாவது முக்கிய பணியாகும்.

**நூல் வெளியிடுதல் :**

மேன்மைமிகு குர்ஆன், சிறப்புமிகு நபிமொழி இவ்விரண்டையும் அடிப்படையாகக் கொண்டு சமுதாயப் பேரறிஞர்களால் அரபி மொழியில் எழுதப்பட்ட நூல்களை தமிழிலும் ஏனைய உலக மொழிகளிலும் மொழியாக்கம் செய்து, அந்நூல்களைச் சலுகை விலையில் மக்களுக்கு வழங்குவது தாருல் ஹுதாவின் மூன்றாவது சிறப்புப் பணியாகும்.

**உதவுதல் :**

அல்லாஹு தஆலாதான் அனைவரின் தேவைகள் அனைத்தையும் நிறைவேற்றுபவன் ஆவான். மிகப்பெரிய வள்ளலாகிய அல்லாஹ், தன் சார்பாக உலகில் ஏழை, எளியோர், நலிந்தோர் ஆகியோரின் துயர் துடைக்கும் வள்ளல் பெருமக்களுக்கு பெரும் வெகுமதிகளை ஈருலகிலும் வழங்குவதாக வாக்களித்துள்ளான். பிறர் துன்பங்களில் பங்கெடுப்பது, பிறர் தேவைகளை நிறைவேற்ற இயன்றவரை உதவுவது முஸ்லிம்களுடைய அடிப்படைப் பண்புகளாகும். இவ்வுன்னத பணிக்காக **பைத்துல்மால்** (பொது நிதி) ஏற்பாடு செய்து இரக்கச் சிந்தனையும், மார்க்கப்பற்றும் கொண்ட வள்ளல் பெருமக்களிடமிருந்து கடமையான, உபரியான தர்மங்களைப் பெற்று தேவையுடையோருக்கு உதவுதல் தாருல் ஹுதாவின் நான்காவது பணியாகும்.

மேற்கூறிய பணிகளைத் தவிர, இஸ்லாம் முழுமையாக ஒவ்வொருவரின் வாழ்விலும் வரவேண்டும் என்பதற்காகவும், மனிதச் சமுதாயங்களுக்குள் நல்லுறவும், அன்பும், கருணையும், சமூக புரிந்துணர்வும் ஏற்பட வேண்டும்

என்பதற்காகவும் இயன்றவரை அல்லாஹ்வுக்காக தொண்டாற்ற வேண்டும் என்பது தாருல் ஹுதாவின் குறிக்கோளாகும்.

இப்பணிகள் அனைத்தும் தொய்வின்றி தொடர்ந்து சிறப்பாக, திறம்பட நடைபெறவும், அவற்றை அல்லாஹ் அங்கீகரிக்கவும் தாங்கள் துஆ செய்யும்படி அன்புடன் கேட்டுக் கொள்வதுடன் தங்களால் இயன்றவரை இப்பணிகளில் பங்கு பெறவும் அழைக்கிறோம்.

பேராற்றலுடைய அல்லாஹ்விடமே உதவி தேடுகிறோம்! அவனையே முன்னோக்கி நிற்கிறோம்!!

உங்களால் முடிந்த உதவிகளை அல்லாஹ்வின் பொருத்தம் நாடி தந்துதவுங்கள்.

***நன்மையான காரியங்களில் எவற்றை நீங்கள் உங்களுக்காக (மரணம் வருவதற்கு) முன்னதாகவே செய்து கொள்கிறீர்களோ அவற்றை அல்லாஹ்விடத்தில் மிகச் சிறந்ததாகவும், மகத்தான கூலியாகவும் பெற்றுக் கொள்வீர்கள். (அல்குர்ஆன் 73 : 20)***

அல்லாஹ் தங்களுக்கு நற்கூலி வழங்குவானாக!

---------------------

# முன்னுரை

பேரருளாளன் பேரன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...

ஹதீஸ் கலை பேரறிஞர், சுனன் அபீ தாவூத் என்ற ஹதீஸ் கிரந்தத்தின் ஆசிரியர், இமாம் அபூ தாவூத் என்று அழைக்கப்படும் சுலைமான் இப்னு அல் அஷ்அஸ் அஸ் சிஜிஸ்த்தானி ﵀ அவர்களின் மகனார், ஹதீஸ்களை மனனமிட்ட அறிஞர், அபூ பக்ர் என்ற அப்துல்லாஹ் ﵀ அவர்கள் தொகுத்த கவிதைத் தொகுப்பாகும் இது.

கவிதைகளின் இறுதி எழுத்து **حاء** ஹாவில் முடிவதால் இந்த தொகுப்புக்கு ஹாயிய்யா என்று பெயர் வைக்கப்பட்டது.

ஆசிரியர் அவர்கள், இந்த கவிதைத் தொகுப்பில் உண்மையான, கலப்படமற்ற அஹ்லுஸ் ஸுன்னா வல்ஜமாஆ உடைய முக்கிய கொள்கைகளை சுருக்கமாக தொகுத்து தந்துள்ளார்கள். அல்லாஹ் அன்னாருக்கு அருள் புரிவானாக! அவர்களின் இந்த தொகுப்பின் மூலம் நற்பலன் பெறுகின்ற நல்லோரில் என்னையும் உங்களையும் ஆக்குவானாக!

கவிதைத் தொகுப்புடன் அதன் தமிழாக்கம், கருத்து, சுருக்கமான விளக்கம் ஆகியவை உங்கள் முன் சமர்ப்பிக்கப்படுகின்றன.

படியுங்கள்! பயன் பெறுங்கள்! பரப்புங்கள்! நன்மை பெறுங்கள்!

---------------------

بِسْمِ اللَّهِ الرَّحْمَنِ الرَّحِيمِ

اَلْـحَمْدُ للهِ رَبِّ الْعَالَمِينَ وَالصَّلَاةُ وَالسَّلَامُ عَلَىٰ رَسُولِهِ وَعَلَىٰ آلِهِ
وَصَحْبِهِ أَجْمَعِينَ أَمَّا بَعْدُ فَقَالَ الْـمُؤَلِّفُ رَحِمَهُ اللّٰهُ تَعَالَىٰ

பேரருளாளன் பேரன்பாளன் அல்லாஹ்வின் பெயரால்...

எல்லாப் புகழும் அல்லாஹ்விற்கே. ஸலவாத்தும் ஸலாமும் அல்லாஹ்வுடைய தூதர் மீதும் அவர்களுடைய குடும்பத்தார் மற்றும் தோழர்கள் மீதும் நிலவட்டும்.

நிற்க! ஆசிரியர் رحمه الله கூறுகிறார்கள் :

# تَمَسَّكْ بِحَبْلِ اللهِ وَاتَّبِعِ الْـهُدَىٰ
# وَلَا تَكُ بِدْعِيًّا لَعَلَّكَ تُفْلِحُ

**பொருள் :**

அல்லாஹ்வின் கயிற்றைப் பற்றிப் பிடி! நேர்வழியைப் பின்பற்று! அனாச்சாரக்காரனாக இருக்காதே! நீ வெற்றி பெறுவாய்!

**கருத்து :**

அல்லாஹ்வின் வேதமாகிய குர்ஆனை உறுதியாக நம்பி அதன் படி செயல்பட வேண்டும். அல்லாஹ்விடமிருந்து வந்த நேர்வழியை மட்டும் பின்பற்ற வேண்டும். இதன் மூலம்தான் இம்மை, மறுமையின் வெற்றி கிடைக்கும்.

**விளக்கம் :**

அல்லாஹ்வின் கயிறு என்பது அல்குர்ஆன் ஆகும். அதுதான் அல்லாஹ்வின் புறத்திலிருந்து அகில உலக மக்களுக்காக நபி முஹம்மது ﷺ அவர்களுக்கு கொடுக்கப்பட்ட நேர்வழியாகும். அல்குர்ஆன் போதிக்கின்ற மார்க்கம் இஸ்லாம் ஆகும். அதுதான் அல்லாஹ்விடம் ஏற்றுக்கொள்ளப்பட்ட மார்க்கம் ஆகும். அதைத் தவிர அனைத்து கொள்கைகளும் சமயங்களும் மதக் கோட்பாடுகளும் வழிகேடாகும். அவற்றுக்கு அல்லாஹ்விடம் எவ்வித அங்கீகாரமும் இல்லை.

நேர்வழி என்பது அல்லாஹ்வும் அவனது ரஸூல் ﷺ அவர்களும் காண்பித்து கொடுத்தது மட்டும் ஆகும். அல்லாஹ்வின் மார்க்கத்தை குர்ஆன், ஸுன்னாவின் வெளிச்சத்தில் பரிசுத்தமாக, கலப்பற்ற முறையில் பின்பற்ற வேண்டும்.

நபி ﷺ அவர்கள் இறப்பதற்கு முன்னர் இந்த மார்க்கம் அவர்களுக்கு முழுமைப்படுத்தப்பட்டு விட்டது. நன்மையான, நேர்வழியான, மறுமைக்கு தேவையான எல்லா நல்லமல்களையும் நேர்வழிகாட்டல்களையும் மார்க்க விளக்கங்களையும் நபி ﷺ அவர்கள் நமக்கு கற்றுக் கொடுத்துவிட்டார்கள். அவற்றில் எதையும் அவர்கள் நம்மிடம் மறைக்கவில்லை. மேலும், அதை, நபித்தோழர்கள் புரிந்து செயல்படுத்தி நமக்கு எடுத்துரைத்து இருக்கின்றார்கள்.

ஆகவே, எதை நபி ﷺ அவர்களோ அவர்களின் தோழர்களோ நமக்கு போதிக்க வில்லையோ அது நேர்வழியாக, மார்க்கமாக ஆகாது. மாறாக, அது வழிகேடாகும். அதைத்தான் மார்க்கத்தில் பித்அத் -அனாச்சாரம் என்று கூறப்படும். அது ஒரு செயலாக இருந்தாலும் சரி, அல்லது ஒரு கொள்கையாக இருந்தாலும் சரி, ஒரு சிந்தனையாக இருந்தாலும் சரி.

ஆகவே, யார் நபி ﷺ அவர்கள் கற்றுக்கொடுத்த முறையில், நபித்தோழர்கள் பின்பற்றிய முறையில் மார்க்கத்தை பின்பற்றுவாரோ, இன்னும் அதில் பித்அத்துகளை கலக்கமாட்டாரோ அவர் இம்மையிலும் மறுமையிலும் வெற்றி பெறுவார். இம்மையின் வெற்றி என்பது அல்லாஹ்வின் நேர்வழியாகும். மறுமையின் வெற்றி என்பது அல்லாஹ்வின் பொருத்தமும் மன்னிப்பும் சொர்க்கமும் ஆகும்.

**சுருக்கம் :**

இந்த கவிதையில் நான்கு விஷயங்கள் கூறப்பட்டுள்ளன.

1. அல்குர்ஆனை விட்டு ஒருபோதும் விலகாமல் அதில் கூறப்பட்ட அனைத்தையும் நம்பிக்கை கொண்டு அதன்படி செயல்பட வேண்டும்.

2. நேர்வழி எது என்று அறிந்து அதை பின்பற்ற வேண்டும்.

3. அனாச்சாரங்களை விட்டு விலகி இருக்க வேண்டும்.

4. ஃபலாஹ் -வெற்றி கிடைக்க இதுதான் வழியாகும்.

இந்த கவிதையின் மேலதிக விளக்கம் அடுத்த கவிதையின் விளக்க உரையில் இன் ஷா அல்லாஹ் வர இருக்கின்றது.

---------------------

وَدِنْ بِكِتَابِ اللهِ وَالسُّنَنِ الَّتِي
أَتَتْ عَنْ رَسُوْلِ اللهِ تَنْجُو وَتَرْبَحُ

**பொருள் :**

அல்லாஹ்வின் வேதம் மற்றும் ரஸூலுல்லாஹ்விடமிருந்து வந்த மார்க்க வழிமுறைகளின் பிரகாரம் வணக்க வழிபாடு செய்! ஈடேற்றம் பெறுவாய்; நற்பலன் அடைவாய்.

**கருத்து :**

அல்லாஹ்வின் வேதம் மற்றும் நபி ﷺ அவர்களின் ஸுன்னா- இவ்விரண்டும்தான் மார்க்கமாகும். இவ்விரண்டை நாம் பின்பற்றுவதைக் கொண்டுதான் நமக்கு ஈடேற்றம் கிடைக்கும்; நாம் செய்யக் கூடிய நல்லறங்களுக்கு நன்மைகள் கிடைக்கும்.

**விளக்கம் :**

தீன் (-மார்க்கம்) என்பது அல்லாஹ்வின் வேதம் மற்றும் நபி ﷺ அவர்களின் ஸுன்னா என்ற வழிமுறைகளில் வந்தவை மட்டும்தான். அந்த இரண்டிலும், அல்லாஹ்வை நாம் எப்படி நம்பிக்கை கொள்ள வேண்டும், அவனை எப்படி நாம் வணங்க வேண்டும்; நம்முடைய ஈமான் எப்படி இருக்க வேண்டும்; எது எதுவெல்லாம் வணக்க வழிபாடுகள் என்று நமக்கு தெளிவாக கற்றுக்கொடுக்கப்பட்டு விட்டன. இன்னும், நபித்தோழர்கள் அவற்றை நமக்கு அறிவித்து விட்டார்கள்.

ஆகவே, அந்த இரண்டிலும் கூறப்படாத எந்த ஒரு கொள்கையும் நம்பிக்கையும் வழிமுறையும் செயலும் வணக்கவழிபாடும் அல்லாஹ்விடம் ஏற்றுக்கொள்ளப்படாது. அவை நமக்கு

கொள்கையாகவும் மார்க்கமாகவும் இறைவழிபாட்டு முறையாகவும் ஆக முடியாது.

தீன் என்பது அல்லாஹ்வை நம்புவதும் அவனை வணங்குவதுமாகும். அல்லாஹ்வை அவனது வேதம், இன்னும் அவனது தூதர் காண்பித்துக் கொடுத்த வழிமுறைக்கு ஏற்ப நாம் நம்பிக்கை கொண்டு வணங்க வேண்டும். நபி ﷺ அவர்கள் கூறாத எதுவும் கொள்கையாக, இபாதத்தாக ஆகாது. அது கேட்பதற்கும் பார்ப்பதற்கும் எவ்வளவுதான் அழகாக இருந்தாலும் சரி, உலகில் அதிகமான மக்கள் அதை ஏற்றுக் கொண்டாலும் சரி.

அல்லாஹ்வை, நாம் எப்படி நம்பிக்கை கொள்ள வேண்டும்; நாம் எந்தெந்த முறையில் அல்லாஹ்வை வணங்க வேண்டும்; எதுவெல்லாம் வணக்க வழிபாடுகள்; வணக்க வழிபாடுகளை எப்படி நிறைவேற்ற வேண்டும்; இன்னும் நாம் அல்லாஹ்வை திருப்தி படுத்தி சொர்க்கம் செல்வதற்கு தேவையான நம்பிக்கைகளையும் இபாதத்துகளையும் நபி ﷺ அவர்கள் நமக்கு கற்றுக் கொடுத்து விட்டார்கள்.

ஆகவே, இனி யாரும் நமக்கு ஒரு புதிய கொள்கையை, வணக்க வழிப்பாட்டை கற்றுத் தர வேண்டிய அவசியமில்லை. அப்படி யாரும் கற்றுக் கொடுத்தால் அந்த கொள்கையையும் வணக்கத்தையும் அல்லாஹ் ஏற்கவும் மாட்டான்; அவை, நம்மை அல்லாஹ்வின் பக்கம் நெருக்கமாக்கியும் வைக்காது. மாறாக, அவை அல்லாஹ்வின் கோபத்திற்கும் வெறுப்பிற்கும் தண்டனைக்கும் காரணமாக ஆகிவிடும். அல்லாஹ் பாதுகாப்பானாக!

நமக்கு அல்லாஹ்வின் பொருத்தம் கிடைக்க வேண்டும் என்றால்; மறுமையில் நரக நெருப்பில் இருந்து நஜாத் - ஈடேற்றம், பாதுகாப்பு வேண்டும் என்றால்; நமது ஈமான் ஏற்றுக் கொள்ளப்பட்டு, நாம் செய்யக்கூடிய அமல்களுக்கு நற்பலன் கிடைக்க வேண்டுமென்றால்- குர்ஆன், ஸுன்னாவை மட்டும்தான் நாம் பின்பற்ற வேண்டும். இன்னும், அந்த இரண்டில் வழிகாட்டப்பட்ட பிரகாரம்தான்

கொள்கையையும் வணக்க வழிபாடுகளையும் அமைத்துக் கொள்ள வேண்டும். அப்போதுதான் நமக்கு நஜாத்- ஈடேற்றமும், ரிப்ஹ் - நற்பலனும் (நாம் செய்கின்ற அமல்களுக்கு நற்கூலியும்) கிடைக்கும்.

இரண்டாவது கவிதையில் இரண்டு அடிப்படைகள் கூறப்பட்டுள்ளன.

1. அல்லாஹ்வின் வேதத்தை பின்பற்றுவது.

2. நபி ﷺ அவர்களுடைய ஸுன்னாவை பின்பற்றுவது.

**சுருக்கம் :**

முதலாவது கவிதை மற்றும் 2-வது கவிதையில் கூறப்பட்ட இரண்டு அடிப்படைகளில் முதல் அடிப்படையிலிருந்து நாம் அறிந்துகொள்ள வேண்டிய விஷயங்கள்.

1. நேர்வழி என்பது அல்லாஹ்விடம் இருந்து வர வேண்டும். மனிதர்களின் சிந்தனையில் உதிப்பது நேர்வழியாக ஆக முடியாது.

2. அல்லாஹ்வின் வேதம்தான் நாம் நேர்வழி பெறுவதற்குரிய வழிகாட்டியாகும்.

3. அல்லாஹ் தனது வேதத்தின் மூலம் நமக்கு கொடுத்த மார்க்கம் இஸ்லாம் ஆகும்.

4. நேர்வழியை தேடுபவர் குர்ஆன் கூறக்கூடியதை அப்படியே நம்பிக்கை கொள்ள வேண்டும். அதன்படி செயல்பட வேண்டும்.

5. வேதத்தை பின்பற்றாதவர் நிச்சயமாக வழிகெட்டு, நாசமாகுவார்.

6. யார் இஸ்லாமை ஏற்கவில்லையோ, அதன் வழிகாட்டல்படி வணக்க வழிபாடுகள் செய்யவில்லையோ, மனவிருப்பத்தின்படி அல்லாஹ்வை வணங்குவாரோ அவரிடமிருந்து எதுவும் ஏற்கப்படாது. அவர் வழிகேட்டில் இருக்கின்றார். மறுமையில் அவர் வெற்றி பெற முடியாது.

மேல் கூறப்பட்ட விஷயங்களை விவரிக்கின்ற வசனங்களை இனி நாம் பார்ப்போம் :

அல்லாஹு தஆலா கூறுகின்றான் :

﴿فَإِمَّا يَأْتِيَنَّكُمْ مِنِّي هُدًى فَمَنْ تَبِعَ هُدَايَ
فَلَا خَوْفٌ عَلَيْهِمْ وَلَا هُمْ يَحْزَنُونَ۝﴾

பொருள் : (பின்னர்) நாம் கூறினோம் : என்னிடமிருந்து உங்களுக்கு (என் தூதர்கள் மூலம்) நேர்வழி நிச்சயமாக வரும். (உங்களில்) எவர்கள் என் நேர்வழியைப் பின்பற்றுகிறார்களோ அவர்களுக்கு ஒரு பயமுமில்லை; அவர்கள் துக்கப்படவும் மாட்டார்கள்.
(அல்குர்ஆன் 2 : 38)

﴿قُلْ إِنَّ هُدَى اللّٰهِ هُوَ الْهُدَىٰ وَلَئِنِ اتَّبَعْتَ أَهْوَاءَهُمْ بَعْدَ الَّذِي
جَاءَكَ مِنَ الْعِلْمِ مَا لَكَ مِنَ اللّٰهِ مِنْ وَلِيٍّ وَلَا نَصِيرٍ۝﴾

பொருள் : (நபியே!) அல்லாஹ்வின் நேர்வழி(யாகிய இஸ்லாம்)தான் நேரான வழி. (அதையே பின்பற்றுவேன்) எனக் கூறுவீராக. மேலும், உமக்கு (மெய்யான) ஞானம் வந்த பின்னும் அவர்களுடைய விருப்பங்களை பின்பற்றினால் அல்லாஹ்விடத்தில் (அதற்காக விசாரணை செய்யப்படும் நாளில்) உம்மை காப்பவனும் இல்லை; உமக்கு உதவி செய்பவனும் இல்லை. (அல்குர்ஆன் 2 : 120,)

﴿قُلْ إِنَّ الْهُدَىٰ هُدَى اللّٰهِ﴾

பொருள் : (நபியே!) கூறுவீராக : உண்மையான நேர்வழி அல்லாஹ்வின் நேர்வழிதான். (அல்குர்ஆன் 3 : 73)

﴿فَمَنِ اتَّبَعَ هُدَايَ فَلَا يَضِلُّ وَلَا يَشْقَىٰ۝﴾

பொருள் : எவர் என் நேர்வழியைப் பின்பற்றுகிறாரோ அவர் வழி தவறவும் மாட்டார்; நஷ்டமடையவும் மாட்டார்.

(அல்குர்ஆன் 20 : 123)

﴿ذٰلِكَ الْكِتَابُ لَا رَيْبَ فِيهِ هُدًى لِلْمُتَّقِينَ○﴾

பொருள் : இதுதான் வேதநூல். இதில் சந்தேகமேயில்லை. இறையச்சம் உடையவர்களுக்கு (இது) நேரான வழியைக் காட்டும்.

(அல்குர்ஆன் 2 : 2)

﴿شَهْرُ رَمَضَانَ الَّذِي أُنْزِلَ فِيهِ الْقُرْآنُ هُدًى لِلنَّاسِ
وَبَيِّنَاتٍ مِنَ الْهُدَىٰ وَالْفُرْقَانِ﴾

பொருள் : ரமழான் மாதம் எத்தகைய (மகத்துவமுடைய)து என்றால் அதில்தான் மனிதர்களுக்கு நேர்வழி காட்டும் திருகுர்ஆன் (என்னும் வேதம்) இறக்கப்பட்டது. அது (நன்மை, தீமையைப்) பிரித்தறிவித்து நேரான வழியைத் தெளிவாக்கக்கூடிய வசனங்களை உடையதாகவும் இருக்கிறது. (அல்குர்ஆன் 2 : 185)

﴿يَاأَيُّهَا الَّذِينَ آمَنُوا اتَّقُوا اللّٰهَ حَقَّ تُقَاتِهِ وَلَا تَمُوتُنَّ إِلَّا وَأَنْتُمْ
مُسْلِمُونَ○وَاعْتَصِمُوا بِحَبْلِ اللّٰهِ جَمِيعًا وَلَا تَفَرَّقُوا﴾

பொருள் : நம்பிக்கையாளர்களே! நீங்கள் அல்லாஹ்வை அவனுக்கு பயப்படவேண்டிய முறைப்படி உண்மையாக பயப்படுங்கள். (முற்றிலும் அவனுக்கு வழிப்பட்டவர்களாக) முஸ்லிம்களாகவே தவிர நீங்கள் இறந்துவிட வேண்டாம். மேலும், நீங்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து அல்லாஹ்வுடைய (வேதம் என்னும்) கயிற்றை பலமாகப் பற்றிப் பிடித்துக் கொள்ளுங்கள். (உங்களுக்குள் தர்க்கித்துக் கொண்டு) நீங்கள் பிரிந்திட வேண்டாம். (அல்குர்ஆன் 3 : 102-103)

﴿وَالَّذِينَ يُمَسِّكُونَ بِالْكِتَابِ وَأَقَامُوا الصَّلَاةَ

﴿إِنَّا لَا نُضِيعُ أَجْرَ الْمُصْلِحِينَ۝﴾

பொருள் : எவர்கள் இவ்வேதத்தை(ச் சிறிதும் மாற்றாது) பலமாகப் பற்றிப் பிடித்துக் கொண்டு தொழுகையையும் கடைப்பிடித்து நிறைவேற்றி வருகிறார்களோ அத்தகைய சீர்திருத்தவாதிகளான நல்லவர்களின் கூலியை நிச்சயமாக நாம் வீணாக்குவதில்லை. (அல்குர்ஆன் 7 : 170)

﴿وَهٰذَا كِتَابٌ أَنْزَلْنَاهُ مُبَارَكٌ فَاتَّبِعُوهُ وَاتَّقُوا لَعَلَّكُمْ تُرْحَمُونَ۝﴾

பொருள் : (மனிதர்களே!) இதுவும் வேத நூலாகும். இதை நாமே இறக்கிவைத்தோம். (இது) மிக்க பாக்கியமுடையது. ஆகவே, இதையே நீங்கள் பின்பற்றுங்கள். (அவனுக்குப்) பயந்து (பாவத்திலிருந்து விலகிக்) கொள்ளுங்கள். அதனால் அவனது அருளுக்குள்ளாவீர்கள். (அல்குர்ஆன் 6 : 155)

﴿وَكَيْفَ تَكْفُرُونَ وَأَنْتُمْ تُتْلَىٰ عَلَيْكُمْ آيَاتُ اللّٰهِ وَفِيكُمْ
رَسُولُهُ وَمَنْ يَعْتَصِمْ بِاللّٰهِ فَقَدْ هُدِيَ إِلَىٰ صِرَاطٍ مُسْتَقِيمٍ۝﴾

பொருள்: நீங்கள் எப்படி (அல்லாஹ்வை) நிராகரிப்பவர்களாக ஆகிவிட முடியும்? உங்கள் மத்தியில் அல்லாஹ்வுடைய தூதர் இருக்கிறார். அவனுடைய வசனங்கள் உங்களுக்கு ஓதிக் காண்பிக்கப்படுகின்றன. ஆகவே, எவர் அல்லாஹ்வை (-அவனது வசனங்களையும் தூதரின் வழிகாட்டலையும்) பலமாகப் பற்றிக் கொள்கிறாரோ அவர் நிச்சயமாக நேரான பாதையில் செலுத்தப்பட்டுவிட்டார். (அல்குர்ஆன் 3 : 101)

﴿أُولٰئِكَ الَّذِينَ هَدَى اللّٰهُ فَبِهُدَاهُمُ اقْتَدِهْ﴾

பொருள் : (நபியே!) இவர்கள் அனைவரையும் அல்லாஹ் நேரான வழியில் செலுத்தினான். ஆகவே, அவர்களுடைய நேரான வழியை நீரும் பின்பற்றுவீராக. (அல்குர்ஆன் 6 : 90)

﴿وَلَقَدْ جِئْنَاهُمْ بِكِتَابٍ فَصَّلْنَاهُ عَلَىٰ عِلْمٍ هُدًى وَرَحْمَةً لِقَوْمٍ يُؤْمِنُونَ۝﴾

பொருள் : நிச்சயமாக நாம் அவர்களுக்கு ஒரு வேதத்தைக் கொடுத்திருந்தோம். அதில் ஒவ்வொன்றையும் அறிவோடு விவரித்திருக்கிறோம். (அது) நம்பிக்கை கொண்ட மக்களுக்கு நேரான வழியாகவும் அருளாகவும் இருக்கிறது. (அல்குர்ஆன் 7 : 52)

﴿اَللّٰهُ نَزَّلَ أَحْسَنَ الْحَدِيثِ كِتَابًا مُتَشَابِهًا مَثَانِيَ تَقْشَعِرُّ مِنْهُ جُلُودُ الَّذِينَ يَخْشَوْنَ رَبَّهُمْ ثُمَّ تَلِينُ جُلُودُهُمْ وَقُلُوبُهُمْ إِلَىٰ ذِكْرِ اللّٰهِ ذٰلِكَ هُدَى اللّٰهِ يَهْدِي بِهِ مَنْ يَشَاءُ وَمَنْ يُضْلِلِ اللّٰهُ فَمَا لَهُ مِنْ هَادٍ۝﴾

பொருள் : அல்லாஹ் மிக அழகான விஷயங்களையே (இந்த வேதத்தில்) இறக்கி இருக்கிறான். (இதிலுள்ள வசனங்களுக்கிடையில் முரண்பாடில்லாமல்) ஒன்றை மற்றொன்று ஒத்ததாகவும் (மனதில் பதிவதற்காக ஒரே விஷயத்தை) திரும்பத் திரும்பவும் கூறப்பட்டுள்ளது. எவர்கள் தங்கள் இறைவனுக்குப் பயப்படுகிறார்களோ, (அவர்கள் அதைக் கேட்ட உடன்) அவர்களுடைய தோல்கள் சிலிர்த்து விடுகின்றன. பின்னர், அவர்களுடைய தோல்களும் உள்ளங்களும் அல்லாஹ்வுடைய வேதத்தின் பக்கம் இளகி அதன்படி செயல்படுகின்றன. இதுவே அல்லாஹ்வுடைய நேரான வழியாகும். தான் விரும்பியவர்களை இதன் மூலம் அல்லாஹ் நேரான வழியில் செலுத்துகிறான். எவனை அல்லாஹ் தவறான வழியில் விட்டு விட்டானோ அவனை நேர்வழி செலுத்தக்கூடியவன் ஒருவனுமில்லை. (அல்குர்ஆன் 39 : 23)

﴿قُلْ هُوَ لِلَّذِينَ آمَنُوا هُدًى وَشِفَاءٌ﴾

பொருள் : (நபியே!) கூறுவீராக! இது நம்பிக்கை கொண்டவர்களுக்கு

நேரான வழியாகவும், (உள்ளங்களின் நோய்களை நீக்கக்கூடிய) நல்லதொரு நிவாரணியாகவும் இருக்கிறது. (அல்குர்ஆன் 41 : 44)

﴿هُوَ الَّذِي أَرْسَلَ رَسُولَهُ بِالْهُدَىٰ وَدِينِ الْحَقِّ
لِيُظْهِرَهُ عَلَى الدِّينِ كُلِّهِ وَلَوْ كَرِهَ الْمُشْرِكُونَ○﴾

பொருள் : அவன்தான் தன் தூதரை நேரான வழியைக் கொண்டும், சத்திய மார்க்கத்தைக் கொண்டும் அனுப்பிவைத்தான். இணைவைத்து வணங்குபவர்கள் (அதை) வெறுத்தபோதிலும் (உலகிலுள்ள) எல்லா மார்க்கங்களையும் அந்த சத்திய மார்க்க(மான இஸ்லா)ம் வென்றுவிடும்படி அவன் செய்வான். (அல்குர்ஆன் 9 : 33)

﴿إِنَّ الدِّينَ عِنْدَ اللهِ الْإِسْلَامُ﴾

பொருள் : நிச்சயமாக அல்லாஹ்விடத்தில் (அங்கீகரிக்கப்பட்ட) மார்க்கம் இஸ்லாம்தான். (அல்குர்ஆன் 3 : 19)

﴿وَمَنْ يَبْتَغِ غَيْرَ الْإِسْلَامِ دِينًا فَلَنْ يُقْبَلَ مِنْهُ
وَهُوَ فِي الْآخِرَةِ مِنَ الْخَاسِرِينَ○﴾

பொருள் : இஸ்லாமையன்றி (வேறொரு) மார்க்கத்தை எவரேனும் விரும்பினால் நிச்சயமாக அவரிடமிருந்து (அது) அங்கீகரிக்கவே படமாட்டாது. மறுமையில் அவர் நஷ்டமடைந்தவராகவே இருப்பார். (அல்குர்ஆன் 3 : 85)

**சுருக்கம் :**

இரண்டாவது கவிதையின் இரண்டாம் அடிப்படையில் கூறப்பட்ட விஷயங்கள் :

1. அல்லாஹ் வேதத்தை இறக்கியதுடன் நமக்கு ஒரு நபியையும் அனுப்பியுள்ளான்.

2. அந்த நபி, முஹம்மது ﷺ ஆவார்கள்.

3. குர்ஆனில் கூறப்பட்டதை நமக்கு விரிவாக தெளிவுபடுத்தி தரும்படி நபி ﷺ அவர்களுக்கு அல்லாஹ் கட்டளை கொடுத்தான்.

4. அவர்கள் தங்கள் சொல்லாலும் செயலாலும் மார்க்கத்தை நமக்கு முழுமையாக, எதையும் மறைக்காமல் எடுத்துரைத்து விட்டார்கள்.

5. நபி ﷺ அவர்கள் எதை எல்லாம் கூறினார்களோ அது மார்க்கம் ஆகும். அது குர்ஆனுக்கு விளக்கமாகும். அதை பின்பற்றுவது நம்மீது கடமை ஆகும். அதை விடுவது, மீறுவது, புறக்கணிப்பது பெரும் வழிகேடாகும்.

6. நபியவர்களின் ஸஹீஹான ஹதீஸ்களை ஏற்க மறுப்பவர் உண்மையில் குர்ஆனை மறுப்பவர் ஆவார். ஸஹீஹான ஹதீஸில் குறை சொல்பவர் குர்ஆனிலும் இஸ்லாமிய மார்க்கத்திலும் குறை சொல்பவர் ஆவார்.

7. நபி ﷺ அவர்கள், அல்லாஹ்விற்கு பிரியம் இல்லாத ஒன்றை, அவன் ஏற்காத ஒன்றை நமக்கு இந்த மார்க்கத்தில் கற்றுத் தரவில்லை. நபி ﷺ அவர்கள் எதை எல்லாம் நமக்கு கற்பித்தார்களோ அவை அனைத்தும் அல்லாஹ்வின் அன்பையும் மன்னிப்பையும் சொர்க்கத்தையும் நாம் அடைவதற்குண்டான வழியாகும்.

8. நபி ﷺ அவர்கள் கூறியதை மீறி யார் தனது வணக்க வழிபாட்டை, கொள்கையை அமைத்து மார்க்க விஷயத்தில் நேர்வழி பெற முயற்சிப்பாரோ கண்டிப்பாக அவர் நேர்வழி பெறவே மாட்டார். அவர் வழிதவறி விடுவார். நபி ﷺ அவர்களின் ஸுன்னாவை விட்டு எவ்வளவு தூரம் அவர் செல்வாரோ அந்தளவு அவர் வழிகேட்டில் ஆழமாக சென்று விடுவார்.

மேல் குறிப்பிட்ட விஷயங்களை தெளிவுப்படுத்துகின்ற வசனங்களைப் பார்ப்போம் :

﴿مُحَمَّدٌ رَسُولُ اللَّهِ﴾

பொருள் : முஹம்மது அவர்கள் அல்லாஹ் உடைய ரஸூல் -தூதர் ஆவார்கள். (அல்குர்ஆன் 48 : 29)

﴿وَأَنْزَلْنَا إِلَيْكَ الذِّكْرَ لِتُبَيِّنَ لِلنَّاسِ مَا نُزِّلَ إِلَيْهِمْ
وَلَعَلَّهُمْ يَتَفَكَّرُونَ۝﴾

பொருள் : அப்படியே இந்தக் குர்ஆனையும் (நபியே!) நாம் உமக்கு இறக்கி வைத்தோம். மனிதர்களுக்காக (உம்மீது) இறக்கப்பட்ட இதை நீர் அவர்களுக்குத் தெளிவாக எடுத்துக் காண்பிப்பீராக. (இதன் மூலம்) அவர்கள் கவனித்தறிந்து கொள்வார்கள்.
(அல்குர்ஆன் 16 : 44)

﴿هُوَ الَّذِي بَعَثَ فِي الْأُمِّيِّينَ رَسُولًا مِنْهُمْ يَتْلُو عَلَيْهِمْ
آيَاتِهِ وَيُزَكِّيهِمْ وَيُعَلِّمُهُمُ الْكِتَابَ وَالْحِكْمَةَ وَإِنْ كَانُوا
مِنْ قَبْلُ لَفِي ضَلَالٍ مُبِينٍ۝﴾

பொருள் : கல்வி அறிவில்லாத (அரபு) மக்களில் அவர்களில் உள்ள ஒருவரை அவன் (தன்) தூதராக அனுப்பி வைத்தான். அவர்கள் இதற்கு முன்னர் பகிரங்கமான வழிகேட்டில் இருந்தபோதிலும், அத்தூதர் அவர்களுக்கு அல்லாஹ்வுடைய வசனங்களை ஓதிக்காண்பித்து, அவர்களைப் பரிசுத்தமாக்கி வைத்து, அவர்களுக்கு வேதத்தையும் ஞானத்தையும் கற்றுக் கொடுக்கிறார். (அல்குர்ஆன் 62 : 2)

﴿وَمَا أَرْسَلْنَا مِنْ رَسُولٍ إِلَّا بِلِسَانِ قَوْمِهِ لِيُبَيِّنَ لَهُمْ فَيُضِلُّ اللَّهُ

﴿مَنْ يَشَاءُ وَيَهْدِي مَنْ يَشَاءُ وَهُوَ الْعَزِيزُ الْحَكِيمُ○﴾

பொருள் : (நபியே!) ஒவ்வொரு தூதரும் தன் மக்களுக்கு (அல்லாஹ்வின் மார்க்கத்தை)த் தெளிவாக விவரித்துக் கூறும் பொருட்டு, அந்தந்த மக்களின் மொழியைக் கொண்டே (போதனை புரியுமாறு) நாம் அவர்களை அனுப்பிவைத்தோம். அல்லாஹ், தான் நாடியவர்களை (-அந்தத் தூதர்களின் வழிகாட்டலை ஏற்காதவர்களை) வழிகெடுத்துவிடுகிறான். அவன் விரும்புகிறவர்களை (அந்தத் தூதர்களின் வழிகாட்டலை ஏற்றவர்களை) நேரான வழியில் செலுத்துகிறான். அவன் அனைத்தையும் மிகைத்தவன், ஞானமுடையவன் ஆவான். (அல்குர்ஆன் 14 : 4)

﴿قُلْ إِنْ كُنْتُمْ تُحِبُّونَ اللّٰهَ فَاتَّبِعُونِي يُحْبِبْكُمُ اللّٰهُ وَيَغْفِرْ لَكُمْ
ذُنُوبَكُمْ وَاللّٰهُ غَفُورٌ رَحِيمٌ ○ قُلْ أَطِيعُوا اللّٰهَ وَالرَّسُولَ
فَإِنْ تَوَلَّوْا فَإِنَّ اللّٰهَ لَا يُحِبُّ الْكَافِرِينَ○﴾

பொருள் : (நபியே! மனிதர்களை நோக்கி) கூறுவீராக : நீங்கள் மெய்யாகவே அல்லாஹ்வை நேசிப்பவர்களாக இருந்தால் என்னைப் பின்பற்றுங்கள். உங்களை அல்லாஹ் நேசிப்பான். உங்கள் பாவங்களையும் அவன் மன்னித்து விடுவான். அல்லாஹ் மிக அதிகம் மன்னிப்பவன், பெரும் கருணையாளன் ஆவான். (நபியே! மேலும்,) கூறுவீராக : அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் நீங்கள் கீழ்ப்படியுங்கள். நீங்கள் புறக்கணித்தால் நிச்சயமாக அல்லாஹ் நிராகரிப்பவர்களை நேசிப்பதில்லை". (அல்குர்ஆன் 3 : 31, 32)

﴿قُلْ أَطِيعُوا اللّٰهَ وَأَطِيعُوا الرَّسُولَ فَإِنْ تَوَلَّوْا فَإِنَّمَا عَلَيْهِ
مَا حُمِّلَ وَعَلَيْكُمْ مَا حُمِّلْتُمْ وَإِنْ تُطِيعُوهُ تَهْتَدُوا
وَمَا عَلَى الرَّسُولِ إِلَّا الْبَلَاغُ الْمُبِينُ○﴾

பொருள் : (மேலும்) நீர் கூறுவீராக : அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் (உண்மையாக) கட்டுப்பட்டு நடங்கள். நீங்கள் புறக்கணித்தாலோ (நமக்கொன்றும் நஷ்டமில்லை. ஏனென்றால்) அவர் மீதுள்ள கடமை எல்லாம், அவர் (தன்) மீது சுமத்தப்பட்ட (தூதை உங்களுக்கு எடுத்துரைப்ப)துதான். உங்கள் மீதுள்ள கடமையெல்லாம் உங்கள் மீது சுமத்தப்பட்ட (அவருக்கு கட்டுப்பட்டு நடப்ப)து தான். நீங்கள் அவருக்கு கட்டுப்பட்டு நடந்தால் நீங்கள்தான் நேரான வழியில் சென்று விடுவீர்கள். (நம் தூதைப்) பகிரங்கமாக (தெளிவாக) அறிவிப்பதைத் தவிர, வேறொன்றும் நம் தூதர் மீது கடமையில்லை. (அல்குர்ஆன் 24 : 54)

﴿إِنَّمَا كَانَ قَوْلَ الْمُؤْمِنِينَ إِذَا دُعُوا إِلَى اللَّهِ وَرَسُولِهِ لِيَحْكُمَ بَيْنَهُمْ أَنْ يَقُولُوا سَمِعْنَا وَأَطَعْنَا وَأُولَٰئِكَ هُمُ الْمُفْلِحُونَ ○ وَمَنْ يُطِعِ اللَّهَ وَرَسُولَهُ وَيَخْشَ اللَّهَ وَيَتَّقْهِ فَأُولَٰئِكَ هُمُ الْفَائِزُونَ○﴾

பொருள் : எனினும், மெய்யாகவே நம்பிக்கை கொண்டவர்களோ அவர்களுக்கு இடையில் (ஏற்பட்ட விவகாரத்தைப் பற்றித்) தீர்ப்பு பெற அல்லாஹ்விடமும், அவனுடைய தூதரிடமும் வரும்படி அழைக்கப்பட்டால், அதற்கவர்கள் நாங்கள் செவி சாய்த்தோம்; நாங்கள் கீழ்ப்படிந்தோம் என்று கூறுவதைத் தவிர, வேறு ஒன்றும் கூறுவதில்லை. இவர்கள்தான் முற்றிலும் வெற்றி அடைந்தவர்கள் ஆவர். எவர்கள் அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் கட்டுப்பட்டு, அல்லாஹ்வுக்குப் பயந்து (அவனுக்கு மாறு செய்வதை விட்டு) விலகி அவனை அஞ்சிக் கொண்டார்களோ அவர்கள்தான் நிச்சயமாக பெரும் பாக்கியம் பெற்றவர்கள்.

(அல்குர்ஆன் 24 : 51-52)

﴿فَلَا وَرَبِّكَ لَا يُؤْمِنُونَ حَتَّىٰ يُحَكِّمُوكَ فِيمَا شَجَرَ بَيْنَهُمْ ثُمَّ لَا يَجِدُوا فِي أَنْفُسِهِمْ حَرَجًا مِمَّا قَضَيْتَ وَيُسَلِّمُوا تَسْلِيمًا○﴾

பொருள் : உமது இறைவன் மீது சத்தியமாக! அவர்கள் தங்களுக்குள் ஏற்பட்ட சச்சரவில் உம்மை நீதிபதியாக நியமித்து நீர் செய்யும் தீர்ப்பை தங்கள் மனதில் எத்தகைய அதிருப்தியுமின்றி முற்றிலுமாக ஏற்காதவரை அவர்கள் (உண்மை) நம்பிக்கையாளர்களாக ஆகமாட்டார்கள். (அல்குர்ஆன் 4 : 65)

﴿وَمَا كَانَ لِمُؤْمِنٍ وَلَا مُؤْمِنَةٍ إِذَا قَضَى اللَّهُ وَرَسُولُهُ أَمْرًا
أَنْ يَكُونَ لَهُمُ الْخِيَرَةُ مِنْ أَمْرِهِمْ وَمَنْ يَعْصِ اللَّهَ وَرَسُولَهُ
فَقَدْ ضَلَّ ضَلَالًا مُبِينًا﴾

பொருள் : அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் ஒரு விஷயத்தைப் பற்றிக் கட்டளையிட்ட பின்னர், அவ்விஷயத்தில் (அதை விட்டு) வேறு அபிப்பிராயம் கொள்வதற்கு நம்பிக்கையாளரான எந்த ஆணுக்கும் பெண்ணுக்கும் உரிமையில்லை. (இவ்விஷயத்தில்) அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் எவரேனும் மாறு செய்தால், நிச்சயமாக அவர் பகிரங்கமான வழிகேட்டிலேயே இருக்கிறார்.
(அல்குர்ஆன் 33 : 36)

﴿وَمَا أَرْسَلْنَا مِنْ رَسُولٍ إِلَّا لِيُطَاعَ بِإِذْنِ اللَّهِ﴾

பொருள் : அல்லாஹ்வுடைய அனுமதிகொண்டு (மக்கள்) அவருக்கு கீழ்ப்படிந்து நடக்க வேண்டும் என்பதற்காகவே தவிர வேறு எதற்காகவும் நாம் எந்த தூதரையும் அனுப்பவில்லை.
(அல்குர்ஆன் 4 : 64)

﴿يَاأَيُّهَا الَّذِينَ آمَنُوا أَطِيعُوا اللَّهَ وَأَطِيعُوا الرَّسُولَ وَأُولِي الْأَمْرِ
مِنْكُمْ فَإِنْ تَنَازَعْتُمْ فِي شَيْءٍ فَرُدُّوهُ إِلَى اللَّهِ وَالرَّسُولِ إِنْ كُنْتُمْ
تُؤْمِنُونَ بِاللَّهِ وَالْيَوْمِ الْآخِرِ ذَٰلِكَ خَيْرٌ وَأَحْسَنُ تَأْوِيلًا﴾

பொருள் : நம்பிக்கையாளர்களே! நீங்கள் அல்லாஹ்வுக்கு கட்டுப்பட்டு நடங்கள். (அவ்வாறே அல்லாஹ்வுடைய) தூதருக்கும், உங்கள் அதிபர்களுக்கும் கட்டுப்பட்டு நடங்கள். (நம்பிக்கையாளர்களே!) உங்களுக்குள் ஒரு விஷயத்தில் பிணக்கு ஏற்பட்டால் மெய்யாகவே நீங்கள் அல்லாஹ்வையும், இறுதிநாளையும் நம்பிக்கை கொண்டவர்களாயிருந்தால் அதை அல்லாஹ்விடமும் (அவனுடைய) தூதரிடமும் ஒப்படைத்துவிடுங்கள். (அவர்களுடைய தீர்ப்பை நீங்கள் மனதிருப்தியுடன் ஒப்புக் கொள்ளுங்கள்.) இதுதான் உங்களுக்கு நன்மையும், அழகான முடிவும் ஆகும்.

(அல்குர்ஆன் 4 : 59)

﴿فَلْيَحْذَرِ الَّذِينَ يُخَالِفُونَ عَنْ أَمْرِهِ أَنْ تُصِيبَهُمْ فِتْنَةٌ
أَوْ يُصِيبَهُمْ عَذَابٌ أَلِيمٌ○﴾

பொருள் : ஆகவே, எவர்கள் (தூதராகிய) அவருடைய கட்டளைக்கு மாறுசெய்கிறார்களோ அவர்கள் தங்களுக்கு ஒரு ஆபத்தோ அல்லது துன்புறுத்தும் வேதனையோ வந்தடையும் என்பதைப் பற்றிப் பயந்து கொண்டிருக்கவும். (அல்குர்ஆன் 24 : 63)

﴿وَالنَّجْمِ إِذَا هَوَىٰ ○ مَا ضَلَّ صَاحِبُكُمْ وَمَا غَوَىٰ ○
وَمَا يَنْطِقُ عَنِ الْهَوَىٰ ○ إِنْ هُوَ إِلَّا وَحْيٌ يُوحَىٰ ○﴾

பொருள் : விழுந்து மறையும் நட்சத்திரத்தின் மீது சத்தியமாக! (நம் தூதராகிய) உங்கள் தோழர் வழிதவறி விடவுமில்லை. இன்னும், தவறான பாதையில் செல்லவுமில்லை. அவர் தன் விருப்பப்படி எதையும் கூறுவதில்லை. இது அவருக்கு வஹ்யு மூலம் அறிவிக்கப்பட்டதே தவிர (வேறு) இல்லை. (அல்குர்ஆன் 53 : 1-4.)

﴿كِتَابٌ أُنْزِلَ إِلَيْكَ فَلَا يَكُنْ فِي صَدْرِكَ حَرَجٌ مِنْهُ لِتُنْذِرَ بِهِ
وَذِكْرَىٰ لِلْمُؤْمِنِينَ ○ اتَّبِعُوا مَا أُنْزِلَ إِلَيْكُمْ مِنْ رَبِّكُمْ

﴿وَلَا تَتَّبِعُوا مِنْ دُونِهِ أَوْلِيَاءَ قَلِيلًا مَا تَذَكَّرُونَ ۝﴾

பொருள்: (நபியே!) இவ்வேதம் உம் மீது இறக்கப்பட்டுள்ளது. இதைப்பற்றி உமது உள்ளத்தில் ஒரு தயக்கமும் வேண்டாம். இதைக் கொண்டு நீர் (மனிதர்களுக்கு) அச்சமூட்டி எச்சரிக்கை செய்வீராக. நம்பிக்கை கொண்டவர்களுக்கு (இது) ஒரு நல்லுபதேசமாகும். (மனிதர்களே!) உங்களுக்காக உங்கள் இறைவனிடமிருந்து இறக்கப்பட்டதையே பின்பற்றுங்கள். அவனையன்றி (மற்றெவரையும் உங்களுக்குப்) பொறுப்பாளர்(களாக ஆக்கி, அவர்)களை நீங்கள் பின்பற்றாதீர்கள். (எனினும், இதைக் கொண்டு) நல்லுணர்ச்சி பெறுபவர்கள் உங்களில் மிகக் குறைவுதான். (அல்குர்ஆன் 7 : 2, 3)

﴿أَمْ لَهُمْ شُرَكَاءُ شَرَعُوا لَهُمْ مِنَ الدِّينِ مَا لَمْ يَأْذَنْ بِهِ اللَّهُ﴾

பொருள் : அல்லாஹ் அனுமதிக்காத எதையும் அவர்களுக்கு மார்க்கமாக்கி வைக்கக்கூடிய தெய்வங்களும் அவர்களுக்கு இருக்கின்றனவா? (அல்குர்ஆன் 42 : 21)

﴿وَالسَّابِقُونَ الْأَوَّلُونَ مِنَ الْمُهَاجِرِينَ وَالْأَنْصَارِ وَالَّذِينَ اتَّبَعُوهُمْ بِإِحْسَانٍ رَضِيَ اللَّهُ عَنْهُمْ وَرَضُوا عَنْهُ وَأَعَدَّ لَهُمْ جَنَّاتٍ تَجْرِي تَحْتَهَا الْأَنْهَارُ خَالِدِينَ فِيهَا أَبَدًا ذَٰلِكَ الْفَوْزُ الْعَظِيمُ ۝﴾

பொருள் : முஹாஜிர்களிலும் அன்ஸார்களிலும் எவர்கள் (இஸ்லாமில்) முதலாவதாக முந்திக் (கொண்டு நம்பிக்கை) கொண்டார்களோ அவர்களையும், நற்செயல்களில் (மெய்யாகவே) இவர்களைப் பின்பற்றியவர்களையும் பற்றி அல்லாஹ் திருப்தியடைகிறான். இவர்களும் அல்லாஹ்வைப் பற்றி திருப்தியடைகின்றனர். மேலும், தொடர்ந்து நீரருவிகள் ஓடிக்கொண்டிருக்கும் சொர்க்கங்களை இவர்களுக்கென தயார்படுத்தி வைத்திருக்கிறான். அவற்றிலேயே

அவர்கள் என்றென்றும் தங்கிவிடுவார்கள். இதுதான் மகத்தான வெற்றியாகும். (அல்குர்ஆன் 9 : 100)

﴿آمَنَ الرَّسُولُ بِمَا أُنْزِلَ إِلَيْهِ مِنْ رَبِّهِ وَالْمُؤْمِنُونَ كُلٌّ آمَنَ بِاللّٰهِ وَمَلَائِكَتِهِ وَكُتُبِهِ وَرُسُلِهِ لَا نُفَرِّقُ بَيْنَ أَحَدٍ مِنْ رُسُلِهِ وَقَالُوا سَمِعْنَا وَأَطَعْنَا غُفْرَانَكَ رَبَّنَا وَإِلَيْكَ الْمَصِيرُ﴾

பொருள் : (மனிதர்களே! நம்) தூதர், தம் இறைவனிடமிருந்து தமக்கு அருளப்பட்ட (வேதத்)தை மெய்யாகவே நம்பிக்கை கொள்கிறார். (அவ்வாறே மற்ற) நம்பிக்கையாளர்களும் (நம்பிக்கை கொள்கின்றனர். இவர்கள்) அனைவரும் அல்லாஹ்வையும், அவனுடைய வானவர்களையும், அவனுடைய வேதங்களையும், அவனுடைய தூதர்களையும் நம்பிக்கை கொள்கின்றனர். தவிர, அவனுடைய தூதர்களில் எவரையும் (தூதர் அல்ல என்று) நாங்கள் பிரித்து (நிராகரித்து)விட மாட்டோம் என்றும், (இறைவனே! உன் வேத வசனங்களை) நாங்கள் செவியுற்றோம். (உன் கட்டளைக்கு) நாங்கள் கீழ்ப்படிந்தோம். எங்கள் இறைவனே! நாங்கள் உனது மன்னிப்பைக் கோருகிறோம். உன்னிடம்தான் நாங்கள் சேர வேண்டியதிருக்கிறது என்றும் கூறுகிறார்கள். (அல்குர்ஆன் 2 : 285)

﴿وَمَنْ يُشَاقِقِ الرَّسُولَ مِنْ بَعْدِ مَا تَبَيَّنَ لَهُ الْهُدَىٰ وَيَتَّبِعْ غَيْرَ سَبِيلِ الْمُؤْمِنِينَ نُوَلِّهِ مَا تَوَلَّىٰ وَنُصْلِهِ جَهَنَّمَ وَسَاءَتْ مَصِيرًا﴾

பொருள் : எவர் நேரான வழி இன்னதென்று தனக்குத் தெளிவானதன் பின்னரும் (அல்லாஹ்வுடைய) இத்தூதரை விட்டுப் பிரிந்து நம்பிக்கையாளர்களின் வழி அல்லாததில் செல்கிறாரோ அவரை நாம் அவர் செல்லும் (தவறான) வழியிலேயே செல்லவிட்டு (பின்னர்) அவரை நரகத்தில் சேர்த்து விடுவோம். அது செல்லும் இடங்களில் மிகக் கெட்டது. (அல்குர்ஆன் 4 : 115)

இறுதியாக கூறப்பட்ட மூன்று வசனங்கள் உணர்த்துவது என்னவென்றால்,

அ. மார்க்க விஷயத்தில் நபித்தோழர்களின் விளக்கத்தையும் அவர்களின் ஏகோபித்த கருத்தையும் நாம் ஏற்க வேண்டும்.

ஆ. அது, குர்ஆன் மற்றும் ஸுன்னாவை மட்டும் பின்பற்றுவதற்கு முரணாக ஆகாது.

இ. மாறாக, ஸஹாபாக்களை பின்பற்றுவது உண்மையில் குர்ஆனையும் ஸுன்னாவையும் பின்பற்றுவதாகும்.

ஈ. ஸஹாபாக்களையும் அவர்களின் விளக்கங்களையும் புறக்கணிப்பவர் குர்ஆனுக்கும் ஹதீஸுக்கும் சுய விளக்கம் கொடுத்து சமுதாயத்தை குழப்ப போகிறார். இன்னும், வழிகெடுக்கப் போகிறார் என்று அர்த்தமாகும்.

உ. ஹதீஸ்களில் தனக்கு பிடித்ததை ஏற்றுக் கொண்டு, தனக்கு பிடிக்காத ஸஹீஹான ஹதீஸ்களை அவை ஹதீஸ் இல்லை என்று மறுக்கப் போகிறார் என்று அர்த்தம். மேலும், அவருடைய குழப்பங்களும் வழிகேடுகளும் ஓர் எல்லையில் நின்று விடாது. மாறாக, தொடர்ந்து கொண்டேதான் இருக்கும்.

முதலாவது மற்றும் இரண்டாவது கவிதைகள் இன்னும் அதன் விளக்க உரையில் கூறப்பட்ட வழிகாட்டல்களை நாம் ஆழ்ந்து சிந்திக்கும்போது வழிகேடுகள் என்ன என்பதை புரிந்து கொள்ளலாம். அவற்றை பின்வரும் வரிகளில் சுருக்கிக் கூறுகிறோம்.

**வழிகேடுகள் :**

1. குர்ஆனை அல்லாஹ்வின் வேதம் என்று நம்ப மறுப்பது.
2. குர்ஆனை வெறும் ஓதுவதற்கு மட்டும் வைத்துக் கொண்டு அதை சிந்திக்காமல், அதன்படி அமல் செய்யாமல் இருப்பது.
3. குர்ஆனுக்கு சுய விளக்கம் கொடுப்பது.

4. குர்ஆனை கற்காமல், அதை மறந்து, அல்லது புறக்கணித்து வாழ்வது.

5. குர்ஆனில் நேர்வழியை தேடாமல், பிற சமய நூல்கள், அல்லது தத்துவவாதிகளின் நூல்களில் நேர்வழியை தேடுவது.

6. நேர்வழி இன்னதென்று தெரிந்த பின்னரும் அதை ஏற்காமல் தனது மன விருப்பங்களை அல்லது வழிகெட்ட முன்னோரைப் பின்பற்றுவது.

7. மார்க்கத்தில் அல்லாஹ்வும் அவனது தூதரும் கற்றுக் கொடுக்காத அமல்களை செய்வது, அவர்கள் போதிக்காத விஷயங்களை நம்பிக்கை கொள்வது.

8. குர்ஆன், ஹதீஸுக்கு முன்னுரிமை கொடுக்காமல் தங்கள் முன்னோர் கூறிய கூற்றுகளுக்கு முன்னுரிமை கொடுப்பது.

9. ஹதீஸை விட்டுவிட்டு மனிதர்களின் கருத்தை பின்பற்றுவது.

10. நபி ﷺ அவர்களின் ஹதீஸ்களை மன இச்சையின் படி அணுகுவது.

11. ஹதீஸ்கள் விஷயத்தில் நேர்வழி பெற்ற முன்னோர் பின்பற்றிய வழிமுறைகளுக்கு மாற்றமான வழிமுறைகளை பின்பற்றுவது.

12. ஹதீஸ்களை அலட்சியம் செய்வது.

13. ஹதீஸ்களை புறக்கணிப்பது.

14. ஹதீஸ்கள் மார்க்கத்தில் தேவை இல்லை, குர்ஆன் மட்டும் போதும் என்று கூறுவது.

15. ஹதீஸ்கள் குர்ஆனுக்கு முரண்படும் என்று கூறுவது.

16. ஹதீஸ்கள் பிற்காலத்தில்தான் தொகுக்கப்பட்டவை. அவை நபி ﷺ அவர்களின் காலத்தில் எழுதப்படவில்லை. ஆகவே, அவற்றை நம்ப முடியாது என்று கூறுவது.

17. குர்ஆனுக்குத்தான் முக்கியத்துவம் கொடுப்போம். ஹதீஸ் என்பது கலப்படமானது. ஆகவே, ஹதீஸில் கூறப்பட்ட அனைத்தையும் ஏற்க வேண்டும் என்று அவசியமில்லை என்று கூறுவது.

18. ஹதீஸ்களுக்கு சுய விளக்கம் கொடுப்பது.

19. பொதுவாக மார்க்கத்தில், அல்லது கொள்கை விஷயத்தில் ஒரு ஸஹாபி மட்டும் அறிவிக்கின்ற (கபருல் ஆஹாத் **-خبر الآحاد**) ஹதீஸ்களை ஏற்க மாட்டோம் என்று கூறுவது.

20. நபி ﷺ அவர்கள் கூறினார்கள் என்று நம்பத்தகுந்த அறிவிப்பாளர்கள் அறிவிக்கின்ற ஹதீஸ்களில் பொய்யான காரணங்களை கூறி, அவை ஹதீஸ்களாக இருக்க வாய்ப்பில்லை என்று கூறுவது.

21. குர்ஆன், ஸுன்னாவின் கல்விக்கு முக்கியத்துவம் கொடுக்காமல் உலக ஆதாய கல்விகளுக்கு மட்டும் முக்கியத்துவம் கொடுப்பது.

22. மறுமையைப் பற்றி சிந்திக்காமல் இருப்பது.

23. மறுமை வெற்றியில் கவனம் செலுத்தாமல் இருப்பது. மறுமை பயம் இல்லாமல் இருப்பது.

24. அமல் செய்வதில் கவனமாக இருந்துவிட்டு, அந்த அமல்கள் சரியா, தவறா என்று ஆதாரங்கள் மூலமாக அறியாமல் இருப்பது.

25. பித்அத்ஆன அமல்களை செய்துகொண்டு மறுமையின் வெற்றியையும் இறையச்சத்தையும் ஆதரவு வைப்பது.

இன்னும் அநேக வழிகேடுகள் இருக்கின்றன. அல்லாஹ் நம்மை பாதுகாப்பானாக! ஆமீன். இத்தனை வழிகேடுகளுக்கும் மறுப்பு முன்னர் கூறப்பட்ட இரு கவிதைகளில் உள்ளன. அவற்றுக்கு ஆதாரமாக பல குர்ஆன் வசனங்களும் ஸஹீஹான நபிமொழிகளும் உள்ளன. நூலின் சுருக்கம் கருதி சில வசனங்களை மட்டும் கூறி போதுமாக்கிக் கொண்டோம். நல்ல புத்தி உள்ளவர்களுக்கு சில

உபதேசங்களே போதுமானவை ஆகும். பிடிவாதம் பிடிப்பவர்கள் எத்தனை ஆதாரங்களை நீங்கள் கொடுத்தாலும் அவர்கள் அவற்றை மறுக்கத்தான் செய்வார்கள்.

முந்திய இரண்டு கவிதை வரிகளும் இந்த கவிதை தொகுப்புக்கு ஒரு முன்னுரை ஆகும். அதன் பிறகு இனி வருகின்ற கவிதைகளிலும் அவற்றின் விளக்கங்களிலும் அஹ்லுஸ் ஸுன்னா வல்ஜமாஆ உடைய முக்கியமான கொள்கைகளை படிப்போம்! இன் ஷா அல்லாஹ்.

---------------------

وَقُلْ غَيْرُ مَخْلُوقٍ كَلَامُ مَلِيكِنَا
بِذٰلِكَ دَانَ الْأَتْقِيَاءُ وَأَفْصَحُوا

**பொருள் :**

நமது பேரரசன் (-அல்லாஹ்) உடைய பேச்சு படைக்கப்பட்டதல்ல. இப்படித்தான் இறையச்சமிக்கவர்கள் நம்பினார்கள்; தெளிவு படுத்தினார்கள்.

**கருத்து :**

குர்ஆன் அல்லாஹ் உடைய கண்ணியமான பேச்சு என்றும் அது அவனது தன்மை என்றும் அது படைக்கப்பட்டதல்ல என்றும் நம்பிக்கை கொள்ள வேண்டும். இதுதான் தக்வா உள்ள நல்லோரின் நம்பிக்கை ஆகும். அவர்கள் நமக்கு இவ்வாறுதான் தெளிவாக கற்றுக் கொடுத்துள்ளார்கள்.

**விளக்கம் :**

**مليك** மலீக் (-பேரரசன்) அல்லாஹ் ஆவான். அவன்தான் உண்மையான அரசன். அவன்தான் பிரபஞ்சம் அனைத்தையும் படைத்தான். அவனே அதை பரிபாலிக்கின்றான், இயக்கி வருகின்றான். அவனுடைய அழகிய பண்புகளில் ஒன்று அவன் அவனுக்கு தகுதியான விதத்தில் பேசுவான். அவனது பேச்சு படைப்புகளின் பேச்சுக்கு ஒப்பானதல்ல. அல்லாஹ் அவனது அடியார்களில் அவன் நாடியவர்களிடம் பேசுவான்.

அல்லாஹ் நபி முஹம்மது ﷺ அவர்களுக்கு இறக்கிய குர்ஆன் அவனது பேச்சாகும். அதை ஜிப்ரீல் عليه السلام செவியுற்றார். அவர், நமது நபி ﷺ அவர்களுடைய உள்ளத்தில் அதை இறக்கி வைத்தார்.

மேலும், நபி ﷺ அவர்களுக்கு அதை ஓதிக் காண்பித்தார்.

அந்த குர்ஆன் அல்லாஹ்வின் தன்மையாகிய அவனது கலாம் -பேச்சாகும். அவனுடைய தன்மைகள் எதுவும் படைப்புகளாக ஆகாது. அவ்வாறே குர்ஆன் படைக்கப்பட்டதல்ல. குர்ஆனை படைக்கப்பட்ட ஒன்று என்று கூறுவது வழிகேடாகும்.

நேர்வழி பெற்ற ஸஹாபாக்கள், தாபியீன்கள், இமாம்கள் உண்மையான, உறுதியான தக்வாவை -இறையச்சத்தை உடையவர்கள் ஆவார்கள். அவர்கள் நமக்கு இப்படித்தான் தெளிவாக கற்றுக் கொடுத்தார்கள். அவர்கள், குர்ஆன் அல்லாஹ் உடைய பேச்சாகும்; அது படைக்கப்பட்டதல்ல என்றுதான் நம்பிக்கை கொண்டு இருந்தார்கள். ஆகவே, நாமும் அப்படித்தான் நம்பிக்கை கொள்ள வேண்டும். இந்த பாடத்தில் இதை தொடர்ந்து இன்னும் இரு கவிதைகள் வருகின்றன. அவற்றை விளக்கும்போது அதிகமான விளக்கங்களை இன் ஷா அல்லாஹ் பார்ப்போம்.

**சுருக்கம் :**

குர்ஆன் அல்லாஹ்வுடைய பேச்சாகும். அது அவனது தன்மையாகும். அது படைக்கப்பட்டதல்ல.

---------------------

وَلَا تَكُ فِي الْقُرْءَانِ بِالْوَقْفِ قَائِلًا
كَمَا قَالَ أَتْبَاعٌ لِـجَهْمٍ وَأَسْجَحُوا

**பொருள் :**

குர்ஆன் விஷயத்தில் மவுனம் காப்போம் என்று கூறாதே! இப்படித்தான் ஜஹ்மை பின்பற்றியோர் சிலர் கூறினார்கள்; சூசகமாக பேசினார்கள்.

**கருத்து :**

வழிகெட்ட கொள்கை உடைய ஜஹ்ம் என்பவரை பின்பற்றுகின்ற ஒரு கூட்டம் நாங்கள் குர்ஆன் படைக்கப்பட்டது என்றும் கூற மாட்டோம்; குர்ஆன் படைக்கப்படாதது என்றும் கூற மாட்டோம் என்று கூறுகின்றனர். இது அஹ்லுஸ் ஸுன்னாவின் கொள்கை அல்ல. இவ்வாறு நாம் கூறக் கூடாது.

**விளக்கம் :**

குர்ஆன் அல்லாஹ்வின் பேச்சாகும்; அது படைக்கப்பட்டதல்ல என்பதுதான் அஹ்லுஸ் ஸுன்னாவின் உறுதியான, தெளிவான நிலைப்பாடாகும். அதைத்தவிர அனைத்துவிதமான கூற்றுகளும் கொள்கைகளும் வழிகேடாகும்.

ஜஹ்மிய்யா கூட்டத்தினர் குர்ஆன் படைக்கப்பட்டது என்று கூறுகின்றனர். இவர்களைப் போன்று இன்னும் பல கூட்டங்களும் இதே கூற்றை அல்லது இதற்கு நெருக்கமான கூற்றுகளை கூறுகின்றனர்.

இன்னும் சிலர் மறைமுகமாக உள்ளுக்குள் ஜஹ்மிய்யா கொள்கையை பின்பற்றிக் கொண்டு, நாங்கள் குர்ஆன் படைக்கப்பட்டது என்றும்

கூறமாட்டோம், படைக்கப்பட்டதல்ல என்றும் கூற மாட்டோம் என்ற புதிய கொள்கையை கொண்டு வந்தனர்.

உண்மையில் இவர்கள் ஜஹ்மிய்யா கொள்கையை பின்பற்றியவர்கள்தான். இவர்களின் உள்ளங்களில் குர்ஆன் அல்லாஹ் உடைய பேச்சு என்பதில் சந்தேகம் இருப்பதால்தான் இவ்வாறு கூறுகின்றனர்.

இன்னும், ஜஹ்ம் உடைய கொள்கையை இவர்கள் தங்கள் மனதில் சரிகண்ட காரணத்தினால் குர்ஆன் படைக்கப்பட்டதல்ல என்று வெளிப்படையாக கூற மறுக்கின்றனர். தங்களை அஹ்லுஸ் ஸுன்னா என்று வெளிப்படையில் பொய்யாக கூறுகின்றனர்.

இவர்கள் உண்மையில் அஹ்லுஸ் ஸுன்னாவை சேர்ந்தவர்களாக இருந்திருந்தால் இவர்கள் குர்ஆன் படைக்கப்பட்டதல்ல என்று உறுதியாகவும் தெளிவாகவும் கூறி இருப்பார்கள். தங்கள் கொள்கையும் நிலைப்பாடும் இதுதான் என்று உறுதிப்படுத்தி இருப்பார்கள்.

ஆகவே, குர்ஆன் படைக்கப்பட்டதல்ல என்றும் நாங்கள் கூறமாட்டோம், அல்லது படைக்கப்பட்டது என்றும் கூறமாட்டோம், மாறாக, மவுனம் காப்போம் என்று யார் கூறுவாரோ அவர் அஹ்லுஸ் ஸுன்னாவை சேர்ந்தவர் அல்ல. மாறாக, அவர் ஜஹ்மை பின்பற்றியவர் ஆவார். அவர் ஜஹ்முடைய கருத்தைத்தான் இந்த வார்த்தையின் மூலமாக சூசகமாக கூறுகின்றார். இன்னும் மக்களை குழப்புகின்றார்.

**சுருக்கம்** : சத்தியத்தை உறுதியாக நம்பிக்கைக் கொண்டு, அதை தெளிவாக எடுத்துக் கூற வேண்டும். ஆகவே, நடுநிலை என்ற பெயரில் அசத்தியவாதிகளுக்கு துணைப் போவது, அவர்களின் கூற்றை மறைமுகமாக ஆதரிப்பது கூடாது. ஆகவே, நாங்கள், குர்ஆன் படைக்கப்பட்டதல்ல என்றும் கூற மாட்டோம் அல்லது படைக்கப்பட்டது என்றும் கூற மாட்டோம் என்று கூறுபவர்கள் வழிகேடர்கள். அவர்கள் அஹ்லுஸ் ஸுன்னா உடைய நேரிய பாதையிலிருந்து விலகியவர்கள் ஆவார்கள்.

وَلَاتَقُلِ الْقُرْءَانُ خَلْقٌ قَرَأْتُهُ
فَإِنَّ كَلَامَ اللهِ بِاللَّفْظِ يُوْضَحُ

**பொருள் :**

நான் ஓதிய குர்ஆன் படைக்கப்பட்டது என்றும் கூறாதே! நிச்சயமாக அல்லாஹ் உடைய பேச்சு உச்சரிப்பைக் கொண்டுதான் வெளிப்படுகிறது.

**கருத்து :**

அல்லாஹ் உடைய பேச்சாகிய குர்ஆன் படைக்கப்படாதது. ஆனால், நான் மொழிகின்ற குர்ஆன் படைக்கப்பட்டது என்று கூறுவதும் வழிகேடாகும். பேச்சு என்பது அதை மொழியும் போதுதான் வெளிப்படுகின்றது. மனதில் உள்ளது பேச்சாக ஆகாது.

**விளக்கம் :**

இன்னும் சிலர் வேறு ஒரு புதிய கூற்றை உருவாக்கினர். உண்மையில் இவர்களும் ஜஹ்முடைய கூற்றால் தாக்கம் அடைந்தவர்கள்தான். குர்ஆன் படைக்கப்பட்டது என்று நேரடியாக கூறாமல், ஒருவர் தனது வாயால் ஓதுகின்ற குர்ஆன் படைக்கப்பட்டது என்று இவர்கள் கூறுகின்றனர். அதாவது நாம் உச்சரித்து வெளிவரக்கூடிய குர்ஆன் படைக்கப்பட்டது என்று கூறுகின்றனர்.

இதற்கு மறுப்பாக இமாம் அஹ்மது ﵀ கூறுகிறார்கள்: ஒருவர், தான் ஓதுகின்ற குர்ஆன் படைக்கப்பட்டது என்று கூறினால் அவர் ஜஹ்முடைய கொள்கையை பின்பற்றுகின்றார். இன்னும், யார் ஒருவர் தான் ஓதக்கூடிய குர்ஆன் படைக்கப்பட்டதல்ல என்று கூறினால் அவர் பித்அத்வாதி ஆவார்.

ஆகவே, குர்ஆன் அல்லாஹ் உடைய பேச்சு, அதை படைக்கப்பட்டதல்ல என்று மட்டுமே கூற வேண்டும். இவ்வாறுதான் நமது ஸலஃப் -சான்றோர் கூறினார்கள்.

குரல் நமது குரலாக இருந்தாலும் நாம் ஓதுவது அல்லாஹ்வின் பேச்சாகும். ஆகவே, அதை படைக்கப்பட்டது என்று கூறுவது உண்மையில் அல்லாஹ்வின் பேச்சை படைக்கப்பட்டது என்று கூறுவதாகும்.

அல்லாஹ் உடைய பேச்சாகிய குர்ஆனை ஒருவர் ஓதும்போதுதான் அது வெளிப்படும். ஓதுபவர் ஓதும்போது அவர் அல்லாஹ்வின் பேச்சைத்தான் ஓதுகிறார். குரல் அவருடையதாக இருந்தாலும் அவர் ஓதுவது அல்லாஹ்வின் கலாமை ஆகும். எனவே, அதை படைக்கப்பட்டது என்று கூறும்போது அல்லாஹ்வின் பேச்சை படைக்கப்பட்டது என்று கூறியதாகத்தான் ஆகும். அல்லாஹ் பாதுகாப்பானாக! ஆமீன்.

**சுருக்கம் :** ஓதுபவர் தான் அல்லாஹ் உடைய கலாமைத்தான் ஓதுகிறேன் என்று கூற வேண்டும். அதை செவிகொடுத்து கேட்பவரும் தான் அல்லாஹ் உடைய கலாமைத்தான் கேட்கிறேன் என்று கூற வேண்டும். இதற்கு மாறாக, ஒருவர் குர்ஆனை ஓதும்போது அது அல்லாஹ் உடைய கலாம் அல்ல. அல்லாஹ் உடைய கலாம் அல்லாஹ்விடம் இருக்கிறது என்று கூறுவது வழிகேடாகும்.

மேற்கூறப்பட்ட 3, 4, 5, ஆகிய கவிதை வரிகளிலும் மற்றும் அதன் விளக்கத்திலும் வந்துள்ள நம்பிக்கைகள் பின்வருகின்ற வசனங்கள் மற்றும் ஹதீஸ்களிலிருந்து எடுக்கப்பட்டவையாகும்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான் :

﴿وَإِنْ أَحَدٌ مِنَ الْمُشْرِكِينَ اسْتَجَارَكَ فَأَجِرْهُ حَتَّىٰ يَسْمَعَ كَلَامَ اللَّهِ ثُمَّ أَبْلِغْهُ مَأْمَنَهُ ذَٰلِكَ بِأَنَّهُمْ قَوْمٌ لَا يَعْلَمُونَ○﴾

பொருள் : (நபியே!) இணைவைத்து வணங்குபவர்களில் எவனும்

உம்மிடம் பாதுகாப்பைக் கோரினால், அல்லாஹ்வுடைய பேச்சை அவன் செவியுறும்வரை அவனுக்கு பாதுகாப்பு அளிப்பீராக. (அவன் அதை செவியுற்றும் நம்பிக்கை கொள்ளாவிட்டால்) அவனை அவனுக்கு பாதுகாப்புள்ள (வேறு) இடத்திற்கு அனுப்பிவிடுவீராக! ஏனென்றால், நிச்சயமாக அவர்கள் அறிவில்லாத மக்கள் ஆவர்.

(அல்குர்ஆன் 9 : 6)

﴿وَإِنَّهُ لَتَنْزِيلُ رَبِّ الْعَالَمِينَ ○ نَزَلَ بِهِ الرُّوحُ الْأَمِينُ ○
عَلَىٰ قَلْبِكَ لِتَكُونَ مِنَ الْمُنْذِرِينَ○﴾

பொருள் : (நபியே!) நிச்சயமாக (குர்ஆன் ஷரீஃப் என்னும்) இது அகிலத்தாரின் இறைவனால்தான் அருளப்பட்டது. (இறை கட்டளைப் பிரகாரம்) ரூஹுல் அமீன் (நம்பிக்கைக்குரிய உயிர் என்னும் ஜிப்ரயீல்) இதை உமது உள்ளத்தில் இறக்கிவைத்தார். (மனிதர்களுக்கு) நீர் அச்சமூட்டி எச்சரிக்கை செய்வதற்காக.

(அல்குர்ஆன் 26 : 192 - 194)

அல்லாஹு தஆலா கூறுகின்றான் :

﴿وَكَلَّمَ اللَّهُ مُوسَىٰ تَكْلِيمًا○﴾

பொருள் : மூஸாவு(க்கு வஹ்யு அறிவித்தது)டன் அல்லாஹ் பேசியும் இருக்கிறான். (அல்குர்ஆன் 4 : 164)

அல்லாஹு தஆலா கூறுகின்றான் :

﴿يَا مُوسَىٰ إِنِّي اصْطَفَيْتُكَ عَلَى النَّاسِ بِرِسَالَاتِي وَبِكَلَامِي﴾

பொருள் : மூஸாவே! என் தூது செய்திகளுக்கும், என் பேச்சுக்கும் மக்களைவிட நிச்சயமாக நான் உம்மைத் தேர்ந்தெடுத்தேன்.

(அல்குர்ஆன் 7 : 144)

அல்லாஹு தஆலா கூறுகின்றான் :

﴿مِنْهُمْ مَنْ كَلَّمَ اللّٰهُ﴾

பொருள் : அவர்களில் சிலருடன் அல்லாஹ் (நேரடியாகப்) பேசியிருக்கிறான். (அல்குர்ஆன் 2 : 253)

அல்லாஹு தஆலா கூறுகின்றான் :

﴿وَمَا كَانَ لِبَشَرٍ أَنْ يُكَلِّمَهُ اللّٰهُ إِلَّا وَحْيًا أَوْ مِنْ وَرَاءِ حِجَابٍ﴾

பொருள் : அல்லாஹ் (நேருக்குநேர்) பேசுவதற்குரிய தகுதி மனிதரில் ஒருவருக்குமில்லை. எனினும், வஹ்யு மூலமாகவோ அல்லது திரைக்கு அப்பால் இருந்தே தவிர. (அல்குர்ஆன் 42 : 51)

அல்லாஹு தஆலா கூறுகின்றான் :

﴿فَلَمَّا أَتَاهَا نُودِيَ يَا مُوسَىٰ ○ إِنِّي أَنَا رَبُّكَ﴾

பொருள் : அவர் அதனிடம் வரவே (அவரை நோக்கி) “மூஸாவே!” என்று சப்தமிட்டழைத்து (நாம் கூறியதாவது) : நிச்சயமாக நான்தான் உமது இறைவன். (அல்குர்ஆன் 20 : 11, 12)

அல்லாஹு தஆலா கூறுகின்றான் :

﴿إِنَّنِي أَنَا اللّٰهُ لَا إِلٰهَ إِلَّا أَنَا فَاعْبُدْنِي﴾

பொருள் : நிச்சயமாக நான்தான் அல்லாஹ். என்னைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் அறவே இல்லை. ஆகவே, என்னையே வணங்குவீராக. (அல்குர்ஆன் 20 : 14)

இந்த வசனங்களில் நான் ..... நான் .... என்று அல்லாஹு தஆலா கூறுகின்றான். அல்லாஹ் பேசினால்தானே இப்படி கூறமுடியும்.

பேசுபவன் அல்லாஹ் இல்லாமல் வேறு ஒருவனாக இருந்தால், எப்படி நான் உனது இறைவன், நான்தான் அல்லாஹ் என்னை வணங்கு என்று கூற முடியும்?

**عَنْ عَبْدِ اللهِ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِذَا تَكَلَّمَ اللهُ بِالْوَحْيِ سَمِعَ أَهْلُ السَّمَاءِ لِلسَّمَاءِ صَلْصَلَةً كَجَرِّ السِّلْسِلَةِ عَلَى الصَّفَا فَيُصْعَقُونَ فَلَا يَزَالُونَ كَذٰلِكَ حَتّٰى يَأْتِيَهُمْ جِبْرِيلُ حَتّٰى إِذَا جَاءَهُمْ جِبْرِيلُ فُزِّعَ عَنْ قُلُوبِهِمْ قَالَ فَيَقُولُونَ يَا جِبْرِيلُ مَاذَا قَالَ رَبُّكَ فَيَقُولُ الْحَقَّ فَيَقُولُونَ الْحَقَّ الْحَقَّ رَوَاهُ أَبُوْ دَاوُدَ ﵀**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள் : வஹ்யு அறிவிப்பதற்காக அல்லாஹ் பேசும்போது வானத்தில் உள்ளவர்கள் சலசலவென சப்தத்தை செவியுறுவார்கள். அந்த சப்தம் பாறைகள் மீது இரும்பு சங்கிலியை இழுக்கும்போது வெளியாகும் சப்தத்தைப் போன்று இருக்கும். மலக்குகள் உடனே மயக்கமுற்று விழுவார்கள். ஜிப்ரீல் வருகின்ற வரை அதே நிலையில் அவர்கள் நீடித்து இருப்பார்கள். ஜிப்ரீல் வந்தவுடன் அவர்களுக்கு மயக்கம் தெளியும். ஜிப்ரீலே உங்களது இறைவன் என்ன கூறினான் என்று அவர்கள் கேட்பார்கள். உண்மையைக் கூறினான் என்று அவர் கூறுவார். அதற்கு, அவன் உண்மையைத்தான் கூறுவான், அவன் உண்மையைத்தான் கூறுவான் என்று மலக்குகள் கூறுவார்கள்.[1]

**عَنْ عَبْدِ اللهِ بْنِ أُنَيْسٍ ﵁ قَالَ سَمِعْتُ النَّبِيَّ ﷺ يَقُولُ يَحْشُرُ اللهُ العِبَادَ فَيُنَادِيهِمْ بِصَوْتٍ يَسْمَعُهُ مَنْ بَعُدَ كَمَا يَسْمَعُهُ مَنْ قَرُبَ أَنَا المَلِكُ أَنَا الدَّيَّانُ رَوَاهُ الْبُخَارِيُّ مُعَلَّقًا وَرَوَاهُ الطَّبَرَانِيُّ فِي الْكَبِيرِ**

1. அறிவிப்பாளர் : அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊது ﵁ நூல் : அபூ தாவூத், எண் : 4738

நபி ﷺ அவர்கள் கூற நான் செவியுற்றேன். அல்லாஹ் அடியார்களை எழுப்புவான். அவர்களை அவன் சப்தமிட்டு அழைப்பான். அருகில் உள்ளவர் அதை செவியுறுவதுபோன்று தூரமாக இருப்பவரும் அதை செவியுறுவார். அவன் கூறுவான் : நான்தான் உண்மையான அரசன், நான்தான் கூலி கொடுப்பவன்.[2]

முன் சென்ற மூன்று கவிதைகள் மற்றும் அவற்றின் விளக்க உரையிலிருந்து சில வழிகேடுகளை நாம் அறிய முடிகிறது. அவை பின்வருமாறு.

## வழிகேடுகள் :

1. அல்லாஹ்வின் கலாம் -அல்லாஹ்விற்கு பேசுதல் என்ற ஸிஃபத் (-தன்மை) இருப்பதை, இன்னும் அவன் பேசுவான் என்பதை மறுப்பது.
2. குர்ஆனை அல்லாஹ் உடைய கலாம் -பேச்சு என்று ஏற்க மறுப்பது.
3. அல்லாஹ் பேசிய குர்ஆன் அவனது பேச்சு, நான் ஓதுகின்ற குர்ஆன் எனது பேச்சு, இது படைக்கப்பட்டது என்று கூறுவது.
4. குர்ஆன் விஷயத்தில், அது படைக்கப்பட்டதல்ல, அல்லது படைக்கப்பட்டது என்று எதுவும் நான் கூற மாட்டேன்; மாறாக, மவுனம் காப்பேன் என்று கூறுவது.
5. மேற்கூறப்பட்ட கொள்கைகள் அனைத்தும் வழிகேடாகும். அவற்றை விட்டு விலகி இருப்போமாக!

---------------------

2. அறிவிப்பாளர் : அப்துல்லாஹ் இப்னு உனைஸ் அல்அன்சாரி ؓ, நூல் : முஃஜம் கபீர் - தபரானி, எண் : 14914. அறிவிப்பாளர் தொடர் இல்லாமல் இமாம் புகாரி ؒ இதை தனது ஸஹீஹ் நூலில் பதிவு செய்து இருக்கிறார்கள்.

وَقُلْ يَتَجَلَّـى اللهُ لِلْخَلْقِ جَهْرَةً
كَمَا الْبَدْرُ لَا يَخْفَـىٰ وَرَبُّكَ أَوْضَحُ

**பொருள் :**

சொல்! முழு நிலவு மறையாமல் தெரிவதைப் போல், அல்லாஹ் படைப்புகளுக்கு முன் வெளிப்படையாக காட்சியளிப்பான். உமதிறைவன் மிகத் தெளிவானவன்.

**கருத்து :**

அல்லாஹு தஆலா மறுமையில் தனது அழகிய உருவத்தில் படைப்புகளுக்கு முன் காட்சி அளிப்பான். பவுர்ணமி நிலவை தெளிவாக எல்லோரும் பார்ப்பது போன்று அதை விட மிகத் தெளிவாக அல்லாஹ்வை நாம் பார்க்கலாம்.

**விளக்கம் :**

முஃமின்கள் மறுமையில் அல்லாஹ்வை சொர்க்கத்தில் மிகத் தெளிவாக எவ்வித நெருக்கடியும் இல்லாமல் பார்ப்பார்கள். இதுதான் அஹ்லுஸ் ஸுன்னாவின் நம்பிக்கை ஆகும். பல குர்ஆன் வசனங்களும் நபிமொழிகளும் இதை உறுதிப்படுத்துகின்றன.

வழிகெட்ட கூட்டத்தினர், மறுமையில் அல்லாஹ்வை பார்ப்பதை மறுக்கின்றனர். குர்ஆன் வசனங்களுக்கும் நபிமொழிகளுக்கும் சுய விளக்கம் கொடுத்து அதன் நேரடி பொருளை மாற்றுகின்றனர்.

நபித்தோழர்கள் நாங்கள் மறுமையில் அல்லாஹ்வை பார்ப்போமா என்று நபி ﷺ அவர்களிடம் கேட்டபோது பவுர்ணமி அன்று முழு நிலவை நீங்கள் பார்ப்பதுபோல் அல்லாஹ்வை உங்களுக்குள் நெருக்கடி இல்லாமல் பார்ப்பீர்கள் என்று நபி ﷺ அவர்கள் பதில்

கூறினார்கள். அதை அப்படியே ஸஹாபாக்களும் தாபியீன்களும் இமாம்களும் நம்பிக்கை கொண்டார்கள். இந்த நபிமொழிகளுக்கு அவற்றுக்கு மாற்றமான பொருளை கூறுவது அல்லது அவற்றின் கருத்தை மறுப்பது வழிகேடாகும்.

**சுருக்கம் :**

நம்பிக்கைக் கொண்டு, நல்லமல் செய்பவர்களை அல்லாஹ் கண்ணியப்படுத்துகின்றான். அவர்களுக்கு கிடைக்கின்ற மாபெரும் நற்பாக்கியம்தான் அல்லாஹ்வை மறுமையில் பார்ப்பது. இவ்வுலகில் முழு சந்திரனைப் பார்ப்பதை விட அவர்கள் தங்கள் இறைவனை பார்ப்பார்கள்.

இந்த கவிதையில் கூறப்பட்ட கொள்கைக்கு ஆதாரங்கள் அடுத்த எட்டாவது, ஒன்பதாவது கவிதையின் விளக்கத்தில் வர இருக்கின்றன.

--------------------

وَلَيْسَ بِمَوْلُوْدٍ وَلَيْسَ بِوَالِدٍ
وَلَيْسَ لَهُ شِبْهٌ تَعَالَى الْـمُسَبَّحُ

**பொருள் :**

அவன் குழந்தையாகவும் இல்லை; தந்தையாகவும் இல்லை. அவனுக்கு ஒப்பாக யாரும் இல்லை. துதிக்கப்படுகின்ற பரிசுத்தமான (அ)வன் மிக உயர்ந்தவன்.

**கருத்து :**

அல்லாஹ் என்பவன் யாருக்கும் பிறந்த குழந்தை அல்ல. இன்னும் அவன் யாரையும் பெற்றெடுத்த தந்தை அல்ல. அவனுக்கு ஒப்பாக, உவமையாக எதுவும் யாரும் இல்லை. அவன்தான் எல்லா உயர்வுகளையும் புகழ்களையும் கொண்டு துதிக்கப்பட தகுதியானவன். அவன் மிக உயர்ந்தவன்.

**விளக்கம் :**

அல்லாஹ்தான் இந்த அகிலங்களை படைத்த படைப்பாளன் ஆவான். அவன் படைப்புகளுக்கு அப்பாற்பட்டவன் ஆவான். எந்த படைப்பும் அல்லாஹ்வின் தன்மைகளில் எந்த ஒன்றையும் பெற முடியாது. அவன் மிக மிக உயர்ந்தவன். அவன் ஒருவன்தான். அவன் இருவரோ, மூவரோ, அல்லது அதை விட அதிகமானவனோ இல்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணை துணை இல்லை. அவனுக்கு எந்த படைப்புகளின் தேவையும் அறவே இல்லை. படைப்புகள்தான் அல்லாஹ்வின் பக்கம் தேவை உள்ளவை. அவன் யாரையும் பெற்றெடுக்க வில்லை. அவன் யாருக்கும் பிறக்கவும் இல்லை. அவன்தான் முதலாமவன். அவன்தான் இறுதியானவன்.

அவனுக்கு யாரும் நிகராகவோ, ஒப்பாகவோ ஆக முடியாது. அல்லாஹ்வை அறியாதவர்கள் வர்ணிக்கின்ற வர்ணிப்புகளை விட்டும் அவன் மிக உயர்ந்தவன் ஆவான். அவன் படைப்புகளுக்கு மேலாக இருக்கின்றான். படைப்புகள் புகழ்வதற்கும் தூய்மைப் படுத்துவதற்கும் மிகத் தகுதியானவன் அவன்தான். இதுதான் குர்ஆனும் நபிமொழிகளும் கூறுகின்ற கொள்கை ஆகும்.

அல்லாஹ்வை முஃமின்கள் மறுமையில் பார்ப்பார்கள் என்று நாம் கூறும்போது நாம் அல்லாஹ்வை படைப்புகளுக்கு ஒப்பாக்கி விட்டதாக வழிகேடர்கள் கூறுகின்றனர். அதற்கு மறுப்புதான் இந்த கவிதையில் கூறப்பட்டது. நாம் படைக்கப்பட்ட ஒரு பொருளை பார்ப்பதற்கு தேவையான நிபந்தனைகளை நாம் அல்லாஹ்வை பார்ப்பதற்கு பொருத்தக் கூடாது. அல்லாஹ்விற்கு அவனுக்கு தகுதியான சூரத் -தோற்றம் இருக்கின்றது. அந்த தோற்றத்தை அவன் முஃமின்களுக்கு மறுமையில் காட்டுவான். இதில் நாம் சந்தேகப்படுவதோ மறுப்பதோ கூடாது. குர்ஆன், ஸுன்னாவில் கூறப்பட்டதை நம்பிக்கை கொள்வதுதான் நம்மீது கடமையாகும். அதை மறுப்பதோ, அதற்கு மாற்றுக் கருத்து கூறுவதோ கூடாது.

இந்த கவிதையில் கூறப்பட்ட நம்பிக்கைகள் பின்வருகின்ற வசனங்களில் இருந்து எடுக்கப்பட்டதாகும்.

﴿قُلْ هُوَ اللّٰهُ أَحَدٌ ○ اللّٰهُ الصَّمَدُ ○ لَمْ يَلِدْ وَلَمْ يُولَدْ ○
وَلَمْ يَكُنْ لَهُ كُفُوًا أَحَدٌ ○﴾

பொருள் : (நபியே! மனிதர்களை நோக்கி) கூறுவீராக: அல்லாஹ் ஒருவன்தான். (அந்த) அல்லாஹ் (எவருடைய) தேவையுமற்றவன். (அனைத்தும் அவன் அருளையே எதிர்பார்த்திருக்கின்றன.) அவன் (எவரையும்) பெறவுமில்லை; (எவராலும்) பெறப்படவுமில்லை. (ஆகவே, அவனுக்குத் தகப்பனுமில்லை சந்ததியுமில்லை.) (தவிர) அவனுக்கு ஒப்பாகவும் (நிகராகவும்) ஒன்றுமில்லை.

(அல்குர்ஆன் 112 : 1-4)

﴿لَيْسَ كَمِثْلِهِ شَيْءٌ وَهُوَ السَّمِيعُ الْبَصِيرُ○﴾

பொருள் : அவனுக்கு ஒப்பானது ஒன்றுமில்லை. அவன் (அனைத்தையும்) செவியுறுபவன், உற்று நோக்குபவன் ஆவான். (அல்குர்ஆன் 42 : 11)

﴿تَعَالَى اللّٰهُ عَمَّا يُشْرِكُونَ○﴾

பொருள் : அவர்கள் இணை வைப்பதை விட்டு அல்லாஹ் மிக்க உயர்ந்தவன். (அல்குர்ஆன் 27 : 63)

﴿سُبْحَانَ رَبِّكَ رَبِّ الْعِزَّةِ عَمَّا يَصِفُونَ وَسَلَامٌ
عَلَى الْمُرْسَلِينَ وَالْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِينَ○﴾

பொருள் : அவர்களுடைய (தப்பான) வர்ணிப்புகளை விட்டும் மிக்க கண்ணியத்திற்குரிய உமது இறைவன் மிகப் பரிசுத்தமானவன். (அவனால்) அனுப்பப்பட்ட தூதர்கள் (அனைவர்) மீதும் (அவனுடைய) ஸலாம் (ஈடேற்றம்) உண்டாவதாக! புகழ் அனைத்தும் உலகத்தாரின் இறைவனான அல்லாஹ்வுக்கு உரித்தானது.
(அல்குர்ஆன் 37 : 180-182)

﴿وَهُوَ الْعَلِيُّ الْعَظِيمُ○﴾

பொருள் : அவன் மிக மிக உயர்ந்தவன், மகத்தானவன் ஆவான். (அல்குர்ஆன் 2 : 255)

**சுருக்கம் :**

அல்லாஹ்வை பரிசுத்தமாக நம்பிக்கை கொள்கின்ற முஃமின்களுக்கு அல்லாஹ் தன்னைப் பற்றி வர்ணித்திருப்பதிலும் நபி ﷺ அவர்கள் அல்லாஹ்வைப் பற்றி வர்ணித்திருப்பதிலும் எவ்வித

சந்தேகமும், குழப்பமும் அறவே இருக்காது. அதை நம்புவதிலும் ஏற்றுக் கொள்வதிலும் எவ்வித தடுமாற்றமும் அவர்களுக்கு அறவே இருக்காது.

---------------------

وَقَدْ يُنْكِرُ الْـجَهْمِيُّ هٰذَا وعِنْدَنَا
بِمِصْدَاقِ مَا قُلْنَا حَدِيْثٌ مُصَرِّحُ

**பொருள் :**

ஜஹ்மி கொள்கையை பின்பற்றுவோர் இதை மறுக்கின்றனர். நம்மிடம் நாம் கூறியதற்கு ஏற்ப மிகத் தெளிவான நபிமொழி இருக்கின்றது.

**கருத்து :**

அல்லாஹ்வை மறுமையில் பார்க்க முடியும் என்பதை மறுப்பவர் ஜஹ்மிய்யா கொள்கையை சேர்ந்தவர் ஆவார். நம்மிடம் நாம் கூறுவதற்கு தெளிவான ஹதீஸ் இருக்கும் போது அதை மறுப்பவர்கள் மறுப்பதால் நமக்கு அதைப் பற்றி கவலை இல்லை. நாம், ஹதீஸ் கூறுவதில் உறுதியாக இருக்க வேண்டும்.

**விளக்கம் :**

அல்லாஹ்வை நாம் மறுமையில் பார்ப்போம் என்பது அஹ்லுஸ் ஸுன்னாவின் கொள்கை ஆகும். இதுதான் நேரான வழியாகும். குர்ஆனும் ஸுன்னாவும் போதிக்கின்ற நம்பிக்கை ஆகும்.

அல்லாஹ்வின் தன்மைகளை மறுக்கக்கூடிய ஜஹ்ம் என்பவரும் அவரின் கொள்கையை ஏற்றுக்கொண்டவர்களும் இதை நம்ப மறுக்கின்றனர். அல்லாஹ்வை நாம் பார்க்க முடியும் என்றால் நாம் அவனை படைப்புகளுக்கு ஒப்பாக்கிவிட்டதாக குற்றம் சுமத்துகின்றனர். இன்னும் அவனை தேவை உள்ளவனாக ஆக்கிவிட்டதாகவும் நம்மீது பழி சுமத்துகின்றனர்.

உண்மையில் இவர்கள்தான் அல்லாஹ்வை படைப்புகளுக்கு ஒப்பாக்கியவர்கள் ஆவார்கள். அதனால்தான் அல்லாஹ்வின்

தன்மைகளை நம்ப மறுக்கின்றனர். நாம் அல்லாஹ்வின் தன்மைகளையும் அவனுடன் இணைத்து பேசப்பட்ட ஒவ்வொன்றையும் அவனுடைய கண்ணியத்திற்கு தகுதியான முறையில் ஏற்று நம்பிக்கை கொள்கிறோம். அல்லாஹ் தனது **ذات** தாத் -உள்ளமையில் யாருக்கும் ஒப்பாகாமல் இருப்பதைப் போல் அல்லாஹ் தனது தன்மைகளிலும் யாருக்கும் ஒப்பாகாதவன் ஆவான். எந்த ஒரு படைப்பின் தன்மையும் அல்லாஹ்வின் தன்மைக்கு ஒப்பாக முடியாது. அல்லாஹ் ஒப்பற்றவனாக இருப்பதைப் போல் அவனது தன்மைகளும் செயல்களும் ஒப்பற்றவை ஆகும்.

எப்போது முஃமின்கள் அல்லாஹ்வை மறுமையில் பார்ப்பார்கள் என்பது தெளிவான நபிமொழியில் கூறப்பட்டு விட்டதோ அதை எப்படி மறுக்க முடியும்? ஆதாரமிக்க நபிமொழிகளில் கூறப்பட்டதை மறுப்பது பெரும் வழிகேடல்லவா? நபி ﷺ அவர்களின் கூற்றை செவியுற்று, பிறகு அதை ஏற்று கீழ்ப்படிந்து நடப்பதுதான் முஃமின்களின் பண்பாக இருக்க முடியும். அதில் சந்தேகப்படுவது நயவஞ்சகரின் பண்பாகும். அல்லாஹ் பாதுகாப்பானாக! நபி ﷺ அவர்களின் காலத்தில் இந்த நயவஞ்சகர்கள், நாங்கள் நபியை நம்பிக்கை கொள்கிறோம் என்று கூறிக்கொண்டு, ஆனால், நபி ﷺ அவர்கள் கூறுவதை ஏற்காதவர்களாக அல்லது அதில் சந்தேகப்படுபவர்களாக இருந்து வந்தனர். நபியவர்களின் பேச்சை கேட்டு, அதை அப்படியே பின்பற்றக் கூடிய மக்களை பார்த்து புத்தி இல்லாதவர்கள் என்று கூறிவந்தனர். இன்றைய காலத்தில் ஸஹீஹான ஹதீஸை மறுப்பவர்கள், அல்லது அதில் சந்தேகப்படுபவர்கள் எந்தளவு அக்கால முனாஃபிக்குகளுக்கு ஒப்பாகி போகிறார்கள் என்று பாருங்கள்!

**சுருக்கம் :**

வழிகேடர்களின் அடையாளம் அவர்கள் நபிமொழியை மறுப்பார்கள். அல்லது அதற்கு சுய வியாக்கியானம் கொடுத்து அறியப்பட்ட கருத்திலிருந்து அதை மாற்றுவார்கள். ஆனால், உண்மையான

முஃமின்கள், இன்னும் அல்லாஹ்விற்கும் அவனது தூதருக்கும் முழுமையாக கீழ்ப்படிந்து நடக்கின்ற முஸ்லிம்கள் நபிமொழி கூறுகின்ற கருத்துகளில் ஒருபோதும் சந்தேகப்பட மாட்டார்கள். அவற்றில் அவர்களுக்கு எவ்வித குழப்பமும் இருக்காது. அதை மாற்றாமல், மறுக்காமல் அப்படியே நம்பிக்கைக் கொண்டு, தங்கள் ஈமானையும் இஸ்லாமையும் பாதுகாத்துக் கொள்வார்கள்.

---------------------

رَوَاهُ جَرِيْرٌ عَنْ مَقَالِ مُحَمَّدٍ
فَقُلْ مِثْلَ مَا قَدْ قَالَ فِيْ ذَاكَ تَنْجَحُ

**பொருள் :**

அதை, முஹம்மதின் கூற்றிலிருந்து ஜரீர் அறிவித்தார். ஆகவே, இது விஷயத்தில் அவர் உறுதியாக கூறியது போலவே நீ கூறு! வெற்றி பெறுவாய்.

**கருத்து :**

அல்லாஹ்வை மறுமையில் பார்ப்பது சம்பந்தமான ஹதீஸை நபி முஹம்மது ﷺ அவர்களிடமிருந்து ஜரீர் இப்னு அப்தில்லாஹ் அல் பஜலி رضي الله عنه என்ற நபித்தோழர் அறிவிக்கின்றார். ஆகவே, நபி ﷺ அவர்கள் கூறியதை ஏற்று அவ்வாறே நாமும் கூறுவதுதான் நமக்கு வெற்றியாகும்.

**விளக்கம் :**

ஜரீர் இப்னு அப்துல்லாஹ் அல் பஜலி رضي الله عنه இந்த ஹதீஸை நபி ﷺ அவர்களிடமிருந்து நமக்கு மிகத் தெளிவாக அறிவித்து இருக்கின்றார்கள். அந்த ஹதீஸ் பின்வருமாறு :

عَنْ جَرِيرٍ رضي الله عنه قَالَ كُنَّا جُلُوسًا عِنْدَ النَّبِيِّ ﷺ إِذْ نَظَرَ إِلَى الْقَمَرِ لَيْلَةَ الْبَدْرِ قَالَ إِنَّكُمْ سَتَرَوْنَ رَبَّكُمْ كَمَا تَرَوْنَ هٰذَا الْقَمَرَ لاَ تُضَامُونَ فِي رُؤْيَتِهِ فَإِنِ اسْتَطَعْتُمْ أَنْ لاَ تُغْلَبُوا عَلَى صَلاَةٍ قَبْلَ طُلُوعِ الشَّمْسِ وَصَلاَةٍ قَبْلَ غُرُوبِ الشَّمْسِ فَافْعَلُوا رَوَاهُ الْبُخَارِيُّ وَمُسْلِمٌ رحمهما الله

பொருள் : ஜரீர் ؓ அறிவிக்கின்றார்கள்: நாங்கள் நபி ﷺ அவர்களிடம் அமர்ந்திருந்தோம். அப்போது அவர்கள் பவுர்ணமி இரவன்று சந்திரனைப் பார்த்தார்கள். மேலும், கூறினார்கள் : நீங்கள் இந்த சந்திரனைப் பார்ப்பது போன்று உங்கள் ரப்பைப் பார்ப்பீர்கள். அவனைப் பார்ப்பதில் நீங்கள் உங்களுக்குள் நெருக்கடிக்கு ஆளாக மாட்டீர்கள். சூரியன் உதயமாகுவதற்கு முன்புள்ள தொழுகையையும், இன்னும், சூரியன் மறைவதற்கு முன்புள்ள தொழுகையையும் நீங்கள் தவறவிட்டு விடாமல் இருக்க முடிந்தால் அதை செய்யுங்கள்.

இந்த ஹதீஸை இமாம் புகாரி, இமாம் முஸ்லிம் மற்றும் பல இமாம்கள் ரஹிமஹுமுல்லாஹ் பதிவு செய்துள்ளார்கள்.

முஃமின்கள் அல்லாஹ்வை சொர்க்கத்தில் பார்ப்பார்கள் என்பது நேர்வழிபெற்ற அஹ்லுஸ் ஸுன்னா வல்ஜமாஆ உடைய கொள்கையாகும். இதற்கு பல குர்ஆன் வசனங்களும் ஸஹீஹான நபிமொழிகளும் ஆதாரமாக உள்ளன.

உதாரணமாக அல்லாஹு தஆலா கூறுகின்றான் :

﴿وُجُوهٌ يَوْمَئِذٍ نَاضِرَةٌ ○ إِلَىٰ رَبِّهَا نَاظِرَةٌ○﴾

பொருள் : (நல்லோரின்) முகங்கள் அழகாக பிரகாசமாக இருக்கும், தங்கள் இறைவனை பார்த்துக்கொண்டு இருக்கும்.

(அல்குர்ஆன் 75 : 22, 23)

இது, சொர்க்க வாசிகள் அல்லாஹ்வை பார்ப்பது குறித்து இறக்கப்பட்ட தெளிவான, நேரடியான வசனமாகும்.

**சுருக்கம் :**

நபித்தோழர்கள் அரபி மொழியை அறிந்தவர்கள். அவர்களை விட தெளிவாக யாரும் அரபி மொழியை அறிந்திட முடியாது. அவர்கள் நபிமொழிகளை நேரடியாக நபி ﷺ அவர்களின் வாயிலிருந்து கேட்டார்கள். ஆகவே, அவற்றின் கருத்தை அவர்கள் நன்கறிவார்கள்.

எந்த ஒரு ஹதீஸையும் அவர்கள் விளங்கியதைவிட நாம் அதிகம் விளங்கிவிட முடியாது. ஆகவே, நபித்தோழர்கள் அறிவிக்கின்ற ஹதீஸ்களை கேட்டு, அவற்றை ஏற்றுக் கொள்வதுதான் நமது பாதுகாப்பும் வெற்றியும் ஆகும்.

6 லிருந்து 9 வரை உள்ள கவிதைகள் மற்றும் அவற்றுக்கு கூறப்பட்ட விளக்க உரையிலிருந்து நேரான கொள்கைகளை நாம் அறிவதுபோல் பல வழிகேடுகளையும் நாம் புரிந்து கொள்கிறோம். அந்த வழிகேடான சிந்தனைகள், கருத்துகள், மற்றும் கொள்கைகளிலிருந்து நாம் விலகி இருக்க வேண்டும். அல்லாஹ் அருள் புரிவானாக! ஆமீன்..

**வழிகேடுகள் :**

1. அல்லாஹ் தன்னைப் பற்றி கூறுவதை ஏற்க மறுப்பது, அதில் சந்தேகப்படுவது, அதற்கு மாற்றுப் பொருள் கூறுவது.

2. நபி ﷺ அவர்கள் அல்லாஹ்வைப் பற்றி கூறுவதை ஏற்க மறுப்பது, அதில் சந்தேகப்படுவது, அதற்கு மாற்றுப் பொருள் கூறுவது.

3. மார்க்க ஆதாரங்களுக்கு செவிசாய்க்காமல் இருப்பது, அவற்றுக்கு கீழ்ப்படியாமல் இருப்பது.

4. சுய சிந்தனையை அதிகம் நம்புவது, தர்க்க ஆதாரங்களுக்கு முன்னுரிமை கொடுப்பது.

5. அல்லாஹ்வையும் அவனது தன்மைகளையும் அவனது வேதம் மற்றும் ஹதீஸ்களின் அடிப்படையில் நம்பிக்கை கொள்ளாமல், தத்துவ ஆதாரங்களை அடிப்படையாக வைத்து நம்பிக்கை கொள்வது.

6. தங்கள் கருத்துக்கு மாற்றமாக குர்ஆனில் வசனம் இருந்தால் அதற்கு மாற்றுப் பொருள் கூறுவது.

7. ஹதீஸில் தங்கள் கருத்துக்கு மாற்றமான செய்தி இருந்தால்

அந்த ஹதீஸையே ஏதாவது காரணம் கூறி மறுத்துவிடுவது.

8. நேர்வழியை முடிவு செய்வதில் குர்ஆன், ஸுன்னாவை விட அறிவுக்கு அதிகம் முக்கியத்துவம் தருவது.

9. குர்ஆனும் ஹதீஸும் செவிவழி ஆதாரங்கள்; செவி ஒரு செய்தியை கேட்பதில் தவறிழைக்கலாம்; தர்க்க ஆதாரங்கள் அறிவார்ந்த ஆதாரங்களாகும். அறிவு அறவே தவறு செய்யாது என்று கூறுவது.

10. மார்க்கம் கூறி இருக்கின்ற ஒவ்வொரு ஆதாரத்திலும் அறிவை நுழைத்து அதை ஏற்பதா மறுப்பதா என்று முடிவு செய்வது.

---------------------

وَقَدْ يُنْكِرُ الْـجَهْمِيُّ أَيْضًا يَمِيْنَهُ
وَكِلْـتَا يَدَيْهِ بِالْفَوَاضِلِ تَنْفَحُ

**பொருள் :**

அல்லாஹ்வின் வலது கையையும் ஜஹ்மி மறுக்கின்றார். அவனது இருக்கரங்களும் அதிகமான கொடைகளைக் கொடுக்கின்றன.

**கருத்து :**

அல்லாஹ்விற்கு இரு கரங்கள் உள்ளன. அவன் தனது கரங்களால் கொடை கொடுக்கின்றான். அவனது கொடைகள் மிகவும் விசாலமானவையாகும். இதை மறுப்பவர் ஜஹ்மிய்யா கொள்கையை சேர்ந்தவர் ஆவார்.

**விளக்கம் :**

ஆசிரியர் அவர்கள் இதற்கு முன்னுள்ள கவிதைகளில் அல்லாஹ் உடைய குணம் சார்ந்த தன்மைகளை நம்பிக்கைக் கொள்வதைப் பற்றி கூறினார். அதில் குறிப்பாக அல்லாஹ் உடைய கலாம் -பேச்சு என்ற தன்மையை குறிப்பிட்டார்கள். இந்த தன்மையில் அதிகமான மக்கள் கருத்து வேறுபாடு கொண்டனர். ஆகவே, அதை குறிப்பாக கூறினார்கள். அல்லாஹ் உடைய கலாம் என்ற தன்மை போக இன்னும் ஏராளமான தன்மைகள், குணங்கள் அவனுக்கு இருக்கின்றன. அவற்றை நாம் வரையறுத்து, கூறி முடித்து விட முடியாது. எந்தளவு குர்ஆன், ஸுன்னாவில் கூறப்பட்டுள்ளதோ அதை விட அதிகமாக நாம் அறிந்து கொள்ள முடியாது. ஆகவே, குர்ஆன், ஸுன்னாவில் அல்லாஹ்வின் பண்புகளாக, குணங்களாக கூறப்பட்ட அனைத்தையும் நாம் அல்லாஹ்வின் தகுதிக்கு ஏற்ப நம்பிக்கை கொள்ள வேண்டும். அந்த தன்மைகள் ஏழு அல்லது

எட்டுதான் என்று முடிவு செய்து மற்ற தன்மைகளை மறுப்பதோ, அல்லது அவனுக்கு தன்மைகளே இல்லை என்று, அவற்றை மொத்தமாக மறுப்பதோ பெரும் வழிகேடாகும்.

பிறகு, இந்த கவிதையில் அல்லாஹ் உடைய தாத் - உள்ளமையோடு தொடர்பான தன்மைகளில் இருந்து ஒன்றை ஆசிரியர் அவர்கள் குறிப்பிடுகிறார்கள். இந்த ஒன்று மட்டும் நோக்கமல்ல. உதாரணத்திற்காக இங்கு கை என்ற தன்மையை குறிப்பிடப்பட்டுள்ளது. இதுபோக இன்னும் என்னென்ன தன்மைகள் அல்லாஹ் உடைய உள்ளமையோடு தொடர்புபடுத்தி மார்க்க ஆதாரங்களில் கூறப்பட்டுள்ளதோ அவை அனைத்தையும் நாம் நம்பிக்கை கொள்ள வேண்டும். அல்லாஹ்விற்கு கை என்ற தன்மை கூறப்பட்டிருப்பதைப் போன்று கண், கால், முகம், நஃப்ஸ், சாக் என்ற தன்மைகளும் கூறப்பட்டுள்ளன. அவற்றின் விளக்கத்தை பெரிய நூல்களில் நீங்கள் அறியலாம். ஆசிரியர் அவர்கள் குறிப்பிட்ட கை என்ற தன்மையின் சுருக்கமான விளக்கத்தைப் பார்ப்போம்.

அல்லாஹ்விற்கு அவனுடைய கண்ணியத்திற்கு தகுதியான இரு கரங்கள் உள்ளன. அவனுடைய குணம் சார்ந்த பண்புகளை படைப்புகளின் பண்புகளுக்கு நாம் ஒப்பிடாமல் நம்பிக்கை கொள்வது போன்று அவனுடைய உள்ளமை சார்ந்த பண்புகளாகிய இதையும் நாம் படைப்பினங்களின் கைகளுக்கு ஒப்பிடாமல் நம்பிக்கை கொள்ள வேண்டும்.

குணம் சார்ந்த பண்புகளுக்கு உதாரணம் : அறிதல், கேட்குதல், பார்த்தல், நாடுதல், ஆற்றல், இன்னும் இவைப் போன்று.

அல்லாஹ்விற்கு கரங்கள் உள்ளன, அவை இரண்டாகும் என்பதை உறுதி செய்கின்ற சில வசனங்களையும் நபிமொழிகளையும் பார்ப்போம்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான் :

﴿بَلْ يَدَاهُ مَبْسُوطَتَانِ﴾

பொருள் : மாறாக, அவனது இரு கரங்களும் விரிந்தே இருக்கின்றன. (அல்குர்ஆன் 5 : 64)

﴿قَالَ يَا إِبْلِيسُ مَا مَنَعَكَ أَنْ تَسْجُدَ لِمَا خَلَقْتُ بِيَدَيَّ﴾

பொருள் : அவன் கேட்டான், இப்லீஸே! நான் எனது இரு கரங்களால் படைத்தவருக்கு நீ சஜ்தா செய்வதை விட்டும் உன்னை எது தடுத்தது? (அல்குர்ஆன் 38 : 75)

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள் :

عَنْ عَبْدِ اللّٰهِ بْنِ عَمْرٍو رضي الله عنه قَالَ قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ إِنَّ الْمُقْسِطِينَ عِنْدَ اللّٰهِ عَلَىٰ مَنَابِرَ مِنْ نُورٍ عَنْ يَمِينِ الرَّحْمَنِ عَزَّ وَجَلَّ وَكِلْتَا يَدَيْهِ يَمِينٌ الَّذِينَ يَعْدِلُونَ فِي حُكْمِهِمْ وَأَهْلِيهِمْ وَمَا وَلُوا رَوَاهُ مُسْلِمٌ رحمه الله

நிச்சயமாக நீதவான்கள் கண்ணியத்திற்கும் கம்பீரத்திற்கும் உரிய ரஹ்மானுடைய வலது கை பக்கம் ஒளியினால் ஆன மேடைகளில் இருப்பார்கள். இன்னும் அவனது இரு கரங்களும் வலதுதான். அவர்கள் யாரென்றால், தங்கள் தீர்ப்பிலும் தங்கள் குடும்பத்திலும் தாங்கள் எதற்கு பொறுப்பு வகிக்கின்றார்களோ அதிலும் நீதமாக நடப்பார்கள்.[3]

عَنْ أَبِي هُرَيْرَةَ رضي الله عنه قَالَ قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ يَمِينُ الرَّحْمَنِ مَلأَىٰ سَحَّاءُ لاَ يُغِيضُهَا اللَّيْلُ وَالنَّهَارُ قَالَ أَرَأَيْتُمْ مَا أَنْفَقَ مُنْذُ خَلَقَ السَّمَوَاتِ وَالأَرْضَ فَإِنَّهُ لَمْ يَغِضْ مَا فِي يَمِينِهِ وَعَرْشُهُ عَلَى الْمَاءِ وَبِيَدِهِ الأُخْرَىٰ الْمِيزَانُ يَرْفَعُ وَيَخْفِضُ رَوَاهُ التِّرْمِذِيُّ رحمه الله

3. அறிவிப்பாளர் : அப்துல்லாஹ் இப்னு அம்ர் رضي الله عنه, நூல் : முஸ்லிம், எண் : 1827

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள் : ரஹ்மானுடைய வலது கை நிரப்பமாக, வாரி வழங்கக்கூடியதாக இருக்கின்றது. இரவிலும் பகலிலும் அவன் வாரிவழங்குவதை அதை (-அவனது கரத்தில் உள்ளதை) குறைத்து விடாது. வானங்களையும் பூமியையும் அவன் படைத்ததிலிருந்து அவன் கொடுத்ததைப் பற்றி நீங்கள் சொல்லுங்கள்! நிச்சயமாக அது அவனது வலது கரத்தில் உள்ளதை குறைக்கவே இல்லை. அவனுடைய அர்ஷ் தண்ணீர் மீது இருக்கின்றது. அவனுடைய மற்றொரு கரத்தில் தராசு இருக்கின்றது. அவன் உயர்த்துகின்றான்; தாழ்த்துகின்றான்.[4]

**هٰذَا حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ. وَهٰذَا الْحَدِيثُ فِي تَفْسِيرِ هَذِهِ الآيَةِ وَقَالَتِ الْيَهُودُ يَدُ اللهِ مَغْلُولَةٌ غُلَّتْ أَيْدِيهِمْ وَلُعِنُوا بِمَا قَالُوا بَلْ يَدَاهُ مَبْسُوطَتَانِ يُنْفِقُ كَيْفَ يَشَاءُ وَهٰذَا حَدِيثٌ قَدْ رَوَتْهُ الأَئِمَّةُ نُؤْمِنُ بِهِ كَمَا جَاءَ مِنْ غَيْرِ أَنْ يُفَسَّرَ أَوْ يُتَوَهَّمَ هَكَذَا قَالَ غَيْرُ وَاحِدٍ مِنَ الأَئِمَّةِ الثَّوْرِيُّ وَمَالِكُ بْنُ أَنَسٍ وَابْنُ عُيَيْنَةَ وَابْنُ الْمُبَارَكِ رحمهم الله أَنَّهُ تُرْوَىٰ هَذِهِ الأَشْيَاءُ وَيُؤْمَنُ بِهَا وَلاَ يُقَالُ كَيْفَ.**

இந்த ஹதீஸை அறிவித்துவிட்டு அதன் தரம் ஹசன், ஸஹீஹ் என்று இமாம் கூறுகிறார்கள். மேலும் அவர்கள் விளக்கம் கூறுகின்றார்கள் : இந்த ஹதீஸ் இந்த வசனத்திற்கு விளக்கத்தில் கூறப்படுகின்றது.

**﴿وَقَالَتِ الْيَهُودُ يَدُ اللهِ مَغْلُولَةٌ غُلَّتْ أَيْدِيهِمْ وَلُعِنُوا بِمَا قَالُوا بَلْ يَدَاهُ مَبْسُوطَتَانِ يُنْفِقُ كَيْفَ يَشَاءُ﴾**

பொருள் : அல்லாஹ்வின் கரம் கட்டப்பட்டுள்ளது என்று யூதர்கள் கூறினார்கள். அவர்களது கரங்கள் கட்டப்படட்டும்.

4. அறிவிப்பாளர் : அபூ ஹுரைரா رضي الله عنه, நூல் : திர்மிதி, எண் : 3045

அவர்கள் இவ்வாறு கூறியதால் சபிக்கப்பட்டார்கள். மாறாக, அவனது இரு கரங்களும் விரிந்தே இருக்கின்றன. அவன் நாடிய படி அவன் செலவு செய்கின்றான் (வாரி வழங்குகின்றான்).

(அல்குர்ஆன் 5 : 64)

இந்த ஹதீஸில் வந்துள்ளது போன்று நாம் அதற்கு (கை என்பது எப்படி இருக்கும் என்று) விளக்கம் கூறாமல், (அல்லாஹ்விற்கு கையா என்று) சந்தேகிக்காமல், (அந்த கை எப்படி இருக்கும் என்று யூகிக்காமல் குர்ஆன், ஹதீஸில் கூறப்பட்டுள்ளபடி அப்படியே) நம்பிக்கை கொள்வோம். இப்படித்தான் பல இமாம்கள் - (உதாரணமாக:) சவ்ரி, மாலிக் இப்னு அனஸ், இப்னு உயைனா, இப்னுல் முபாரக் (ரஹிமஹுமுல்லாஹ்) கூறி இருக்கின்றார்கள். அதாவது இந்த செய்திகளை அறிவிக்க வேண்டும். அவற்றை அப்படியே நம்பிக்கை கொள்ள வேண்டும். எப்படி என்று கேள்வி கேட்கக் கூடாது.

இவ்வாறு இமாம் திர்மிதி ﷬ கூறி முடிக்கின்றார்கள்.

ஆகவே, இப்படித்தான் நாம் நம்பிக்கை கொள்ள வேண்டும். அல்லாஹ்வின் கை என்பதற்கு மாற்று பொருள் கூறுவதோ அல்லது அதை படைப்பினங்களின் கைக்கு ஒப்பிடுவதோ அல்லது يد யதுன் - கை என்பதற்கு பொருள் கூறமாட்டோம் என்று மறுப்பதோ, அல்லது கைக்கு விளக்கம் கூறுவதோ கூடாது. இதுதான் அஹ்லுஸ் ஸுன்னாவின் நம்பிக்கை ஆகும். இவ்வாறுதான் அல்லாஹ்வின் ஒவ்வொரு தன்மையிலும் பண்பிலும் நாம் கூறுவோம்.

**சுருக்கம் :**

அல்லாஹ் உடைய உள்ளமையின் தன்மைகளை அவை கூறப்பட்டிருப்பதைப் போன்று அப்படியே நம்பிக்கை கொள்ள வேண்டும். அல்லாஹ்விற்கு இரு கைகள் உள்ளன. இன்னும் இது போன்ற அழகிய தன்மைகள் உள்ளன. அவற்றை நம்பிக்கைக் கொள்ள வேண்டும். அல்லாஹ்வும் ரஸூலும் அல்லாஹ்விற்கு கூறாத

தன்மைகள் எதையும் நாம் அல்லாஹ்விற்கு கூறக் கூடாது. அல்லாஹ் அவனை வர்ணித்தது போன்று அவனை நாம் வர்ணித்துவிட்டு, ரஸூல் ﷺ அவர்கள் அவனை வர்ணித்தது போன்று அவனை நாம் வர்ணித்துவிட்டு மவுனம் காக்க வேண்டும். அவற்றை விட அதிகமாக எதுவும் அல்லாஹ்வின் ஸிஃபாத் விஷயத்தில் பேசக் கூடாது.

இந்த பத்தாவது கவிதை இன்னும் அதன் விளக்க உரையில் கூறப்பட்டதிலிருந்து சில வழிகேடுகளை நாம் புரிந்திருப்போம். அவற்றை இப்போது சுருக்கமாக பார்ப்போம்.

**வழிகேடுகள் :**

1. அல்லாஹ்வை, அவன் தன்னைப் பற்றி கூறி இருப்பதற்கு ஏற்ப நம்பிக்கைக் கொள்ள மறுப்பது.

2. நபி ﷺ அவர்கள் அல்லாஹ்வைப் பற்றி கூறி இருப்பதற்கு ஏற்ப அல்லாஹ்வை நம்பிக்கைக் கொள்ள மறுப்பது.

3. அல்லாஹ் உடைய தன்மைகளுக்கு மாற்றுப் பொருள் கூறுவது. உதாரணமாக கை என்பதற்கு சக்தி, ஆற்றல் என்று பொருள் கூறுவது.

4. அல்லாஹ்வின் தன்மைகளை மறுப்பது, அவற்றுக்கு மாற்றுப் பொருள் கூறுவது.

5. அல்லாஹ்வை அறிவதில் ஆதாரங்களை முன்னிலைப் படுத்தாமல் அறிவை முன்னிலைப் படுத்துவது.

---------------------

وَقُلْ يَنْزِلُ الْـجَبَّارُ فِيْ كُلِّ لَيْلَةٍ
بِلَا كَيْفٍ جَلَّ الْوَاحِدُ الْـمُتَمَدَّحُ

**பொருள் :**

நீ சொல்! அடக்கி ஆளுபவன் ஒவ்வொரு இரவும் இறங்குகின்றான். அது எப்படி என்று விவரிக்க முடியாது. புகழப்படுபவனாகிய அந்த ஒருவன் மிக கம்பீரமாக இருக்கின்றான்.

**கருத்து :**

ஆசிரியர் அவர்கள் இந்த கவிதையிலும் அடுத்து வருகின்ற 12, 13, 14 ஆகிய கவிதைகளிலும் அல்லாஹ்வின் செயல் சார்ந்த தன்மைகளை கூறுகின்றார்கள். அல்லாஹ் உடன் எந்த செயல்கள் எல்லாம் சேர்த்து கூறப்பட்டனவோ அவற்றை மறுக்கவோ, அவற்றுக்கு மாற்றுக் கருத்து கூறவோ, அவற்றை பொருளற்றதாக ஆக்குவதோ, அவற்றுக்கு விளக்கம் கூறவோ கூடாது.

அல்லாஹ்வின் செயல் சார்ந்த தன்மைகளில் அல்லாஹ் முதல் வானத்திற்கு இறங்குவதை இங்கு குறிப்பிடப்பட்டுள்ளது. இது ஓர் உதாரணத்திற்காக கூறப்பட்டது. மேலும், குறிப்பாக இந்த தன்மையில் பலர் முற்காலத்தில் சர்ச்சை செய்துள்ளனர். இன்றும் இந்த ஹதீஸை மறுப்பவர்கள் இருக்கின்றார்கள்.

இரவின் மூன்றாவது பகுதியில் அல்லாஹ் முதல் வானத்திற்கு இறங்கி வருகின்றான். அவன் இறங்குதல் எப்படி இருக்கும் என்று கேள்வி கேட்கக் கூடாது, கற்பனையும் செய்யக் கூடாது. அவன் அவனது தன்மைகளில் தனித்தவன், புகழுக்கு தகுதியானவன், கம்பீரமானவன். ஆகவே, அவனையும் அவனது தன்மைகளின் அமைப்பையும் நாம் கேள்வி கேட்கக் கூடாது.

இன்னும் அதிகமான விளக்கத்தை அடுத்து வருகின்ற கவிதைகளின் விளக்க உரையில் பார்ப்போம் இன் ஷா அல்லாஹ்.

**சுருக்கம் :**

கண்ணியத்திற்கும் கம்பீரத்திற்கும் உரிய அல்லாஹ் அவனுடைய தகுதிக்கு ஏற்ப அவனுடைய அடியார்களின் குறை தீர்க்க, அவர்களின் பிரார்த்தனைகளை அங்கீகரிக்க முதல் வானத்திற்கு ஒவ்வொரு இரவிலும் அதன் மூன்றாவது பகுதியில் இறங்கி வருகின்றான். அதில் எப்படி என்ற கேள்வியை எழுப்பக் கூடாது.

---------------------

إِلَىٰ طَبَقِ الدُّنْيَا يَمُنُّ بِفَضْلِهِ
فَتُفْرَجُ أَبْوَابُ السَّمَاءِ وَتُفْتَحُ

**பொருள் :**

முதல் வானத்திற்கு இறங்குகின்றான். தனது அருளை வாரி வழங்குகின்றான். வானத்தின் வாசல்கள் விரிக்கப்பட்டு, திறக்கப்படுகின்றன.

**கருத்து :**

அல்லாஹ் முதல் வானத்திற்கு இறங்கி வரும்போது வானத்தின் வாசல்கள் திறக்கப்பட்டு அடியானின் துஆக்கள் அங்கீகரிக்கப்படுகின்றன. அந்த நேரத்தில் அல்லாஹ் தனது அடியார்களுக்கு தனது அருளை கணக்கின்றி வழங்குகின்றான்.

அல்லாஹ் ஏழு வானங்களை அடுக்கடுக்காக படைத்திருக்கின்றான். அவற்றுக்கு மேல் அவனது குர்சி இருக்கின்றது. அதற்கு மேல் அர்ஷ் இருக்கின்றது. அர்ஷ் தண்ணீருக்கு மேல் இருக்கின்றது. அல்லாஹ் அர்ஷுக்கு மேல் உயர்ந்திருப்பதை குர்ஆன் வசனங்கள் மற்றும் நபிமொழிகள் பலவும் மிகத் தெளிவாக உறுதியாக கூறுகின்றன. அவற்றை மறுப்பது பிடிவாதமும் முரண்டும் ஆகும்.

இஸ்தவா -உயர்ந்திருக்கின்றான் என்பதற்கு இஸ்தவ்லா -ஆட்சி செய்கிறான் என்று பொருள் கூறுவதும் தவறாகும். அல்லாஹ்வின் இஸ்திவாவை ஒப்பிடுவதும் வழிகேடாகும். அதற்கு விளக்கம் கூறுவதும் வழிகேடாகும். அல்லாஹ் எங்கு இருக்கின்றான் என்று கேட்கும்போது அவன் எங்கும் இருக்கின்றான் என்று கூறுவது நிராகரிப்பை உண்டாக்கி விடும். குர்ஆன், ஹதீஸை மறுப்பதாக ஆகிவிடும். அல்லாஹ்விற்கு தகுதி இல்லாததை

அவனுக்கு சேர்த்ததாக ஆகிவிடும். அல்லாஹ் அர்ஷுக்கு மேல் உயர்ந்திருப்பதுடன் அவன் தனது அறிவாலும் ஆற்றலாலும் அடக்கி ஆளுகின்ற தன்மையாலும் படைப்புகள் அனைத்தையும் சூழ்ந்து இருக்கின்றான். அல்லாஹ் அவனது உள்ளமையால் அர்ஷுக்கு மேல் உயர்ந்திருப்பதுடன் அவனது தன்மைகளால் படைப்புகளை சூழ்ந்து இருக்கின்றான்.

இதை பின்வருகின்ற ஆதாரங்கள் உறுதிப்படுத்துகின்றன.

அல்லாஹு தஆலா கூறுகின்றான் :

﴿الرَّحْمٰنُ عَلَى الْعَرْشِ اسْتَوٰى﴾

பொருள் : ரஹ்மான் (-அளவற்ற அருளாளனாகிய அல்லாஹ்) அர்ஷின் மீது (தன் மகிமைக்குத் தக்கவாறு) உயர்ந்துவிட்டான். (அல்குர்ஆன் 20 : 5)

﴿هُوَ الَّذِي خَلَقَ السَّمَاوَاتِ وَالْأَرْضَ فِي سِتَّةِ أَيَّامٍ ثُمَّ اسْتَوٰى عَلَى الْعَرْشِ يَعْلَمُ مَا يَلِجُ فِي الْأَرْضِ وَمَا يَخْرُجُ مِنْهَا وَمَا يَنْزِلُ مِنَ السَّمَاءِ وَمَا يَعْرُجُ فِيهَا وَهُوَ مَعَكُمْ أَيْنَ مَا كُنْتُمْ وَاللَّهُ بِمَا تَعْمَلُونَ بَصِيرٌ﴾

பொருள் : அவன்தான் வானங்களையும் பூமியையும் ஆறு நாள்களில் படைத்தான். பின்னர், அர்ஷின் மீது (தன் மகிமைக்குத் தகுந்தாற்போல்) உயர்ந்து விட்டான். (வித்து முதலியவை) பூமியில் விதைக்கப்படுவதையும் அவை முளைத்து வெளிப்படுவதையும், வானத்தில் இருந்து இறங்குபவற்றையும், (பூமியிலிருந்து) ஏறுபவற்றையும் அவன் நன்கறிவான். நீங்கள் எங்கிருந்த போதிலும், அவன் உங்களுடன் இருக்கிறான். நீங்கள் செய்பவற்றையும் (அந்த) அல்லாஹ் உற்று நோக்குகிறான். (அல்குர்ஆன் 57 : 4)

﴿قَالَ لَا تَخَافَا إِنَّنِي مَعَكُمَا أَسْمَعُ وَأَرٰى﴾

பொருள் : (அதற்கு இறைவன்) கூறினான் : நீங்கள் பயப்படவேண்டாம். நான் உங்களுடன் இருந்து (அனைத்தையும்) கேட்டுக்கொண்டும் பார்த்துக் கொண்டும் இருப்பேன். (அல்குர்ஆன் 20 : 46)

இன்னும் அதிகமான ஆதாரங்களை பெரிய நூல்களில் படித்து அறியவும். நூலின் சுருக்கம் கருதி இந்த ஆதாரங்களுடன் போதுமாக்கிக் கொள்கிறோம்.

அல்லாஹ் தன் கண்ணியத்திற்கும் கம்பீரத்திற்கும் மகத்துவத்திற்கும் ஏற்றவாறு அர்ஷுக்கு மேல் உயர்ந்திருப்பதைப் போன்று, அவ்வாறே அவன் முதல் வானத்திற்கு இரவின் இறுதி மூன்றாம் பகுதியில் இறங்கி வருகின்றான். அவன் உயர்ந்திருக்கின்றான் என்று கூறப்பட்டிருப்பதிலும் அவன் இறங்கி வருகின்றான் என்று கூறப்பட்டிருப்பதிலும் எவ்வித முரண்பாடும் இல்லை. அல்லாஹ் உடைய இறங்குதல் படைப்புகளின் இறங்குதலுக்கு ஒப்பானதல்ல. அல்லாஹ்விற்கு ஒப்பானவர் இல்லாததைப் போன்று அவனுடைய பெயர்களுக்கும் பண்புகளுக்கும் செயல்களுக்கும் ஒப்பானவர் யாரும் இல்லை.

**சுருக்கம் :**

வானத்தின் வாசல்கள் திறக்கப்பட்டு அல்லாஹ் முதல் வானத்திற்கு தன் தகுதிக்கு ஏற்ப இறங்கி வந்து தனது அடியார்கள் மீது கருணையும் அருளும் புரிகின்றான். இதை நாம் நம்பிக்கைக் கொள்கிறோம். இது விஷயத்தில் எப்படி?, விளக்கம் என்ன?, முடியுமா?, அமைப்பு என்ன? என்று எந்த கேள்வியும் கேட்க மாட்டோம்.

இன்னும் சிறிது விளக்கத்தை அடுத்த இரு கவிதைகளின் விளக்க உரையில் பார்ப்போம் இன் ஷா அல்லாஹ்.

---------------------

يَقُوْلُ أَلاَ مُسْتَغْفِرٌ يَلْقَ غَافِرًا
وَمُسْتَمْنِحٌ خَيْرًا وَرِزْقًا فَيُمْنَحُ

**பொருள் :**

அவன் கூறுகின்றான் : மன்னிப்பு கேட்பவர் இருக்கின்றாரா? மன்னிப்பவனை அவர் சந்திப்பார். செல்வத்தையும் வாழ்வாதாரத்தையும் வேண்டுபவர் இருக்கின்றாரா? அவர் வழங்கப்படுவார்.

**கருத்து :**

இரவின் அந்த மூன்றாவது பகுதியில் அல்லாஹ் இறங்கி வந்து பாவமன்னிப்பு தேடுபவர் யார்? என்னிடம் என் அருளை கேட்பவர் யார்? வாழ்க்கையில் தனக்கு தேவையானதை கேட்பவர் யார்? என்று கேட்டு, பிறகு தனது அடியார்கள் கேட்பதை அவன் தாராளமாக வழங்கி கண்ணியப்படுத்துகின்றான்.

**விளக்கம் :**

அல்லாஹ், வணக்கசாலிகளான தனது அடியார்களை கண்ணியப்படுத்துகின்றான். அவர்கள் இரவில் நின்று வணங்கிவிட்டு கடைசிப் பகுதியில் பாவமன்னிப்பு கேட்பதில் ஈடுபட்டுவிடுவார்கள். அவர்களைப் பற்றி அல்லாஹு தஆலா கூறுகின்றான் :

﴿تَتَجَافَىٰ جُنُوبُهُمْ عَنِ الْمَضَاجِعِ يَدْعُونَ رَبَّهُمْ
خَوْفًا وَطَمَعًا وَمِمَّا رَزَقْنَاهُمْ يُنْفِقُونَ○﴾

பொருள் : அவர்கள் (நித்திரையில் ஆழ்ந்திருக்கும்போது) படுக்கையிலிருந்து தங்கள் விலாக்களை உயர்த்தி, தங்கள்

இறைவனிடம் (அவனது அருளை) ஆசை வைத்தும், (அவனது தண்டனையை) பயந்தும் பிரார்த்தனை செய்வார்கள். நாம் அவர்களுக்குக் கொடுத்தவற்றிலிருந்து தானமும் செய்வார்கள். (அல்குர்ஆன் 32 : 16)

﴿الَّذِينَ يَقُولُونَ رَبَّنَا إِنَّنَا آمَنَّا فَاغْفِرْ لَنَا ذُنُوبَنَا
وَقِنَا عَذَابَ النَّارِ ○ الصَّابِرِينَ وَالصَّادِقِينَ وَالْقَانِتِينَ
وَالْمُنْفِقِينَ وَالْمُسْتَغْفِرِينَ بِالْأَسْحَارِ○﴾

பொருள் : இவர்கள் (தங்கள் இறைவனை நோக்கி) எங்கள் இறைவனே! நிச்சயமாக நாங்கள் (உன்னை) நம்பிக்கை கொள்கிறோம். ஆதலால், நீ எங்கள் பாவங்களை மன்னித்து (அருள் புரிந்து, நரக) நெருப்பின் வேதனையிலிருந்தும் எங்களை காப்பாற்றுவாயாக!" என்றும் (தொடர்ந்து) பிரார்த்தித்துக் கொண்டிருப்பார்கள். (அவர்கள்) பொறுமையாளர்களாகவும், உண்மை பேசுகிறவர்களாகவும், (இறைவனுக்கு) முற்றிலும் வழிப்பட்டு நடப்பவர்களாகவும், தானம் செய்கிறவர்களாகவும், ஸஹர் நேரங்களில் (வைகறைப் பொழுதில் அல்லாஹ்விடம்) மன்னிப்புக் கோருகிறவர்களாகவும் இருக்கின்றனர். (அல்குர்ஆன் 3 : 16-17)

﴿كَانُوا قَلِيلًا مِنَ اللَّيْلِ مَا يَهْجَعُونَ ○
وَبِالْأَسْحَارِ هُمْ يَسْتَغْفِرُونَ○﴾

பொருள் : அவர்கள் இரவில் வெகு சொற்ப (நேர)மே நித்திரை செய்பவர்களாக இருந்தனர். அவர்கள் விடியற்காலை நேரத்தில் (எழுந்து தங்கள் இறைவனை வணங்கி, அவனிடம் பாவ) மன்னிப்புக் கோருவார்கள். (அல்குர்ஆன் 51 : 17-18)

சிலர் அல்லாஹ் இறங்குகிறான் என்றால் அவனது விசேஷமான அருள் இறங்குவதாகவும் இன்னும் சிலர் அல்லாஹ் அதிக

வேலையாக இருப்பதால் அவன் தன் அடியார்களின் துஆக்களை செவியுறுவதற்கும் அவற்றை அங்கீகரிப்பதற்கும் நேரம் ஒதுக்குகின்றான் என்று விளக்கம் கூறுகின்றார்கள். இந்த இரண்டு கருத்திலும் உள்ள வழிகேடுகளை நேர்வழியில் உள்ளவர்கள் மிகத் தெளிவாக புரிந்து கொள்வார்கள்.

**சுருக்கம் :**

அல்லாஹ் முதல் வானத்திற்கு இறங்கி வந்து அடியார்களை அழைக்கின்றான். அவர்களை தன் பக்கம் வருமாறும், தன்னிடம் பிரார்த்தனை செய்யுமாறும் தூண்டுகின்றான். அதில் குறிப்பாக அடியார்கள் அல்லாஹ்விடம் பாவமன்னிப்பு தேடுவதற்கு அல்லாஹ் ஆர்வமூட்டுகின்றான். இன்னும் என்ன நல்ல தேவையாக இருந்தாலும் அடியான் கேட்பதை தான் கொடுப்பதாகவும் அவன் கூறி அழைக்கின்றான். பிறகு அடியான் ஏன் கவலைப் பட வேண்டும்?!

---------------------

رَوَىٰ ذَاكَ قَوْمٌ لَا يُرَدُّ حَدِيْثُهُمْ
أَلَا خَابَ قَوْمٌ كَذَّبُوْهُمْ وقُبِّحُوْا

**பொருள் :**

இதை ஒரு கூட்டம் அறிவித்தார்கள். (அவர்கள் எப்படிப்பட்டவர்கள் என்றால்) அவர்களின் ஹதீஸ்களை தட்டிக் கழிக்க முடியாது. அவர்களை பொய்பித்த மக்கள் நஷ்டமடைவார்கள்; கேவலப்படுவார்கள்.

**கருத்து :**

அல்லாஹ் இரவில் முதல் வானத்திற்கு இறங்கி வருகின்றான் என்ற ஹதீஸை நம்பிக்கைக்குரிய அறிவிப்பாளர்கள் அறிவிக்கின்றார்கள். அத்தகைய உறுதியான அறிவிப்பாளரின் ஹதீஸ்களை மறுப்பது இம்மை, மறுமையின் இழிவும் நஷ்டமும் ஆகும்.

**விளக்கம் :**

கவிதைகள் 11, 12, 13, 14, ஆகியவற்றில் கூறப்பட்ட அடிப்படைகளின் விளக்கம் பின்வருமாறு.

முதலாவதாக இது குறித்து வந்துள்ள ஹதீஸை பார்ப்போம்.

عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ يَنْزِلُ رَبُّنَا تَبَارَكَ وَتَعَالَىٰ كُلَّ لَيْلَةٍ إِلَى السَّمَاءِ الدُّنْيَا حِينَ يَبْقَىٰ ثُلُثُ اللَّيْلِ الآخِرُ يَقُولُ مَنْ يَدْعُونِي فَأَسْتَجِيبَ لَهُ مَنْ يَسْأَلُنِي فَأُعْطِيَهُ مَنْ يَسْتَغْفِرُنِي فَأَغْفِرَ لَهُ
رَوَاهُ الْبُخَارِيُّ رَحِمَهُ اللهُ

நிச்சயமாக ரஸூலுல்லாஹ் ﷺ கூறினார்கள் : அருள் நிறைந்த, மிக உயர்ந்தவனாகிய நமது ரப்பு ஒவ்வொரு இரவிலும் இரவின் இறுதி மூன்றாம் பகுதி மீதம் இருக்கும்போது கீழ் வானத்திற்கு இறங்கி வருகின்றான். இன்னும் அவன் கேட்கின்றான், என்னிடம் துஆ கேட்பவர்கள் யார்? நான் அவரின் துஆவை அங்கீகரிக்கின்றேன். என்னிடம் தேவையை கேட்பவர் யார்? நான் அவருக்கு கொடை கொடுப்பேன். என்னிடம் பாவ மன்னிப்பு கேட்பவர் யார்? நான் அவரை மன்னிப்பேன்.[5]

**قال أبو عيسى الترمذي وَفِي البَابِ عَنْ عَلِيٍّ وَعَبْدِ اللهِ بْنِ مَسْعُودٍ وَأَبِي سَعِيدٍ وَجُبَيْرِ بْنِ مُطْعِمٍ وَرِفَاعَةَ الجُهَنِيِّ وَأَبِي الدَّرْدَاءِ وَعُثْمَانَ بْنِ أَبِي العَاصِ رضي الله عنهم**

இமாம் திர்மிதி رحمه الله கூறுகின்றார்கள் : இதே கருத்துள்ள நபிமொழியை அலீ, அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத், அபூ சயீது அல்குத்ரி, ஜுபைர் இப்னு முத்யிம், ரிஃபாஆ அல் ஜுஹ்னி, அபுத் தர்தா, உஸ்மான் இப்னு அபில் ஆஸ் رضي الله عنهم ஆகிய ஸஹாபாக்கள் அறிவிக்கின்றார்கள்.

இந்த ஹதீஸை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும். இதன் மீது ஆட்சேபனை செய்வது, இதை மறுப்பது வழிகேடாகும். அல்லாஹ் இறங்குவது அவனது செயலாகும். அதை அவனது தகுதிக்கு ஏற்ப நாம் நம்பிக்கை கொள்ள வேண்டும். அல்லாஹ்வின் பக்கம் சேர்க்கப்பட்ட அவனது ஒவ்வொரு செயலையும் நாம் அதன் அரபி மொழியின் பொருளுக்கு ஏற்ப நம்பிக்கை கொள்ள வேண்டும்.

ஆகவே, அல்லாஹ் இறங்குகிறான் என்பதற்கு மாற்று பொருள் கூறுவதோ அல்லது அதை படைப்பினங்கள் இறங்குவதுடன் ஒப்பிடுவதோ அல்லது இறங்குவது என்பதற்கு பொருள் கூறமாட்டோம் என்று மறுப்பதோ, அல்லது இறங்குதல் எப்படி இருக்கும் என்று விளக்கம் கூறுவதோ கூடாது. இதுதான் அஹ்லுஸ்

5. அறிவிப்பாளர் : அபூ ஹுரைரா رضي الله عنه, நூல் : புகாரி, எண் : 1145, 7494

ஸுன்னாவின் நம்பிக்கை ஆகும். இவ்வாறுதான் அல்லாஹ்வின் ஒவ்வொரு செயலிலும் தன்மையிலும் பண்பிலும் நாம் கூறுவோம்.

இன்னும் இது போன்று பல செயல்கள் அல்லாஹ்வுடன் சேர்த்து கூறப்பட்டுள்ளன. உதாரணமாக : அல்லாஹ் மறுமையில் வருவான், அல்லாஹ் ஆச்சரியப்படுகின்றான், அல்லாஹ் சிரிக்கின்றான், அல்லாஹ் விரும்புகிறான், அல்லாஹ் கோபப்படுகின்றான், இன்னும் இவ்வாறு குர்ஆனிலும் ஸஹீஹான நபிமொழிகளிலும் கூறப்பட்ட அல்லாஹ்வின் செயல்களை நாம் அவனது தகுதிக்கு ஏற்ப நம்பிக்கை கொள்ள வேண்டும்.

யாராவது அவற்றை உள்ளது உள்ளபடியே நம்பிக்கை கொள்வது குஃப்ரை உண்டாக்கி விடும் என்று கூறினால் அவர்கள் வழிகேடர்கள் ஆவார்கள்.

எதை நம்புவது நிராகரிப்பாக ஆகுமோ அதை அல்லாஹ்வும் அவனது தூதரும் நமக்கு கற்றுக்கொடுப்பார்களா?

ஈமானை கெடுக்கும்படியான, அல்லாஹ்விற்கு தகுதி இல்லாததை அல்லாஹ்வும் அவனது தூதரும் நமக்கு கற்றுக்கொடுப்பார்களா?

அல்லாஹ்வைப் பற்றி அவன்தான் மிக அறிந்தவன். அவனது தூதர் அவர்கள் மிக அறிந்தவர்கள் ஆவார்கள்.

ஆகவே, நமது சிறப்பிற்குரிய முன்னோர்களான ஸஹாபாக்கள், தாபியீன்கள், நேர்வழி பெற்ற நான்கு இமாம்கள், இன்னும் முற்கால நல்லோர் எப்படி நம்பிக்கை கொண்டார்களோ அப்படியே நாமும் நம்பிக்கை கொள்ள வேண்டும்.

﴿وَلَمْ يَكُنْ لَهُ كُفُوًا أَحَدٌ ۝﴾

பொருள் : இன்னும் அவனுக்கு யார் ஒருவரும் நிகரானவராக இல்லை. (அல்குர்ஆன் 112 : 4)

என்ற வசனத்திற்கு ஏற்ப அல்லாஹ்வை அவனது உள்ளமையில் நிகரற்றவனாக நாம் நம்பிக்கை கொள்வது போன்று,

﴿لَيْسَ كَمِثْلِهِ شَيْءٌ وَهُوَ السَّمِيعُ الْبَصِيرُ○﴾

பொருள் : அவனுக்கு ஒப்பானது ஒன்றுமில்லை. அவன் (அனைத்தையும்) செவியுறுபவன், உற்று நோக்குபவன் ஆவான். (அல்குர்ஆன் 42 : 11)

என்ற வசனத்திற்கு ஏற்ப அல்லாஹ்வின் தன்மைகள், செயல்கள் படைப்புகளின் செயல்களுக்கும் தன்மைகளுக்கும் ஒப்பானவை அல்ல. படைப்புகளின் செயல்கள், தன்மைகள் படைக்கப்பட்டவை. அவை படைப்பாளனாகிய அல்லாஹ்வின் செயல்களுக்கும் தன்மைகளுக்கும் ஒருபோதும் ஒப்பாக ஆக முடியாது. ஆகவே, படைப்புகளின் செயல்களையும் தன்மைகளையும் அடிப்படையாக வைத்து அல்லாஹ்வின் செயல்கள், இன்னும் தன்மைகளை நாம் விளங்க முயற்சிக்க கூடாது. அதனால் குழப்பமும் குஃப்ரும்தான் ஏற்படும். நமது அறிவைக் கொண்டு அல்லாஹ்வின் செயல்கள் இன்னும் தன்மைகளில் குதர்க்கம் செய்யக் கூடாது. அவற்றில் புரிந்ததை நாம் புரிந்து கொள்ள வேண்டும். நமக்கு புரியாதவற்றின் ஞானத்தை அல்லாஹ்விடமும் அவனது ரஸூல் ﷺ அவர்களிடமும் நாம் திருப்பி விட வேண்டும். இன்னும் மேலதிகமான விளக்கங்களை விரிவான நூலில் படித்து அறியவும்.

பல நபித்தோழர்களும் தாபியீன்களும் அறிவிக்கின்ற இந்த ஹதீஸை யார் மறுப்பார்களோ, அல்லது அதில் குதர்க்கம் செய்வார்களோ அல்லது அதில் மாற்றுப் பொருள் கூறுவார்களோ அவர்கள் பகிரங்கமான, வழிகேட்டில்தான் இருக்கின்றனர். அவர்கள் இம்மையிலும் மறுமையிலும் நஷ்டத்தையும் கேவலத்தையும் சந்திப்பார்கள். அல்லாஹ் பாதுகாப்பானாக!

மார்க்கம் அறிவிக்கப்பட்டதாகும். கண்டுபிடிக்கப்பட்டதல்ல. குர்ஆனும், ஹதீஸும் கூறுவதுதான் மார்க்கம் ஆகும். மனிதர்களின் தத்துவங்களும் சிந்தனைகளும் அறிவுகளும் முடிவு செய்வது மார்க்கம் ஆகாது. நபி ﷺ அவர்களின் தோழர்கள் இன்னும்

அவர்களின் வழிவந்த தாபியீன்கள்தான் மார்க்கத்தில் நாம் பின்பற்ற தகுதியானவர்கள். அவர்களின் கருத்துகள் மட்டுமே மார்க்க ஆதாரங்களுக்கு விளக்கமாக ஏற்றுக் கொள்ளப்படும். தத்துவவாதிகள், குதர்க்கவாதிகள், இன்னும் சிந்தனைவாதிகள் ஆகிய இவர்களின் யாருடைய கூற்றும் மார்க்க ஆதாரங்களுக்கு விளக்கமாக ஆக முடியாது. நமது அந்த முன்னோர் மார்க்கத்தில் நமக்கு தேவையான அனைத்தையும் தெளிவாக விளக்கி விட்டனர். ஆகவே, ஈமான் எப்படி கொள்ள வேண்டும், இபாதத்துகள் எப்படி செய்ய வேண்டும் என்று புதிதாக எதையும் பின்னோர் நமக்கு சொல்லித்தர வேண்டிய அவசியம் இல்லை. மார்க்கம் நபி ﷺ அவர்களின் இறப்புக்கு முன்னர் முழுமையாக்கப் பட்டுவிட்டது. அதை ஸஹாபாக்கள் அறிந்து கொண்டார்கள். ஆகவே அவர்கள் அறியாதது, அவர்கள் கூறாதது ஒருபோதும் மார்க்கமாக ஆகாது.

**சுருக்கம் :**

மார்க்கத்தில் ஆதாரங்களை வைத்துதான் ஒன்றை ஏற்பதா அல்லது இல்லையா என்று முடிவு செய்வோம். ஒரு கருத்துக்கு ஆதாரம் இருக்க வேண்டும். அந்த ஆதாரம் சரியாக இருக்க வேண்டும்.

ஓர் ஆதாரம் சரியாக ஆகுவது அதன் அறிவிப்பாளரை வைத்துதான் முடிவு செய்யப்படும். அறிவிப்பாளர் ஒருவராக இருந்தாலும் அவர் நம்பத்தகுந்தவராக இருந்தால், அவர் அறிவிக்கின்ற ஹதீஸை ஏற்று நம்பிக்கை கொள்ள வேண்டும்.

நம்பத் தகுந்த அறிவிப்பாளர்கள் அறிவிக்கின்ற ஆதாரங்களை ஏற்க மறுப்பது முடிவில் மிகப் பெரிய சந்தேக நிலைக்கு கொண்டுபோய் விட்டுவிடும். பிறகு, அந்த மறுப்பாளர்களை மறுமையில் தோல்வியும் கேவலமும் சூழ்ந்து கொள்ளும். அல்லாஹு தஆலா பாதுகாப்பானாக! ஆமீன்.

முன்சென்ற 11, 12, 13, 14 ஆகிய நான்கு கவிதைகள் மற்றும் அவற்றின் விளக்க உரையில் கூறப்பட்ட கருத்துகளிலிருந்து நேர்வழிக்கு

முரணான பல வழிகேடுகளை நாம் புரிந்து கொள்ள முடியும். அந்த வழிகேடுகளை சுருக்கமாக இப்போது பார்ப்போம்.

**வழிகேடுகள் :**

1. அல்லாஹ்வின் செயல்கள் சார்ந்த தன்மைகளை ஏற்க மறுப்பது.
2. மார்க்க ஆதாரங்களுக்கு தத்துவங்களின் அடிப்படையில் மாற்றுப் பொருள் கூறுவது.
3. மார்க்க ஆதாரங்களில் கல்வி ஞானமின்றி குதர்க்கம் செய்வது.
4. நேர்வழி நடந்த நபித்தோழர்கள் அறிவித்த ஹதீஸ்களை அவர்கள் அறிவித்தவாறு ஏற்க மறுப்பது.
5. அல்லாஹ்வின் கண்ணியத்தையும் மதிப்பையும் தனது சிற்றறிவுக்கு ஏற்ப மதிப்பிட்டுவிட்டு, பிறகு மார்க்கத்தின் சரியான ஆதாரங்களில் குறைக் கூறி, அவற்றை நம்புவது அல்லாஹ்வை கண்ணியப்படுத்துவதாக ஆகாது என்று கூறுவது. அதாவது, அறிவு கூறும்படி நம்பிக்கை கொள்வது அல்லாஹ்வை கண்ணியப்படுத்துவது என்றும் மார்க்கம் கூறுகின்ற விதத்தில் அல்லாஹ்வை நம்பிக்கை கொள்வது அவனை நிராகரிப்பது, அல்லது வழிகேடு என்றும் கூறுவது.
6. அல்லாஹ்வையும் அவனது அழகிய பெயர்களையும் உயர்வான பண்புகளையும் அறிவதில் குர்ஆனையும் ஸுன்னாவையும் ஆதாரமாக ஆக்காமல் தத்துவங்களை ஆதாரமாக ஆக்குவது.
7. அல்லாஹ்வைப் பற்றி கூறப்படும்போது, அது எப்படி என்று கேள்வி கேட்பது. அல்லாஹ்வின் ஸிஃபாத்துகளில் அறிவை நுழைப்பது.
8. ஹதீஸ்களை முழுமையாக நம்புவதை பரிகாசம் செய்வது.
9. ஸஹீஹான ஹதீஸ்கள் அறிவுக்கு முரணாக இருக்கலாம் என்று கூறுவது.

10. ஹதீஸ்களை ஏற்பதற்கு அறிவையும் அறிவியலையும் ஆதாரமாக ஆக்குவது.

இன்னும் இதுபோன்ற வழிகேடான பல கருத்துக்களும் குதர்க்கங்களும் தங்களை அறிஞர்கள், அழைப்பாளர்கள், சீர்திருத்த வாதிகள் என்று கூறுவோரிடம் நிரம்பி இருக்கின்றன. அவர்களின் வழிகேட்டிலிருந்து அல்லாஹ் நம்மை பாதுகாப்பானாக! ஆமீன். அல்லாஹ் நம்மை நேர்வழி நடத்துவானாக! ஆமீன்.

---------------------

وَقُلْ إِنَّ خَيْرَ النَّاسِ بَعْدَ مُحَمَّدٍ
وَزِيْرَاهُ قِدْمًا ثُمَّ عُثْمَانُ الْاَرْجَحُ

**பொருள் :**

இன்னும் நீ சொல்! நிச்சயமாக முஹம்மதுக்கு பின்னர் மக்களில் மிக சிறந்தவர்கள் ஆரம்ப காலத்தில் இருந்தே அவருக்கு மந்திரிகளாக இருந்த அந்த இருவர் ஆவார்கள். பிறகு, உஸ்மான் ஆவார். இதுதான் மிக ஏற்றமான கருத்தாகும்.

**கருத்து :**

நபி ﷺ அவர்களுக்கு பின்னர் இந்த உம்மத்தில் மிக சிறந்தவர்கள் முதலாவதாக அபூ பக்ரும், இரண்டாவதாக உமரும் ஆவார்கள். ؓ அல்லாஹ் அவ்விருவரையும் பொருந்திக் கொள்வானாக! ஆமீன். இவ்விருவரும் நபி ﷺ உடைய மந்திரிகளாக இருந்தார்கள். இந்த இரு தோழர்களுக்குப் பிறகு மூன்றாவதாக உஸ்மான் ؓ சிறப்பிற்குரியவர் ஆவார். இதுதான் அஹ்லுஸ் ஸுன்னா அறிஞர்களிடம் மிக ஏற்றமான, மிக வலுவான, உறுதியான கருத்தாகும்.

--------------------

وَرَابِعُهُمْ خَيْرُ الْبَرِيَّةِ بَعْدَهُمْ
عَلِيٌّ حَلِيْفُ الْـخَيْرِ بِالْـخَيْرِ مُنْجِحُ

**பொருள் :**

அவர்களில் நான்காமவர், அவர்களுக்கு பின்னர் மக்களில் மிக சிறந்தவரான அலீ ஆவார். அவர் நன்மையின் தோழர், சிறப்புகளை அதிகம் வென்றெடுத்தவர் ஆவார்.

**கருத்து :**

இந்த உம்மத்தில் நான்காவதாக சிறப்பிற்கும் கண்ணியத்திற்கும் உரியவர் அலீ ﵁ ஆவார். அல்லாஹ், இவருக்கு பல சிறப்புகளையும் மதிப்புகளையும் கொடுத்து கண்ணியப்படுத்தி இருக்கின்றான். அலீ ﵁ அவர்கள் எப்போதும் நன்மையோடும் நேர்மையோடும், நீதத்தோடும் இருப்பவர். மேலும் அவர் எப்போதும் நன்மையை வென்றெடுப்பார். அவரின் ஈமானும் நேர்மையும் வீரமும் அவரின் வெற்றிக்குக் காரணமாக இருந்தன.

---------------------

وَإِنَّهُمُ وَالرَّهْطُ لَارَيْبَ فِيهِمُ
عَلَى نُـجُبِ الْفِرْدَوْسِ فِي الْـخُلْدِ تَسْرَحُ

**பொருள் :**

நிச்சயமாக அவர்களும் இன்னும் அந்த (நல்லக்) குழுவும் (ஒளியுடன்) நிரந்தரமாக ஃபிர்தவ்ஸ் சொர்க்கத்தில் சுற்றி வருகின்ற ஒட்டகங்கள் மீது இருப்பார்கள்.

**கருத்து :**

மேற்கூறப்பட்ட அபூ பக்ர், உமர், உஸ்மான், அலி ﷺ ஆகிய நான்கு தோழர்களுடன் மேலும் ஆறு தோழர்கள் இருக்கின்றார்கள். அவர்கள், இவ்வுலகில் நபியவர்களின் வாயிலாக சொர்க்கத்தைக் கொண்டு நற்செய்தி வழங்கப்பட்டவர்கள் ஆவார்கள். இந்த மீதமுண்டான ஆறு தோழர்களைதான் குழு என்று ஆசிரியர் குறிப்பிடுகிறார். சொர்க்கத்தை கொண்டு நற்செய்தி பெறுதல் என்ற விஷயத்தில் இந்த பத்து தோழர்களும் ஒன்று சேர்வதால் இவர்களை குழு என்று ஆசிரியர் வர்ணிக்கிறார்.

--------------------

سَعِيْدٌ وَسَعْدٌ وَابْنُ عَوْفٍ وَطَلْحَةٌ
وَعَامِرُ فِهْرٍ وَالزُّبَيْرُ الْـمُمَدَّحُ

**பொருள் :**

(அந்தக் குழு :) ஸயீது, ஸஅது, (அப்துர் ரஹ்மான்) இப்னு அவ்ஃப், தல்ஹா, ஃபிஹ்ர் குடும்பத்தை சேர்ந்த ஆமிர் (அபூ உபைதா இப்னுல் ஜர்ராஹ்), இன்னும் நற்புகழுக்குரிய ஸுபைர் ஆவார்கள்.

**கருத்து :**

நான்கு கலிஃபாக்கள் போக மீதமுள்ள ஆறு தோழர்கள் பின்வருமாறு: 5. ஸுபைர் இப்னுல் அவ்வாம் அல் அசதி அல்குறஷி ﵁ 6. தல்ஹா இப்னு உபைதில்லாஹ் அத் தைமி அல்குறஷி ﵁ 7. அப்துர் ரஹ்மான் அஸ் ஸுஹ்ரி அல் குறஷி ﵁ 8. சயீது இப்னு சைது அல் அதவி அல் குறஷி ﵁ 9. சஅது இப்னு அபீ வக்காஸ் அஸ் ஸுஹ்ரி அல் குறஷி ﵁ 10. அபூ உபைதா இப்னுல் ஜர்ராஹ் அல் ஃபிஹ்ரி அல் குறஷி ﵁.

ஸுபைர் ﵁ அவர்களுக்கு அநேக சிறப்புகள் கூறப்பட்டுள்ளன. அவ்வாறே, இங்கு கூறப்பட்ட இவர்கள் எல்லோரும் மதிப்பிற்கும் சிறப்பிற்கும் தகுதியானவர்கள் ஆவார்கள்.

--------------------

وَقُلْ خَيْرَ قَوْلٍ فِي الصَّحَابَةِ كُلِّهِمْ
وَلَا تَكُ طَعَّانًا تَعِيْبُ وَ تَـجْرَحُ

**பொருள் :**

நபித்தோழர்கள் எல்லோரிலும் நல்ல கூற்றை நீ கூறு! அவர்களை வசைப்பாடி, குறைபேசி, காயப்படுத்துகின்றவராக நீ அறவே இருக்காதே!

**கருத்து :**

ஸஹாபாக்கள் எல்லோரையும் நாம் நல்லதைக் கொண்டே நினைவு கூற வேண்டும். அவர்களை குறை கூறுவது, அவர்களை விமர்சனம் செய்வது, அவர்களின் மதிப்பை குறைக்கும் விதமாக பேசுவது, அவர்களை ஏசுவது அறவே கூடாது.

---------------------

فَقَدْ نَطَقَ الْوَحْيُ الْـمُبِيْنُ بِفَضْلِهِمْ
وَفِي الْفَتْحِ آيٌ فِي الصَّحَابَةِ تَمْدَحُ

**பொருள் :**

மிகத் தெளிவான வஹ்யு அவர்களின் சிறப்பை திட்டமாக கூறி இருக்கின்றது. ஃபத்ஹ் அத்தியாயத்தில் நபித்தோழர்களை புகழ்கின்ற வசனங்கள் உள்ளன.

**கருத்து :**

அல்குர்ஆன் பல இடங்களிலும் இவர்களின் சிறப்பை நமக்கு எடுத்துக் கூறுகின்றது. அவற்றில் குறிப்பாக சூரா அல் ஃபத்ஹ் அத்தியாயத்தில் ஸஹாபாக்கள் அனைவரையும் புகழ்ந்து வருகின்ற வசனங்கள் மிக குறிப்பிடத் தக்கவையாகும். அவை : 48 வது அத்தியாயத்தில் 4, 5, 9, 10, 18, 26, 27, 29 ஆகிய வசனங்களாகும்.

**விளக்கம் :**

16, 17, 18, 19, 20 ஆகிய கவிதைகளில் ஸஹாபாக்கள் பற்றி கூறப்பட்ட கொள்கையின் சுருக்கமான விளக்கம் பின்வருமாறு.

அல்லாஹு தஆலா அவனது அடியார்களில் அவன் விரும்பியவர்களை அவன் தேர்ந்தெடுத்து கண்ணியப்படுத்துகின்றான்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான் :

﴿وَرَبُّكَ يَخْلُقُ مَا يَشَاءُ وَيَخْتَارُ﴾

பொருள் : (நபியே!) உமது இறைவன், தான் விரும்பியவர்களை

படைத்து(த் தன் தூதுக்காக அவர்களில்) தான் விரும்பியவர்களைத் தேர்ந்தெடுக்கிறான். (அல்குர்ஆன் 28 : 68)

மனிதர்களில் ரஸூல்மார்களையும் நபிமார்களையும் தேர்ந்தெடுத்தான். நபிமார்களை தனது வஹ்யைக் கொண்டு கண்ணியப்படுத்தியதுடன் பல அற்புதங்களையும் அவர்களுக்கு கொடுத்து சிறப்பித்தான். பிறகு அவர்களில் விசேஷமாக சிலரை தேர்ந்தெடுத்தான். அவர்கள் முஹம்மது, இப்ராஹீம், மூஸா, ஈஸா, நூஹ் عليهم السلام ஆவார்கள்.

நமது நபி ﷺ அவர்கள் நபிமார்கள், ரஸூல்மார்கள் அனைவரையும் பார்க்கிலும் அல்லாஹ்விடம் மிகவும் கண்ணியத்திற்குரியவர்கள். நபி ﷺ அவர்கள் மீது மற்ற நபிமார்களைப் பார்க்கிலும் அல்லாஹ்வின் அருள் மிக அதிகம் என்று அல்லாஹ் கூறுகின்றான்.

இது குறித்த சில வசனங்களை பார்ப்போம்.

﴿إِنَّ اللَّهَ اصْطَفَىٰ آدَمَ وَنُوحًا وَآلَ إِبْرَاهِيمَ
وَآلَ عِمْرَانَ عَلَى الْعَالَمِينَ۝﴾

பொருள் : நிச்சயமாக அல்லாஹ் ஆதமையும், (அவருக்குப் பின்னர்) நூஹையும் இப்ராஹீமுடைய குடும்பத்தையும், இம்ரானுடைய குடும்பத்தையும் அகிலத்தாரைவிட மேலாக (உயர்வாக) தேர்ந்தெடுத்தான். (அல்குர்ஆன் 3 : 33)

﴿وَإِنَّهُمْ عِنْدَنَا لَمِنَ الْمُصْطَفَيْنَ الْأَخْيَارِ۝﴾

பொருள் : அவர்கள், நம்மிடத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட நல்லடியார்களில் உள்ளவர்களாகவே இருந்தனர்.
(அல்குர்ஆன் 38 : 47)

﴿وَكُلًّا فَضَّلْنَا عَلَى الْعَالَمِينَ۝﴾

பொருள் : (இதற்கு முன் சென்ற வசனங்களில் கூறப்பட்ட

நபிமார்களாகிய) இவர்கள் அனைவரையும் உலகத்திலுள்ள அனைவரை பார்க்கிலும் நாம் மேன்மையாக்கியும் வைத்தோம். (அல்குர்ஆன் 6 : 86)

﴿تِلْكَ الرُّسُلُ فَضَّلْنَا بَعْضَهُمْ عَلَىٰ بَعْضٍ مِنْهُمْ مَنْ كَلَّمَ اللّٰهُ وَرَفَعَ بَعْضَهُمْ دَرَجَاتٍ﴾

பொருள் : (நம்மால் அனுப்பப்பட்ட) அத்தூதர்கள் (அனைவரும் ஒரே பதவி உடையவர்கள் அல்லர்.) அவர்களில் சிலரை, சிலரைவிட நாம் மேன்மையாக்கி இருக்கிறோம். அவர்களில் சிலருடன் அல்லாஹ் (நேரடியாகப்) பேசியிருக்கிறான். அவர்களில் சிலரை (சிலரைவிட) பதவியில் உயர்த்தியும் இருக்கிறான். (அல்குர்ஆன் 2 : 253)

﴿وَإِذْ أَخَذْنَا مِنَ النَّبِيِّينَ مِيثَاقَهُمْ وَمِنْكَ وَمِنْ نُوحٍ وَإِبْرَاهِيمَ وَمُوسَىٰ وَعِيسَى ابْنِ مَرْيَمَ وَأَخَذْنَا مِنْهُمْ مِيثَاقًا غَلِيظًا۝﴾

பொருள் : (நபியே! நம் தூதை எடுத்துரைக்கும்படி பொதுவாக) நபிமார்களிடமும் (சிறப்பாக) உம்மிடமும், நூஹ், இப்ராஹீம், மூஸா, மர்யமுடைய மகன் ஈஸாவிடமும் வாக்குறுதி வாங்கியதை நினைவு கூர்வீராக, மிக்க உறுதியான வாக்குறுதியையே இவர்களிடமும் நாம் எடுத்திருக்கிறோம். (அல்குர்ஆன் 33 : 7)

﴿أُولٰئِكَ الَّذِينَ أَنْعَمَ اللّٰهُ عَلَيْهِمْ مِنَ النَّبِيِّينَ مِنْ ذُرِّيَّةِ آدَمَ وَمِمَّنْ حَمَلْنَا مَعَ نُوحٍ وَمِنْ ذُرِّيَّةِ إِبْرَاهِيمَ وَإِسْرَائِيلَ وَمِمَّنْ هَدَيْنَا وَاجْتَبَيْنَا إِذَا تُتْلَىٰ عَلَيْهِمْ آيَاتُ الرَّحْمَٰنِ خَرُّوا سُجَّدًا وَبُكِيًّا۝﴾

பொருள் : (ஆகவே, மேற்கூறப்பட்ட) இவர்கள் அனைவரும் அல்லாஹ் அருள் புரிந்த நபிமார்களாவர். இவர்கள் ஆதமுடைய சந்ததியிலும், நூஹ்வுடன் நாம் (கப்பலில்) ஏற்றிக் கொண்டவர்களி(ன்

சந்ததியி)லும், இப்றாஹீமுடைய சந்ததியிலும், இஸ்ராயீல் (என்னும் யஅகூப்)உடைய சந்ததியிலும் உள்ளவர்களாவர். மேலும் நாம் தேர்ந்தெடுத்து நேரான வழியில் நடத்தியவர்களிலும் உள்ளவர்கள். அவர்கள் மீது ரஹ்மானுடைய வசனங்கள் ஓதப்பட்டால் (அதற்குப் பயந்து) அழுதவர்களாக (இறைவனுக்குச்) சிரம் பணிந்து தொழுவார்கள். (அல்குர்ஆன் 19 : 58)

﴿وَجَعَلْنَاهُمْ أَئِمَّةً يَهْدُونَ بِأَمْرِنَا وَأَوْحَيْنَا إِلَيْهِمْ فِعْلَ الْخَيْرَاتِ
وَإِقَامَ الصَّلَاةِ وَإِيتَاءَ الزَّكَاةِ وَكَانُوا لَنَا عَابِدِينَ۝﴾

பொருள் : மேலும், நம் கட்டளைகளை (மக்களுக்கு) ஏவி நேரான வழியை அறிவிக்கக்கூடிய தலைவர்களாகவும் (நபிமார்களாகிய) அவர்களை ஆக்கினோம். நன்மையான காரியங்களைச் செய்யுமாறும், தொழுகையைக் கடைப்பிடிக்குமாறும், 'ஜகாத்' கொடுத்து வருமாறும் அவர்களுக்கு வஹ்யு மூலம் அறிவித்தோம். அவர்கள் அனைவரும் நம்மையே வணங்கிக் கொண்டிருந்தார்கள். (அல்குர்ஆன் 21 : 73)

நபிமார்களையும் ரஸூல்மார்களையும் சிறப்பித்து கூறுகின்ற பல நூறு வசனங்கள் அல்குர்ஆனில் உள்ளன. உதாரணத்திற்காக சில வசனங்களை மட்டும் நாம் இங்கு கூறினோம். மேலும் நபிமார்கள் பற்றி அறிய பின் வரும் வசனங்களை படித்து அறியவும்.

6 : 74-90, 7 : 53-93, 10 : 71-93, 11 : 25-100, 9 : 1-58, 21 : 51-73, 26 : 10-191, 37 : 75-148, 38 : 17-54. சூரா யூஸுஃபின் பல வசனங்கள், சூரா இப்ராஹீமின் வசனங்கள், சூரா ஹிஜ்ர் உடைய வசனங்கள்.

நபிமார்களின் சிறப்புகளையும் வரலாறுகளையும் விவரிக்கின்ற இன்னும் பல நூறு வசனங்கள் உள்ளன. குர்ஆனோடு தொடர்புள்ளவர்களுக்கு அவற்றை தேடி, அறிவது இலகுவாகும்.

நபிமார்களுக்கு பிறகு மக்களில் சிறந்தவர்கள் நபிமார்களின் தோழர்கள் ஆவார்கள்.

மேலும், மற்ற நபிமார்களின் உம்மத்துகளைப் பார்க்கிலும் நமது நபியவர்களின் உம்மத்தை அல்லாஹ் சிறப்பித்தான். எல்லா உம்மத்துகளைப் பார்க்கிலும் இந்த உம்மத்திற்கு மிக அதிகமான உயர்வுகளையும் மதிப்புகளையும் அல்லாஹ் வழங்கினான்.

இறுதியாக, நபிமார்களுக்கு பிறகு எல்லா நபிமார்களின் தோழர்கள், மற்றும் உம்மத்துகளைப் பார்க்கிலும் நமது நபி ﷺ அவர்களின் தோழர்களை அல்லாஹ் தேர்ந்தெடுத்தான். அந்த தோழர்களுக்கு உம்மத்துகளில் யாருக்கும் கொடுக்காத மதிப்பையும் மரியாதையையும் மாண்புகளையும் சிறப்புகளையும் உயர் பதவிகளையும் கண்ணியங்களையும் அந்தஸ்த்துகளையும் அல்லாஹ் வழங்கினான்.

மேற்கூறப்பட்ட விளக்கத்திற்கான ஆதாரங்களைப் பார்ப்போம்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான் :

﴿كُنْتُمْ خَيْرَ أُمَّةٍ أُخْرِجَتْ لِلنَّاسِ﴾

பொருள் : (நம்பிக்கையாளர்களே!) நீங்கள்தான், மனிதர்களில் தோன்றிய வகுப்பார்களிலெல்லாம் மிக்க மேன்மையானவர்கள். (அல்குர்ஆன் 3 : 110)

**ஸஹாபாக்கள் உடைய சிறப்புகள் :**

அல்லாஹ் இந்த உம்மத்தில் நபி ﷺ அவர்களின் தோழர்களை தேர்ந்தெடுத்தான்.

அவர்களை இஸ்லாமின் முதல் தலைமுறையினராக ஆக்கி சிறப்பித்தான்.

நபி ﷺ அவர்களின் நட்பையும் தோழமையையும் அவர்களுக்கு வழங்கினான்.

இந்த மார்க்கத்திற்கு முதன் முதலாக தங்கள் உயிர், பொருளை அர்ப்பணிக்கின்ற நற்பாக்கியத்தையும் அவர்களுக்கு தந்தான்.

குர்ஆன் இறங்கும்போது அதனுடன் வாழுகின்ற மேன்மையை அவர்களுக்கு வழங்கினான்.

அவர்களின் சிறப்பையும் மேன்மையையும் விளக்கும் விதமாக பல வசனங்களையும் அல்குர்ஆனில் இறக்கி அவர்களை அல்லாஹ் புகழ்ந்தான்.

அவர்களின் தூய்மையான எண்ணத்திற்கும் உறுதியான ஈமானுக்கும் தக்வாவிற்கும் அல்லாஹ் சாட்சி கூறினான்.

அவர்களின் பாவங்களையும் தவறுகளையும் தாம் மன்னித்து விட்டதாக அல்லாஹ் நமக்கு அறிவித்தான்.

நபி ﷺ அவர்களுடன் ஹிஜ்ரத்திலும் நுஸ்ரத்திலும் பங்குபெற்ற யாரும் மார்க்கத்தைவிட்டு திரும்பவில்லை என்பதற்கு அல்லாஹ் சான்று பகர்ந்தான்.

அவர்கள் ஈமானில் உண்மையானவர்கள், உறுதியானவர்கள் என்று அல்லாஹ் அவர்களைப் பற்றி நமக்கு எடுத்துரைத்தான்.

நாம் அவர்களை பின்பற்றினால் நமக்கு அல்லாஹ்வின் மன்னிப்பும் சொர்க்கமும் உண்டு என்று நமக்கு வாக்களித்தான்.

அவர்களை நாம் நேசிக்க வேண்டும்; அவர்களுக்காக நாம் நல்ல துஆக்களை எப்போதும் கேட்க வேண்டும் என்று அவன் நமக்கு கட்டளை இட்டான்.

மேற்கூறப்பட்ட சிறப்புகள், மேன்மைகள், தகுதிகள் பின் வருகின்ற வசனங்கள் மற்றும் நபிமொழிகளிலிருந்து எடுக்கப்பட்டவை ஆகும்.

ஒவ்வொரு வசனத்தையும் நிதானமாக படித்து இறை அச்சத்தோடு, நேர்வழியை தேடியவர்களாக நாம் சிந்தித்துப் பார்த்தால் கண்டிப்பாக நமக்கு நபித்தோழர்களுக்கு அல்லாஹ்விடமும் அவனது தூதரிடமும் இருக்கின்ற கண்ணியம் புரிய வரும்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான் :

﴿لَقَدْ مَنَّ اللّٰهُ عَلَى الْمُؤْمِنِينَ إِذْ بَعَثَ فِيهِمْ رَسُولًا مِنْ أَنْفُسِهِمْ يَتْلُو عَلَيْهِمْ آيَاتِهِ وَيُزَكِّيهِمْ وَيُعَلِّمُهُمُ الْكِتَابَ وَالْحِكْمَةَ وَإِنْ كَانُوا مِنْ قَبْلُ لَفِي ضَلَالٍ مُبِينٍ۝﴾

பொருள் : அல்லாஹ், நம்பிக்கையாளர்களின் மீது மெய்யாகவே அருள் புரிந்திருக்கிறான். அவர்களுக்காக ஒரு தூதரை (அதுவும்) அவர்களில் இருந்தே அனுப்பினான். அவர் அவர்களுக்கு அல்லாஹ்வுடைய வசனங்களை ஓதிக் காண்பித்து, அவர்களை பரிசுத்தமாக்கியும் வைக்கிறார். மேலும், அவர்களுக்கு வேதத்தையும், ஞானத்தையும் கற்றுக் கொடுக்கிறார். நிச்சயமாக அவர்கள் இதற்கு முன் பகிரங்கமான வழிகேட்டில்தான் இருந்தனர்.

(அல்குர்ஆன் 3 : 164)

﴿هُوَ الَّذِي بَعَثَ فِي الْأُمِّيِّينَ رَسُولًا مِنْهُمْ يَتْلُو عَلَيْهِمْ آيَاتِهِ وَيُزَكِّيهِمْ وَيُعَلِّمُهُمُ الْكِتَابَ وَالْحِكْمَةَ وَإِنْ كَانُوا مِنْ قَبْلُ لَفِي ضَلَالٍ مُبِينٍ ۝ وَآخَرِينَ مِنْهُمْ لَمَّا يَلْحَقُوا بِهِمْ وَهُوَ الْعَزِيزُ الْحَكِيمُ ۝ ذٰلِكَ فَضْلُ اللّٰهِ يُؤْتِيهِ مَنْ يَشَاءُ وَاللّٰهُ ذُو الْفَضْلِ الْعَظِيمِ۝﴾

பொருள் : கல்வி அறிவில்லாத (அரபு) மக்களில் அவர்களில் உள்ள ஒருவரை அவன் (தன்) தூதராக அனுப்பி வைத்தான். அவர்கள் இதற்கு முன்னர் பகிரங்கமான வழிகேட்டில் இருந்தபோதிலும், அத்தூதர் அவர்களுக்கு அல்லாஹ்வுடைய வசனங்களை ஓதிக்காண்பித்து, அவர்களைப் பரிசுத்தமாக்கி வைத்து, அவர்களுக்கு வேதத்தையும் ஞானத்தையும் கற்றுக் கொடுக்கிறார். (தற்காலமுள்ள இவர்களுக்காகவும்) இதுவரை இவர்களுடன் சேராத இவர்கள் இனத்தில் (பிற்காலத்தில் வரும்) மற்றவர்களுக்காகவும் (அத்தூதரை

அனுப்பிவைத்தான்). அவன் (அனைவரையும்) மிகைத்தவனும் ஞானமுடையவனும் ஆவான். இது அல்லாஹ்வுடைய அருளாகும். அவன் விரும்பியவர்களுக்கே இதைக் கொடுக்கிறான். அல்லாஹ் மகத்தான அருளுடையவன் ஆவான். (அல்குர்ஆன் 62 : 2-4)

﴿الَّذِينَ آمَنُوا وَهَاجَرُوا وَجَاهَدُوا فِي سَبِيلِ اللهِ بِأَمْوَالِهِمْ وَأَنْفُسِهِمْ أَعْظَمُ دَرَجَةً عِنْدَ اللهِ وَأُولٰئِكَ هُمُ الْفَائِزُونَ۝﴾

பொருள் : எவர்கள், நம்பிக்கை கொண்டு (தங்கள்) ஊர்களிலிருந்து வெளியேறி, அல்லாஹ்வுடைய பாதையில் தங்கள் பொருள்களையும் உயிர்களையும் தியாகம் செய்து போர் புரிகின்றனரோ அவர்கள் அல்லாஹ்விடத்தில் மகத்தான பெரும் பதவி பெற்றவர்கள். இவர்கள்தான் வெற்றி அடைந்தவர்கள். (அல்குர்ஆன் 9 : 20)

﴿لٰكِنِ الرَّسُولُ وَالَّذِينَ آمَنُوا مَعَهُ جَاهَدُوا بِأَمْوَالِهِمْ وَأَنْفُسِهِمْ وَأُولٰئِكَ لَهُمُ الْخَيْرَاتُ وَأُولٰئِكَ هُمُ الْمُفْلِحُونَ۝﴾

பொருள் : எனினும் (அல்லாஹ்வுடைய) தூதரும், அவருடனுள்ள நம்பிக்கையாளர்களும் தங்கள் பொருள்களையும் உயிர்களையும் தியாகம் செய்து போர் புரிவார்கள். (இம்மை, மறுமையின்) நன்மைகள் அனைத்தும் இவர்களுக்குத்தான் உரியன. நிச்சயமாக இவர்கள்தான் வெற்றியாளர்கள். (அல்குர்ஆன் 9 : 88)

﴿هُوَ الَّذِي أَيَّدَكَ بِنَصْرِهِ وَبِالْمُؤْمِنِينَ۝﴾

பொருள் : அவன்தான் உம்மை தன் உதவியைக் கொண்டும் நம்பிக்கையாளர்களைக் கொண்டும் பலப்படுத்தினான். (அல்குர்ஆன் 8 : 62)

﴿لَقَدْ تَابَ اللهُ عَلَى النَّبِيِّ وَالْمُهَاجِرِينَ وَالْأَنْصَارِ الَّذِينَ اتَّبَعُوهُ

فِي سَاعَةِ الْعُسْرَةِ مِنْ بَعْدِ مَا كَادَ يَزِيغُ قُلُوبُ فَرِيقٍ مِنْهُمْ
ثُمَّ تَابَ عَلَيْهِمْ إِنَّهُ بِهِمْ رَءُوفٌ رَحِيمٌ○﴾

பொருள் : நபியின் மீது நிச்சயமாக அல்லாஹ் மன்னித்தருள் புரிந்தான். (அவ்வாறே) கஷ்டகாலத்தில் அவரைப் பின்பற்றிய முஹாஜிர்கள் மீதும், அன்ஸாரிகள் மீதும் (மன்னித்தருள் புரிந்தான்). அவர்களில் ஒரு பிரிவினருடைய உள்ளங்கள் தடுமாறிக் கொண்டிருந்த பின்னரும் அவர்களை மன்னித்(து, அவர்கள் மீது அருள்புரிந்) தான். நிச்சயமாக அல்லாஹ் அவர்கள் மீது மிக இரக்கமும் மிக்க கருணையும் உடையவன் ஆவான். (அல்குர்ஆன் 9 : 117)

﴿وَإِذَا مَا أُنْزِلَتْ سُورَةٌ فَمِنْهُمْ مَنْ يَقُولُ أَيُّكُمْ زَادَتْهُ هَذِهِ إِيمَانًا
فَأَمَّا الَّذِينَ آمَنُوا فَزَادَتْهُمْ إِيمَانًا وَهُمْ يَسْتَبْشِرُونَ○﴾

பொருள் : ஒரு (புதிய) அத்தியாயம் அருளப்பட்டால் உங்களில் யாருடைய நம்பிக்கையை இது அதிகப்படுத்தியது? என்று கேட்கக்கூடியவர்களும் அவர்களில் பலர் இருக்கின்றனர். மெய்யாகவே எவர்கள் நம்பிக்கைக் கொண்டிருக்கிறார்களோ அவர்களுடைய நம்பிக்கையை (இது) அதிகப்படுத்தியே விட்டது. இதைப் பற்றி அவர்கள் மகிழ்ச்சியடைகின்றனர்.
(அல்குர்ஆன் 9 : 124)

﴿لَا تَجِدُ قَوْمًا يُؤْمِنُونَ بِاللهِ وَالْيَوْمِ الْآخِرِ يُوَادُّونَ مَنْ حَادَّ اللهَ
وَرَسُولَهُ وَلَوْ كَانُوا آبَاءَهُمْ أَوْ أَبْنَاءَهُمْ أَوْ إِخْوَانَهُمْ أَوْ عَشِيرَتَهُمْ
أُولَئِكَ كَتَبَ فِي قُلُوبِهِمُ الْإِيمَانَ وَأَيَّدَهُمْ بِرُوحٍ مِنْهُ وَيُدْخِلُهُمْ
جَنَّاتٍ تَجْرِي مِنْ تَحْتِهَا الْأَنْهَارُ خَالِدِينَ فِيهَا رَضِيَ اللهُ عَنْهُمْ
وَرَضُوا عَنْهُ أُولَئِكَ حِزْبُ اللهِ أَلَا إِنَّ حِزْبَ اللهِ هُمُ الْمُفْلِحُونَ○﴾

பொருள் : (நபியே!) எந்த மக்கள் அல்லாஹ்வையும், மறுமை நாளையும் (மெய்யாகவே) நம்பிக்கை கொண்டிருக்கின்றார்களோ அவர்கள், அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் மாறு செய்பவர்களிடம் நேசம் கொண்டு உறவாடுவதை நீர் காண மாட்டீர். அவர்கள், தங்கள் பெற்றோர்களாக அல்லது தங்கள் சந்ததிகளாக அல்லது தங்கள் சகோதரர்களாக அல்லது தங்கள் நெருங்கிய உறவினர்களாக இருந்தாலும் சரியே! (அவர்களை நம்பிக்கையாளர்கள் நேசிக்க மாட்டார்கள்.) இவர்களுடைய உள்ளங்களில்தான் அல்லாஹ் நம்பிக்கையை பதியவைத்துத் தன் அருளைக் கொண்டும் இவர்களைப் பலப்படுத்தி வைத்திருக்கிறான். தொடர்ந்து நீரருவிகள் ஓடிக்கொண்டிருக்கும் சொர்க்கங்களிலும் இவர்களைப் புகுத்தி விடுவான். அதில் என்றென்றும் இவர்கள் தங்கி விடுவார்கள். இவர்களைப் பற்றி அல்லாஹ் திருப்தியடைவான். அவர்களும் அல்லாஹ்வைப் பற்றித் திருப்தியடைவார்கள். இவர்கள்தான் அல்லாஹ்வின் கூட்டத்தினர். நிச்சயமாக அல்லாஹ்வின் கூட்டத்தினர்தான் வெற்றி அடைந்தவர்கள் என்பதை நீங்கள் அறிந்து கொள்ளுங்கள். (அல்குர்ஆன் 58 : 22)

﴿لِلْفُقَرَاءِ الْمُهَاجِرِينَ الَّذِينَ أُخْرِجُوا مِنْ دِيَارِهِمْ
وَأَمْوَالِهِمْ يَبْتَغُونَ فَضْلًا مِنَ اللهِ وَرِضْوَانًا وَيَنْصُرُونَ اللهَ
وَرَسُولَهُ أُولَٰئِكَ هُمُ الصَّادِقُونَ○﴾

பொருள் : தங்கள் வீடுகளை விட்டும், தங்கள் பொருள்களை விட்டும் (அநியாயமாக) வெளிப்படுத்தப்பட்டு (மக்காவிலிருந்து) ஹிஜ்ரத் செய்து வந்த ஏழைகளுக்கும் அதில் பங்குண்டு. அவர்கள் அல்லாஹ்வுடைய அருளையும், அவனுடைய திருப்பொருத்தத்தையும் அடையக் கருதி (தங்கள் உயிரையும் பொருளையும் தியாகம் செய்து) அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் உதவி செய்து கொண்டிருக்கின்றனர். இவர்கள்தான் உண்மையான நம்பிக்கையாளர்கள் ஆவர்.

(அல்குர்ஆன் 59 : 8)

﴿وَالَّذِينَ تَبَوَّءُوا الدَّارَ وَالْإِيمَانَ مِنْ قَبْلِهِمْ يُحِبُّونَ مَنْ هَاجَرَ إِلَيْهِمْ وَلَا يَجِدُونَ فِي صُدُورِهِمْ حَاجَةً مِمَّا أُوتُوا وَيُؤْثِرُونَ عَلَىٰ أَنْفُسِهِمْ وَلَوْ كَانَ بِهِمْ خَصَاصَةٌ وَمَنْ يُوقَ شُحَّ نَفْسِهِ فَأُولَٰئِكَ هُمُ الْمُفْلِحُونَ○﴾

பொருள் : முஹாஜிர்கள் தங்களிடம் வருவதற்கு முன்னதாகவே (மதீனாவில்) வீட்டையும் அமைத்துக் கொண்டு நம்பிக்கையையும் ஏற்றுக் கொண்டார்களே அவர்களுக்கும் அதில் பங்குண்டு. இவர்கள் ஹிஜ்ரத்துச் செய்து தங்களிடம் வருபவர்களை அன்பாக நேசித்து வருவதுடன், (எவரும் தங்களுக்குக் கொடுக்காது) அவர்களுக்கு (மட்டும்)கொடுப்பதைப் பற்றித் தங்கள் மனதில் ஒரு சிறிதும் பொறாமை கொள்ளாதும், தங்களுக்கு அவசியம் இருந்த போதிலும், தங்கள் பொருளை அவர்களுக்குக் கொடுத்து உதவி செய்தும் வருகின்றனர். இவ்வாறு எவர்கள் (அல்லாஹ்வின் அருளால்) கஞ்சத்தனத்திலிருந்து பாதுகாக்கப்பட்டார்களோ அவர்கள்தான் வெற்றி பெற்றவர்கள் ஆவர். (அல்குர்ஆன் 59 : 9)

﴿وَالَّذِينَ جَاءُوا مِنْ بَعْدِهِمْ يَقُولُونَ رَبَّنَا اغْفِرْ لَنَا وَلِإِخْوَانِنَا الَّذِينَ سَبَقُونَا بِالْإِيمَانِ وَلَا تَجْعَلْ فِي قُلُوبِنَا غِلًّا لِلَّذِينَ آمَنُوا رَبَّنَا إِنَّكَ رَءُوفٌ رَحِيمٌ○﴾

பொருள் : எவர்கள் இவர்களுக்குப் பின் வந்தார்களோ, அவர்கள் “எங்கள் இறைவனே! எங்களையும் நீ மன்னித்தருள்! எங்களுக்கு முன் நம்பிக்கை கொண்ட எங்கள் (முஹாஜிர், அன்சாரி) சகோதரர்களையும் மன்னித்தருள்! அந்த நம்பிக்கை கொண்டவர்களைப் பற்றி எங்கள் உள்ளங்களில் குரோதங்களை உண்டு பண்ணாதே! எங்கள் இறைவனே! நிச்சயமாக நீ மிக

இரக்கமுடையவன், மகா கருணையுடையவன்" என்று பிரார்த்தனை செய்துகொண்டே இருக்கின்றனர். (அல்குர்ஆன் 59 : 10)

﴿مُحَمَّدٌ رَسُولُ اللهِ وَالَّذِينَ مَعَهُ أَشِدَّاءُ عَلَى الْكُفَّارِ رُحَمَاءُ بَيْنَهُمْ تَرَاهُمْ رُكَّعًا سُجَّدًا يَبْتَغُونَ فَضْلًا مِنَ اللهِ وَرِضْوَانًا سِيمَاهُمْ فِي وُجُوهِهِمْ مِنْ أَثَرِ السُّجُودِ ذٰلِكَ مَثَلُهُمْ فِي التَّوْرَاةِ وَمَثَلُهُمْ فِي الْإِنْجِيلِ كَزَرْعٍ أَخْرَجَ شَطْأَهُ فَآزَرَهُ فَاسْتَغْلَظَ فَاسْتَوَىٰ عَلَىٰ سُوقِهِ يُعْجِبُ الزُّرَّاعَ لِيَغِيظَ بِهِمُ الْكُفَّارَ وَعَدَ اللهُ الَّذِينَ آمَنُوا وَعَمِلُوا الصَّالِحَاتِ مِنْهُمْ مَغْفِرَةً وَأَجْرًا عَظِيمًا○﴾

பொருள் : முஹம்மது ﷺ அல்லாஹ்வுடைய திருத்தூதர் ஆவார்கள். (அவரும்)அவருடன் இருப்பவர்களும் நிராகரிப்பவர்கள் விஷயத்தில் கண்டிப்பானவர்களாகவும், தங்களுக்குள் மிக்க அன்புடையவர்களாகவும் இருப்பார்கள். குனிந்து சிரம் பணிந்து வணங்குபவர்களாக அவர்களை நீர் காண்பீர். அல்லாஹ்வின் அருளையும், அவனுடைய திருப்பொருத்தத்தையும் (எந்த நேரமும்) விரும்பியவர்களாக இருப்பார்கள். அவர்களுடைய அடையாளமாவது : அவர்களுடைய முகங்களில் சிரம் பணி(ந்து வணங்கு)வதின் அடையாளம் இருக்கும். இதுவே தவ்றாத் (என்னும் வேதத்)தில் உள்ள அவர்களின் வர்ணிப்பு. இன்ஜீலில் அவர்களுக்குள்ள உதாரணமாவது : ஒரு பயிரை ஒத்திருக்கிறது. அப்பயிர் (பசுமையாகி, வளர்ந்து) உறுதிப்படுகிறது. பின்னர், அது தடித்துக் கனமாகிறது. பின்னர், விவசாயிகளுக்கு ஆச்சரியம் கொடுக்கும் விதத்தில் (வளர்ந்து,) அது தன் தண்டின் மீது நிமிர்ந்து நிற்கிறது. இவர்களைக் கொண்டு நிராகரிப்பவர்களுக்குக் கோபமூட்டும் பொருட்டு (அந்த நம்பிக்கையாளர்களை படிப்படியாக அபிவிருத்திக்குக் கொண்டுவருகிறான்). அவர்களில் எவர்கள் நம்பிக்கைகொண்டு நற்செயல்கள் செய்கிறார்களோ,

அவர்களுக்கு அல்லாஹ் மன்னிப்பையும், மகத்தான கூலியையும் வாக்களித்திருக்கிறான். (அல்குர்ஆன் 48 : 29)

﴿هُوَ الَّذِي أَنْزَلَ السَّكِينَةَ فِي قُلُوبِ الْمُؤْمِنِينَ لِيَزْدَادُوا إِيمَانًا
مَعَ إِيمَانِهِمْ وَلِلّٰهِ جُنُودُ السَّمَاوَاتِ وَالْأَرْضِ وَكَانَ اللّٰهُ عَلِيمًا
حَكِيمًا ○ لِيُدْخِلَ الْمُؤْمِنِينَ وَالْمُؤْمِنَاتِ جَنَّاتٍ تَجْرِي
مِنْ تَحْتِهَا الْأَنْهَارُ خَالِدِينَ فِيهَا وَيُكَفِّرَ عَنْهُمْ سَيِّئَاتِهِمْ
وَكَانَ ذٰلِكَ عِنْدَ اللّٰهِ فَوْزًا عَظِيمًا○﴾

பொருள் : நம்பிக்கை கொண்டவர்களுடைய உள்ளங்களில் அவன்தான் சாந்தியையும், ஆறுதலையும் அளித்து, அவர்களுடைய நம்பிக்கை மேலும் அதிகரிக்கும்படி செய்தான். வானங்கள், பூமி முதலியவற்றிலுள்ள படைகள் அனைத்தும் அல்லாஹ்வுக்குரியனவே. (அவற்றைக்கொண்டு அவன் விரும்பியவர்களுக்கு உதவி புரிவான்.) அவன் (அனைத்தையும்) நன்கறிந்தவனாக ஞானமுடையவனாக இருக்கிறான். இறுதியாக, நம்பிக்கைகொண்ட ஆண்களையும், பெண்களையும் (அல்லாஹ்) சொர்க்கங்களில் புகுத்துவான். அதில் நீரருவிகள் தொடர்ந்து ஓடிக் கொண்டேயிருக்கும். என்றென்றும் அவர்கள் அதில் தங்கி விடுவார்கள். அவர்களின் பாவங்களையும், அவர்களிலிருந்து நீக்கிவிடுவான். இது அல்லாஹ்விடத்தில் கிடைக்கும் மகத்தான ஒரு வெற்றியாக இருக்கிறது.

(அல்குர்ஆன் 48 : 4-5)

﴿وَالَّذِينَ قُتِلُوا فِي سَبِيلِ اللّٰهِ فَلَنْ يُضِلَّ أَعْمَالَهُمْ ○ سَيَهْدِيهِمْ
وَيُصْلِحُ بَالَهُمْ ○ وَيُدْخِلُهُمُ الْجَنَّةَ عَرَّفَهَا لَهُمْ ○ يَاأَيُّهَا الَّذِينَ آمَنُوا
إِنْ تَنْصُرُوا اللّٰهَ يَنْصُرْكُمْ وَيُثَبِّتْ أَقْدَامَكُمْ○﴾

பொருள் : ஆகவே, அல்லாஹ்வுடைய பாதையில் எவர்கள்

வெட்டப்பட்டு (இறந்து) விடுகிறார்களோ, அவர்களுடைய நன்மைகளை அவன் வீணாக்கிவிட மாட்டான். (தக்க கூலியையே கொடுப்பான்.) அவர்களை நேரான பாதையில் செலுத்தி அவர்களுடைய நிலைமையையும் சீர்படுத்திவிடுவான். இன்னும் அவன் அவர்களுக்கு அறிவித்திருந்த சொர்க்கத்திலும் அவர்களைப் புகுத்துவான். நம்பிக்கையாளர்களே! நீங்கள் அல்லாஹ்வுக்கு உதவி புரிந்தால், அவனும் உங்களுக்கு உதவி புரிந்து உங்கள் பாதங்களை உறுதியாக்கி விடுவான். (அல்குர்ஆன் 47 : 4-7)

﴿وَالَّذِينَ آمَنُوا وَعَمِلُوا الصَّالِحَاتِ وَآمَنُوا بِمَا نُزِّلَ عَلَىٰ مُحَمَّدٍ
وَهُوَ الْحَقُّ مِنْ رَبِّهِمْ كَفَّرَ عَنْهُمْ سَيِّئَاتِهِمْ وَأَصْلَحَ بَالَهُمْ○﴾

பொருள் : எவர்கள், (அல்லாஹ்வை) நம்பிக்கைகொண்டு நற்செயல்களையும் செய்து, முஹம்மது (நபி ﷺ) அவர்கள் மீது இறைவனால் இறக்கப்பட்ட உண்மையான இவ்வேதத்தையும் நம்பிக்கை கொண்டிருந்தார்களோ, அவர்கள் (செய்த) பாவத்திற்கு இதைப் பரிகாரமாக்கி, அவர்களுடைய காரியங்களையும் அவன் சீர்படுத்தி விட்டான். (அல்குர்ஆன் 47 : 2)

﴿إِنَّا أَرْسَلْنَاكَ شَاهِدًا وَمُبَشِّرًا وَنَذِيرًا ○ لِتُؤْمِنُوا بِاللَّهِ وَرَسُولِهِ
وَتُعَزِّرُوهُ وَتُوَقِّرُوهُ وَتُسَبِّحُوهُ بُكْرَةً وَأَصِيلًا○ إِنَّ الَّذِينَ يُبَايِعُونَكَ
إِنَّمَا يُبَايِعُونَ اللَّهَ يَدُ اللَّهِ فَوْقَ أَيْدِيهِمْ فَمَنْ نَكَثَ فَإِنَّمَا يَنْكُثُ
عَلَىٰ نَفْسِهِ وَمَنْ أَوْفَىٰ بِمَا عَاهَدَ عَلَيْهُ اللَّهَ فَسَيُؤْتِيهِ أَجْرًا عَظِيمًا○﴾

பொருள் : (நபியே!) நிச்சயமாக நாம் உம்மை (நம்பிக்கையாளர்களின் ஈமானைப் பற்றி) சாட்சி கூறுபவராகவும், (அவர்களுக்கு) நற்செய்தி கூறுபவராகவும், (பாவிகளுக்கு) அச்சமூட்டி எச்சரிப்பவராகவும் அனுப்பி வைத்தோம். ஆகவே, (நம்பிக்கையாளர்களே!) நீங்கள் அல்லாஹ்வையும் அவனுடைய

தூதரையும் நம்பிக்கை கொண்டு, அவருக்கு உதவி புரிந்து, அவரை கண்ணியப்படுத்தி வைத்து, காலையிலும் மாலையிலும் அவனை துதி செய்து வாருங்கள். (நபியே!) எவர்கள் (தங்கள் உடல், பொருள், உயிரை தியாகம் செய்து உமக்கு உதவி புரிவதாக ஹுதைபிய்யாவில் உமது கையைப் பிடித்து) உம்மிடம் வாக்குறுதி செய்கிறார்களோ, அவர்கள் அல்லாஹ்விடமே வாக்குறுதி செய்கின்றனர். அவர்கள் கை மீது அல்லாஹ்வுடைய கைதான் இருக்கிறது. ஆகவே, (அவ்வாக்குறுதியை) எவன் முறித்து விடுகிறானோ, அவன் தனக்குக் கேடாகவே அதை முறிக்கிறான். எவர் அல்லாஹ்விடம் செய்த அந்த வாக்குறுதியை முழுமைப்படுத்தி வைக்கிறாரோ, அவருக்கு அல்லாஹ் மகத்தான கூலியை அதிசீக்கிரத்தில் கொடுப்பான்.

(அல்குர்ஆன் 48 : 8-10)

﴿لَقَدْ رَضِيَ اللّٰهُ عَنِ الْمُؤْمِنِينَ إِذْ يُبَايِعُونَكَ تَحْتَ الشَّجَرَةِ فَعَلِمَ مَا فِي قُلُوبِهِمْ فَأَنْزَلَ السَّكِينَةَ عَلَيْهِمْ وَأَثَابَهُمْ فَتْحًا قَرِيبًا○ وَمَغَانِمَ كَثِيرَةً يَأْخُذُونَهَا وَكَانَ اللّٰهُ عَزِيزًا حَكِيمًا○﴾

பொருள் : அந்த மரத்தினடியில் உம்மிடம் (கைகொடுத்து) வாக்குறுதி செய்த நம்பிக்கையாளர்களைப் பற்றி நிச்சயமாக அல்லாஹ் திருப்தியடைந்தான். அவர்களின் உள்ளங்களிலிருந்த (உண்மையான தியாகத்)தை நன்கறிந்து, சாந்தியையும், ஆறுதலையும் அவர்கள் மீது சொரிந்தான். உடனடியான ஒரு வெற்றியையும் (கைபர் என்னும் இடத்தில்) அவர்களுக்கு வெகுமதியாகக் கொடுத்தான். (அந்த போரில்) ஏராளமான பொருள்களையும் அவர்கள் கைப்பற்றும்படி செய்தான். அல்லாஹ் (அனைவரையும்) மிகைத்தவனாக, ஞானமுடையவனாக இருக்கிறான்.

(அல்குர்ஆன் 48 : 18-19)

﴿إِذْ جَعَلَ الَّذِينَ كَفَرُوا فِي قُلُوبِهِمُ الْحَمِيَّةَ حَمِيَّةَ الْجَاهِلِيَّةِ فَأَنْزَلَ اللّٰهُ سَكِينَتَهُ عَلَىٰ رَسُولِهِ وَعَلَى الْمُؤْمِنِينَ وَأَلْزَمَهُمْ كَلِمَةَ

﴿التَّقْوَىٰ وَكَانُوا أَحَقَّ بِهَا وَأَهْلَهَا وَكَانَ اللَّهُ بِكُلِّ شَيْءٍ عَلِيمًا۝﴾

பொருள் : நிராகரித்தவர்கள் தங்கள் உள்ளங்களில் (உங்களை வேருடன் அழித்துவிட வேண்டுமென்ற) மூடத்தனமான வைராக்கியத்தை நிலை நிறுத்திக்கொண்ட சமயத்தை நினைத்துப் பாருங்கள். அச்சமயம் அல்லாஹ் தன் தூதர் மீதும், நம்பிக்கை கொண்டவர்கள் மீதும், தன் ஆறுதலையும், உறுதியையும் இறக்கி வைத்துப் பரிசுத்த வாக்கியத்தின் மீது அவர்களை உறுதிப்படுத்தினான். அவர்கள் அதற்குத் தகுதியுடையவர்க ளாகவும், அதை அடைய வேண்டியவர்களாகவும் இருந்தார்கள். அல்லாஹ் அனைத்தையும் நன்கறிந்தவனாக இருக்கிறான்.

(அல்குர்ஆன் 48 : 26)

﴿وَاعْلَمُوا أَنَّ فِيكُمْ رَسُولَ اللَّهِ لَوْ يُطِيعُكُمْ فِي كَثِيرٍ مِنَ الْأَمْرِ لَعَنِتُّمْ وَلَٰكِنَّ اللَّهَ حَبَّبَ إِلَيْكُمُ الْإِيمَانَ وَزَيَّنَهُ فِي قُلُوبِكُمْ وَكَرَّهَ إِلَيْكُمُ الْكُفْرَ وَالْفُسُوقَ وَالْعِصْيَانَ أُولَٰئِكَ هُمُ الرَّاشِدُونَ ۝ فَضْلًا مِنَ اللَّهِ وَنِعْمَةً وَاللَّهُ عَلِيمٌ حَكِيمٌ۝﴾

பொருள் : (நம்பிக்கையாளர்களே!) நிச்சயமாக உங்களிடம் அல்லாஹ்வுடைய தூதர் இருக்கிறார். பல விஷயங்களில் அவர் உங்களுக்கு கட்டுப்படுவதென்றால், நிச்சயமாக நீங்கள்தான் கஷ்டத்திற்குள்ளாகி விடுவீர்கள் என்பதை நீங்கள் உறுதியாக அறிந்துகொள்ளுங்கள். ஆயினும், அல்லாஹ் நம்பிக்கையின் மீதே உங்களுக்கு அன்பைக் கொடுத்து, உங்கள் உள்ளங்களிலும் அதையே அழகாக்கியும் வைத்தான். மேலும், நிராகரிப்பையும், பாவத்தையும், மாறு செய்வதையும் உங்களுக்கு வெறுப்பாகவும் ஆக்கிவைத்தான் இத்தகையவர்கள்தான் நேரான வழியில் இருக்கின்றனர். (மிகச்சிறந்த இத்தன்மைகளை அடைவது) அல்லாஹ்வுடைய அருளும்,

(அவனுடைய) கிருபையுமாகும். அல்லாஹ் (அனைத்தையும்) நன்கறிந்தவன், ஞானமுடையவன் ஆவான்.(அல்குர்ஆன் 49 : 7-8)

﴿وَالسَّابِقُونَ الْأَوَّلُونَ مِنَ الْمُهَاجِرِينَ وَالْأَنْصَارِ وَالَّذِينَ اتَّبَعُوهُمْ بِإِحْسَانٍ رَضِيَ اللهُ عَنْهُمْ وَرَضُوا عَنْهُ وَأَعَدَّ لَهُمْ جَنَّاتٍ تَجْرِي تَحْتَهَا الْأَنْهَارُ خَالِدِينَ فِيهَا أَبَدًا ذَٰلِكَ الْفَوْزُ الْعَظِيمُ۝﴾

பொருள் : முஹாஜிர்களிலும் அன்ஸார்களிலும் எவர்கள் (இஸ்லாமில்) முதலாவதாக முந்திக் (கொண்டு நம்பிக்கை) கொண்டார்களோ அவர்களையும், நற்செயல்களில் (மெய்யாகவே) இவர்களைப் பின்பற்றியவர்களையும் பற்றி அல்லாஹ் திருப்தியடைகிறான். இவர்களும் அல்லாஹ்வைப் பற்றி திருப்தியடைகின்றனர். மேலும், தொடர்ந்து நீரருவிகள் ஓடிக்கொண்டிருக்கும் சொர்க்கங்களை இவர்களுக்கென தயார்படுத்தி வைத்திருக்கிறான். அவற்றிலேயே அவர்கள் என்றென்றும் தங்கி விடுவார்கள். இதுதான் மகத்தான வெற்றியாகும். (அல்குர்ஆன் 9 : 100)

﴿وَمَنْ يُشَاقِقِ الرَّسُولَ مِنْ بَعْدِ مَا تَبَيَّنَ لَهُ الْهُدَىٰ وَيَتَّبِعْ غَيْرَ سَبِيلِ الْمُؤْمِنِينَ نُوَلِّهِ مَا تَوَلَّىٰ وَنُصْلِهِ جَهَنَّمَ وَسَاءَتْ مَصِيرًا۝﴾

பொருள் : எவர் நேரான வழி இன்னதென்று தனக்குத் தெளிவானதன் பின்னரும் (அல்லாஹ்வுடைய) இத்தூதரை விட்டுப் பிரிந்து நம்பிக்கையாளர்களின் வழி அல்லாததில் செல்கிறாரோ அவரை நாம் அவர் செல்லும் (தவறான) வழியிலேயே செல்லவிட்டு (பின்னர்) அவரை நரகத்தில் சேர்த்து விடுவோம். அது செல்லும் இடங்களில் மிகக் கெட்டது. (அல்குர்ஆன் 4 : 115)

மேற்கூறப்பட்ட குர்ஆன் வசனங்களை ஒருவர் நன்கு சிந்தித்துப் பார்க்கும் போது ஆசிரியர் அவர்கள் தமது கவிதைகளில் கூறியதையும் நாம் விளக்கத்தில் கூறியதையும் மிகத் தெளிவாக சந்தேகத்திற்கு இடமில்லாமல் புரிந்து நம்பிக்கைக் கொள்வார்.

இதுவரை பொதுவாக ஸஹாபாக்களுக்கு உரிய சிறப்புகளை நாம் பார்த்தோம். ஸஹாபாக்கள் உடைய சிறப்புகளைப் பற்றி வந்துள்ள ஹதீஸ்களை இங்கு கூறுவது நூலை மிகப் பெரியதாக ஆக்கிவிடும் என்ற பயத்தால் அவற்றை விட்டுவிடுகின்றோம். ஹதீஸ் நூல்கள் எல்லாவற்றிலும் கிதாப் மனாகிப் அஸ் ஸஹாபா என்று ஓர் அத்தியாயம் இருக்கும். அதாவது ஸஹாபாக்களின் சிறப்புகள், மாண்புகள். அந்த அத்தியாயத்தை கண்டிப்பாக வாசகர்கள் ஒரு முறையாவது படித்து விடுங்கள். அப்போதுதான் நபித்தோழர்களின் கண்ணியம், உயர்வு, மேன்மை, சிறப்பு, மதிப்பு, தகுதி புரியவரும்.

நபித்தோழர்களின் சிறப்பை விளக்குகின்ற இரு ஹதீஸ்களை மட்டும் குறிப்பிடுகின்றோம்.

இமாம் புகாரி ﵀ கூறுகிறார்கள் :

**وَمَنْ صَحِبَ النَّبِيَّ ﷺ أَوْ رَآهُ مِنَ الْمُسْلِمِينَ فَهُوَ مِنْ أَصْحَابِهِ**

முஸ்லிம்களில் யார் நபி ﷺ அவர்களோடு தோழமை கொண்டார்களோ அல்லது அவர்களைப் பார்த்தார்களோ அவர் நபி ﷺ அவர்களின் தோழர்களை சேர்ந்தவர் ஆவார்.

அதாவது, ஒருவர் ஸஹாபியாக இருக்க வேண்டும் என்றால் அதற்கு சில நிபந்தனைகள் உண்டு.

1. அவர் நபி ﷺ அவர்களுடைய காலத்தில் இஸ்லாமை ஏற்று, பிறகு, முஸ்லிமாகவே மரணித்திருக்க வேண்டும்.

2. நபி ﷺ அவர்களுடன் தோழமை கொண்டிருக்க வேண்டும்.

3. அல்லது நபி ﷺ அவர்களை சில நிமிடங்களாவது பார்த்திருக்க வேண்டும்.

**عن عِمْرَانَ بْنَ حُصَيْنٍ ﵄ يَقُولُ قَالَ رَسُولُ اللهِ ﷺ خَيْرُ أُمَّتِي قَرْنِي ثُمَّ الَّذِينَ يَلُونَهُمْ ثُمَّ الَّذِينَ يَلُونَهُمْ رَوَاهُ الْبُخَارِيُّ ﵀**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள் : எனது உம்மத்தில் மிகச் சிறந்தவர்கள் எனது தலைமுறையினர், பிறகு, அவர்களை அடுத்து வருபவர்கள். பிறகு, அவர்களை அடுத்து வருபவர்கள் ஆவார்கள்.[6]

**عَنْ أَبِي هُرَيْرَةَ رضي الله عنه قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ لَا تَسُبُّوا أَصْحَابِي لَا تَسُبُّوا أَصْحَابِي فَوَالَّذِي نَفْسِي بِيَدِهِ لَوْ أَنَّ أَحَدَكُمْ أَنْفَقَ مِثْلَ أُحُدٍ ذَهَبًا مَا أَدْرَكَ مُدَّ أَحَدِهِمْ وَلَا نَصِيفَهُ رَوَاهُ مُسْلِمٌ رحمه الله**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள் : எனது தோழர்களை ஏசாதீர்கள். எனது தோழர்களை ஏசாதீர்கள். என் ஆன்மா யாருடைய கைவசம் உள்ளதோ அவன் மீது சத்தியமாக நிச்சயமாக உங்களில் ஒருவர் உஹுது மலைப் போன்று தங்கத்தை தர்மம் செய்தாலும் அவர்களில் ஒருவர் தன் கையளவு கொடுத்த தர்மத்தையும்அடைய முடியாது. இன்னும் அதன் பாதியளவு கொடுத்த தர்மத்தையும் அடைய முடியாது.[7]

அந்த நபித்தோழர்களில் நான்கு கலீஃபாக்கள் மற்றும் சொர்க்கத்தைக் கொண்டு நன்மாராயம் கூறப்பட்ட அவர்கள் போக மீதமுள்ள ஆறு தோழர்கள் மிகவும் சிறப்பிற்குரியவர்கள் ஆவார்கள்.

**عَنِ ابْنِ عُمَرَ رضي الله عنهما قَالَ كُنَّا نُخَيِّرُ بَيْنَ النَّاسِ فِي زَمَنِ النَّبِيِّ ﷺ فَنُخَيِّرُ أَبَا بَكْرٍ ثُمَّ عُمَرَ بْنَ الْخَطَّابِ ثُمَّ عُثْمَانَ بْنَ عَفَّانَ رضي الله عنهم رَوَاهُ الْبُخَارِيُّ رحمه الله**

நபி ﷺ அவர்களின் காலத்தில் மக்களுக்கு மத்தியில் சிறப்பானவர் யார் என்று நாங்கள் பேசிக் கொள்வோம். அப்போது முதலாவதாக அபூ பக்ரையும் பிறகு உமர் இப்னு கத்தாபையும் பிறகு உஸ்மான்

---

6. அறிவிப்பாளர் : இம்ரான் இப்னு ஹுசைன் رضي الله عنه, நூல் : புகாரி, எண் : 3650
7. அறிவிப்பாளர் : அபூ ஹுரைரா رضي الله عنه, நூல் : முஸ்லிம், எண் : 2540

இப்னு அஃப்பானையும் சிறப்பானவர்கள் என்று நாங்கள் கூறுவோம். இவர்கள் அனைவரையும் அல்லாஹ் பொருந்தி கொள்வானாக![8]

**عَنِ ابْنِ عُمَرَ ﵄ قَالَ كُنَّا نَتَحَدَّثُ عَلَىٰ عَهْدِ رَسُولِ اللهِ ﷺ أَنَّ خَيْرَ هَذِهِ الْأُمَّةِ بَعْدَ نَبِيِّهَا أَبُو بَكْرٍ ثُمَّ عُمَرُ ثُمَّ عُثْمَانُ فَيَبْلُغُ ذٰلِكَ النَّبِيَّ ﷺ فَلَا يُنْكِرُهُ رَوَاهُ ابْنُ أَبِيْ عَاصِمْ ﵀**

அப்துல்லாஹ் இப்னு உமர் ﵄ கூறுகின்றார்கள் : நபி ﷺ அவர்களுடைய காலத்தில் நாங்கள் பேசிக் கொள்வோம், இந்த உம்மத்தில் நபிக்கு பின்னர் மிக சிறப்பானவர் அபூ பக்ர் ﵁ ஆவார். பிறகு உமர் ﵁, பிறகு உஸ்மான் ﵁ ஆவார்கள். இந்த செய்தி நபி ﷺ அவர்களுக்கு எட்டும். நபியவர்கள் அதை மறுக்க மாட்டார்கள்.[9]

நபி ﷺ அவர்கள் இறந்த பின்னர் கிலாஃபத் - ஆட்சிக்கு அபூ பக்ர் ﵁ அவர்கள்தான் மிகத் தகுதி உள்ளவர்களாக இருந்தார்கள். காரணம், அவர்களின் சிறப்புகளும் அவர்கள் முந்தி இஸ்லாமை ஏற்றதும் ஆகும். தமது வாழ்நாளில் மற்ற எல்லா தோழர்களைப் பார்க்கிலும் அபூ பக்ரைத்தான் நபி ﷺ அவர்கள் தொழுகை நடத்துவதற்கு முற்படுத்தினார்கள். நபி ﷺ அவர்களின் மரணத்திற்கு பின்னர் எல்லா நபித்தோழர்களும் அபூபக்ரைத்தான் ஒரு மனதோடு முன்னிலைப்படுத்தி அவர்களுக்கு ஆட்சிக்கான பைஅத் - வாக்குப் பிரமாணம் செய்து கொடுத்தார்கள். கண்டிப்பாக ஒரு வழிகேடான செயலில் நபித்தோழர்கள் ஒன்று சேர அல்லாஹ் விட மாட்டான்.

அபூ பக்ர் ﵁ அவர்களுக்குப் பிறகு ஆட்சிக்கு தகுதியாக இருந்தவர் உமர் ﵁ அவர்கள் ஆவார். அவர்தான் அபூ பக்ருக்கு ﵁ அடுத்து மிகவும் சிறப்பு பெற்றவராக இருந்ததுடன் அபூ பக்ர் ﵁ அவர்கள் உமர் ﵁ அவர்களிடம்தான் கிலாஃபத்தின் பொறுப்பை ஒப்படைத்தார்கள்.

---

8. அறிவிப்பாளர் : இப்னு உமர் ﵄, ஸஹீஹுல் புகாரி, எண் : 3655.

9. அறிவிப்பாளர் : இப்னு உமர் ﵄, அஸ்ஸுன்னா - இப்னு அபீ ஆஸிம், எண் : 1193.

உமர் ﷺ அவர்களுக்குப் பின்னர் உஸ்மான் ﷺ ஆட்சிக்கு தகுதியானவராக இருந்தார். உமர் ﷺ அவர்கள் நியமித்த மூத்த நபித்தோழர்களின் ஆலோசனை சபை, உஸ்மான் ﷺ அவர்களைத்தான் ஆட்சி பொறுப்புக்கு தேர்ந்தெடுத்தார்கள்.

அதற்கு பிறகு, அலீ ﷺ அவர்கள் ஆட்சிக்கு தகுதியானவராக இருந்தார். காரணம், அலீ ﷺ அவர்களுக்கு இருந்த சிறப்புகள் அவர்களின் காலத்தில் வாழ்ந்த வேறு யாருக்கும் இருக்கவில்லை. மேலும், எல்லாத் தோழர்களும் இது விஷயத்தில் ஒருமித்த கருத்துள்ளவர்களாகவும் இருந்தார்கள்.

நல்வழி பெற்ற நேர்வழி நடந்த இந்த கலீஃபாக்கள் பற்றித்தான் நபி ﷺ அவர்கள் கூறினார்கள் :

فَعَلَيْكُمْ بِسُنَّتِي وَسُنَّةِ الْخُلَفَاءِ الرَّاشِدِينَ الْمَهْدِيِّينَ عَضُّوا عَلَيْهَا بِالنَّوَاجِذِ رَوَاهُ ابْنُ مَاجَةَ ﷺ

நீங்கள் எனது ஸுன்னாவை பற்றிப் பிடியுங்கள்! எனக்குப் பின்னால் நல்வழி பெற்ற நேர்வழி பெற்ற கலீஃபாக்களின் ஸுன்னாவைப் பற்றிப் பிடியுங்கள்! அவற்றை கடவாய்ப் பற்களால் கவ்விப் பிடியுங்கள்![10]

நபி ﷺ அவர்கள் கூறினார்கள் : எனக்குப் பின்னால் கிலாஃபத் முப்பது ஆண்டுகள் இருக்கும்.

عَنْ سَفِينَةَ ﷺ قَالَ قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ خِلَافَةُ النُّبُوَّةِ ثَلَاثُونَ سَنَةً ثُمَّ يُؤْتِي اللّٰهُ الْمُلْكَ مَنْ يَشَاءُ رَوَاهُ أَبُوْ دَاوُدَ ﷺ

நபி ﷺ அவர்கள் கூறினார்கள் : நபித்துவத்தின் அடிப்படையில் அமைகின்ற கிலாஃபத் -ஆட்சி (எனக்குப் பின்னால்) முப்பது ஆண்டுகள் இருக்கும். பிறகு, அல்லாஹ் அரசாட்சியை தான்

10. அறிவிப்பாளர் : இர்பாழ் இப்னு சாரியா ﷺ, நூல் : இப்னு மாஜா, எண் : 42

நாடியவருக்கு கொடுப்பான்.[11]

கிலாஃபத்தின் இறுதியாக அலீ ﵁ அவர்களின் ஆட்சி அமைந்திருந்தது.

பத்து தோழர்களுக்கு நபி ﷺ அவர்கள் சாட்சி கூறியதைப் போன்று நாமும் சொர்க்கத்தைக் கொண்டு சாட்சி கூறுவோம்.

**عَنْ عَبْدِ الرَّحْمَنِ بْنِ عَوْفٍ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ أَبُو بَكْرٍ فِي الْجَنَّةِ وَعُمَرُ فِي الْجَنَّةِ وَعُثْمَانُ فِي الْجَنَّةِ وَعَلِيٌّ فِي الْجَنَّةِ وَطَلْحَةُ فِي الْجَنَّةِ وَالزُّبَيْرُ فِي الْجَنَّةِ وَعَبْدُ الرَّحْمٰنِ بْنُ عَوْفٍ فِي الْجَنَّةِ وَسَعْدٌ فِي الْجَنَّةِ وَسَعِيدٌ فِي الْجَنَّةِ وَأَبُو عُبَيْدَةَ بْنُ الْجَرَّاحِ فِي الْجَنَّةِ رَوَاهُ التِّرْمِذِيُّ ﵀**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள் : அபூ பக்ர் ﵁ சொர்க்கத்தில் இருப்பார். உமர் ﵁ சொர்க்கத்தில் இருப்பார். உஸ்மான் ﵁ சொர்க்கத்தில் இருப்பார். அலீ ﵁ சொர்க்கத்தில் இருப்பார். தல்ஹா ﵁ சொர்க்கத்தில் இருப்பார். ஸுபைர் ﵁ சொர்க்கத்தில் இருப்பார். ஸஃது ﵁ சொர்க்கத்தில் இருப்பார். ஸஈது ﵁ சொர்க்கத்தில் இருப்பார். அப்துர்ரஹ்மான் இப்னு அவ்ஃப் ﵁ சொர்க்கத்தில் இருப்பார். அபூ உபைதா ﵁ சொர்க்கத்தில் இருப்பார்.[12]

நபித்தோழர்களின் உயர்வையும் சிறப்பையும் விவரிக்கின்ற இன்னும் பல நூறு நபிமொழிகள் உள்ளன. அவற்றை முறையாக படித்து, நபித்தோழர்கள் விஷயத்தில் நாம் பேண வேண்டிய மரியாதையை பேணுவோமாக!

நபித்தோழர்கள் எல்லோரும் ஒரே அந்தஸ்த்து உடையவர்கள் அல்ல. அவர்களுக்கு மத்தியில் சிறப்புகளில் ஏற்றத் தாழ்வு உள்ளது.

---

11. அறிவிப்பாளர் : சஃபீனா ﵁. நூல் : அபூ தாவூத், எண் : 4647

12. அறிவிப்பாளர் : அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் ﵁, நூல் : திர்மிதி, எண் : 3747

நபி ﷺ அவர்களின் குடும்பத்தாருக்கு தனி சிறப்பு உண்டு.

நபி ﷺ அவர்களின் மனைவிமார்களுக்கு தனி சிறப்பு உண்டு.

குறைஷி ஸஹாபாக்களுக்கு தனி சிறப்பு உண்டு.

முஹாஜிர் ஸஹாபாக்களுக்கு தனி சிறப்பு உண்டு.

அன்சாரிகளுக்கு தனி சிறப்பு உண்டு.

முதலாவதாக இஸ்லாமை ஏற்றுக் கொண்டவர்களுக்கு தனி சிறப்பு உண்டு.

பத்ர் போரில் கலந்து கொண்டவர்களுக்கு தனி சிறப்பு உண்டு.

உஹுது போரில் கலந்து கொண்டவர்களுக்கு தனி சிறப்பு உண்டு.

பைஅத்துர் ரிழ்வான் ஒப்பந்தத்தில் கலந்து கொண்டவர்களுக்கு தனி சிறப்பு உண்டு.

அகபா ஒப்பந்தத்தில் கலந்து கொண்டவர்களுக்கு தனி சிறப்பு உண்டு.

நபியுடன் அதிகமாக போரில் கலந்து அல்லாஹ்வின் பாதையில் அதிகம் தர்மம் செய்தவர்களுக்கு தனி சிறப்பு உண்டு.

மக்கா வெற்றிக்கு முன்னர் இஸ்லாமை ஏற்ற ஸஹாபாக்களுக்கு தனி சிறப்பு உண்டு.

இவ்வாறாக அவர்களுக்கு மத்தியில் சிறப்பு மற்றும் அந்தஸ்த்தில் ஏற்றத் தாழ்வு உண்டு.

கடைசி அந்தஸ்த்தில் இருக்கின்ற ஒரு ஸஹாபி, இந்த உம்மத்தில் உள்ள அனைத்து இறைநேசர்கள் மற்றும் நல்லோரைப் பார்க்கிலும் அல்லாஹ்விடம் மிகவும் சிறப்பிற்குரியவர் ஆவார் என்பதுதான் அஹ்லுஸ் ஸுன்னாவின் கொள்கை ஆகும். இது விஷயத்தில் அஹ்லுஸ் ஸுன்னா உடைய அறிஞர்களுக்கு மத்தியில் எவ்வித கருத்து வேற்றுமையும் இல்லை.

யார் பின்னால் வந்தவர்களை நபித்தோழர்களைப் பார்க்கிலும் சிறப்பித்து, உயர்வாக பேசுவாரோ அவர் வழிகெட்டவர் ஆவார். அவர் நபியின் மீது குரோதம் உள்ளவர் ஆவார்.

ஸஹாபாக்களுக்கு மத்தியில் நடந்த போர், அல்லது கருத்து வேற்றுமைகள் குறித்து நாம் எவ்வித விமர்சனமும் செய்யக் கூடாது. அவர்களில் யாரையும் நாம் குறைக் கூறக் கூடாது. நமது நாவை நாம் பாதுகாக்க வேண்டும். இதுதான் நமது உம்மத்தின் மூத்த தாபியீன்கள் மற்றும் இமாம்களின் முடிவாகும்.

இந்த தலைப்பில் மேலும் விளக்கங்களை பெற ஹதீஸ் நூல்களையும் விரிவான கொள்கை நூல்களையும் படிக்கவும்.

15வது கவிதையிலிருந்து 20வது கவிதை வரை ஸஹாபாக்களைப் பற்றி கூறப்பட்டது.

இந்த ஆறு கவிதைகள் மற்றும் அதன் விளக்கங்களில் நாம் படித்ததின் சுருக்கத்தை இப்போது பார்ப்போம்.

**சுருக்கம் :**

1. உம்மத்தில் சிறந்தவர்கள் ஸஹாபாக்கள்.
2. ஸஹாபாக்களில் சிறந்தவர்கள் முதலில் அபூ பக்ர் ﵁, பிறகு, உமர் ﵁, பிறகு, உஸ்மான் ﵁, பிறகு, அலீ ﵁ ஆவார்கள்.
3. பிறகு, சொர்க்கத்தைக் கொண்டு நற்செய்தி கூறப்பட்ட மீதமுள்ள நபித்தோழர்கள் ஆவார்கள்.
4. பொதுவாக எல்லா ஸஹாபாக்களைப் பற்றியும் நல்லதை மட்டுமே பேச வேண்டும்.
5. எந்த ஸஹாபியைப் பற்றியும் தரக்குறைவாக பேசக் கூடாது. அவர்களின் நன் மதிப்பை குறைக்கும்படியான எந்த பேச்சுகளையும் பேசக் கூடாது.

6. குர்ஆனும் ஹதீஸும் போற்றுகின்ற அந்த சமுதாயத்தை நாமும் போற்ற வேண்டும்.

7. அவர்களுக்காக அல்லாஹ்விடம் அவனது மன்னிப்பையும் கருணையையும் பொருத்தத்தையும் வேண்டி நாம் எப்போதும் துஆ கேட்க வேண்டும்.

மேற்கூறப்பட்ட கவிதைகள், மற்றும் அவற்றின் விளக்க உரையிலிருந்து ஸஹாபாக்கள் விஷயத்தில் சில வழிகெட்ட கூட்டங்களிடம் காணப்படுகின்ற தவறான கொள்கைகளை நாம் அடையாளம் காணலாம். அந்த வழிகேடுகளிலிருந்து சிலவற்றை இங்கு குறிப்பிடுகின்றோம்.

**வழிகேடுகள் :**

1. நபி ﷺ அவர்களின் தோழர்களை விமர்சனம் செய்வது.

2. அபூ பக்ர் رضي الله عنه அவர்களைவிட பிற தோழர்களை உயர்த்திப் பேசுவது.

3. உமர் رضي الله عنه அவர்களை குறைக் கூறுவது.

4. உஸ்மான் رضي الله عنه அவர்களின் ஆட்சியை விமர்சிப்பது.

5. கலீஃபாக்களின் ஆட்சியை நீதமற்ற ஆட்சி என்றோ, அல்லது ஷரீஆவிற்கு மாற்றமான ஆட்சி என்றோ விமர்சிப்பது.

6. நபித்தோழர்களை உயர்த்திப் பேச தயங்குவது.

7. அவர்களின் சிறப்புகளை மக்களுக்கு மத்தியில் பரப்பாமல் இருப்பது.

8. பிற்காலத்தில் வந்தவர்கள் ஸஹாபாக்களை விட கல்வியில் இன்னும் மார்க்கத்தை விளங்குவதில் சிறந்தவர்கள் என்று கூறுவது.

9. ஸஹாபாக்கள் மார்க்கத்தை சரியாக விளங்கவில்லை, அவர்கள் பித்அத் -அனாச்சாரம் செய்தார்கள் என்று பழி சுமத்துவது.

10. ஸஹாபாக்களின் விளக்கத்தை மார்க்கத்தில் அங்கீகரிக்க மறுப்பது.

11. ஸஹாபாக்களில் பலர் நபி ﷺ அவர்களின் மரணத்திற்கு பின்னர் இஸ்லாமை விட்டு வெளியேறி விட்டார்கள் என்று கூறுவது.

12. ஸஹாபாக்கள் ஆட்சிக்காக சண்டை செய்தார்கள் என்று கூறுவது.

13. ஸஹாபாக்கள் உடைய மார்க்கப் பற்றில் சந்தேகப்படுவது.

14. கலீஃபாக்களின் வரிசை முறையை ஏற்க மறுப்பது.

15. மற்ற எல்லா தோழர்களைவிட அலீ رضي الله عنه அவர்களை உயர்த்திப் பேசுவது.

16. அல்லாஹ்வும் ரஸூலும் மார்க்கத்தில் ஸஹாபாக்களுக்கு வழங்கிய அந்தஸ்த்தை அவர்களுக்கு தர மறுப்பது.

17. அவர்களின் பெயர்களை கூறும்போது அவர்களுக்காக துஆ செய்வதை தவிர்ப்பது.

18. அவர்களின் வாழ்க்கை வரலாறுகளை கற்பதை, படிப்பதை, அறிவதை ஒரு நல்லமலாக கருதாமல் இருப்பது.

19. மார்க்க விஷயத்தில் ஸஹாபாக்களின் வழிமுறையை பின்பற்றாமல் பின்னோரின் வழிமுறையை பின்பற்றுவது.

20. ஸஹாபாக்களின் தியாகங்களை குறைத்து மதிப்பிட்டு பேசுவது.

21. அவர்களை நேசிக்காமல், அவர்கள் மீது அன்பு வைக்காமல் இருப்பது.

22. குறிப்பிட்ட சில நபித்தோழர்கள் அறிவிக்கின்ற ஹதீஸ்களை ஏற்க மறுப்பது.

23. ஸஹாபாக்கள் ஹதீஸ்களை சரியாக புரியவில்லை, அவர்களை விட நாம் ஹதீஸ்களை சரியாக புரியலாம் என்று கூறுவது.

24. ஸஹாபாக்களின் ஏகோபித்த முடிவை மார்க்க ஆதாரமாக ஏற்க மறுப்பது.

25. ஸஹாபாக்கள் மீது உள்ளத்தில் குரோதம் அல்லது வெறுப்பை வைத்திருப்பது.

இன்னும் இதுபோன்ற அநேக வழிகேடுகள் இருக்கின்றன. அல்லாஹ் அவை அனைத்தையும் விட்டு நம்மை பாதுகாப்பானாக! ஆமீன்.

அல்லாஹ்வே நாங்கள் உனக்காக அவர்களை நேசிக்கின்றோம். அவர்களை நீ நேசித்தது போன்று எங்களையும் நீ நேசிப்பாயாக! அவர்களை நீ மன்னித்தது போன்று எங்களையும் நீ மன்னிப்பாயாக! அவர்களுடன் நீ எங்களை சொர்க்கத்தில் பிரவேசிக்க செய்வாயாக! ஆமீன்!

---------------------

وَبِالْقَدَرِ الْـمَقْدُوْرِ أَيْقِنْ فَإِنَّهُ
دِعَامَةُ عَقْدِ الدِّيْنِ وَالدِّيْنُ أَفْيَحُ

**பொருள் :**

நிர்ணயிக்கப்பட்ட விதியை உறுதியாக நம்பிக்கை கொள்! நிச்சயமாக இது உறுதி செய்யப்பட்ட மார்க்கத்தின் தூண் ஆகும். மார்க்கம் மிக விசாலமானதாகும்.

**கருத்து :**

இந்த உலகில் நடப்பவை எல்லாம் முன்கூட்டியே அல்லாஹ் விதித்த விதியில் எழுதப்பட்டு விட்டது. விதியை நம்பிக்கை கொள்வது மார்க்கத்தின் ஆறு நம்பிக்கைகளில் மிக முக்கியமானதாகும். அந்த ஆறும் ஈமானின் தூண்கள் ஆகும். விதியை நம்புவதில் மனதிற்கு ஆறுதலும் மனதை பக்குவப்படுத்துவதும் இருக்கிறது. நம்பிக்கைகள், நல்லமல்கள், நமது பாவங்களுக்கு தவ்பா, பாவமன்னிப்பு என நாம் சொர்க்கத்தை சம்பாதிப்பதற்கு மார்க்கம் விசாலமான நிறைய வழிகள் உள்ளதாக இருக்கின்றது.

**விளக்கம் :**

அல்லாஹு தஆலா அனைத்தையும் அறிந்தவன். அவனுடைய அறிவு மிக விசாலமானது. அவன் படைப்புகளை படைக்கும் முன்பே படைப்புகள் என்ன செய்வார்கள் என்பதை அறிந்திருந்தான். அவன் அறிந்ததில் எந்த மாற்றமும் நிகழாது. அவன் எழுதுகோலை படைத்து எழுது என்று கூறினான். அது, நான் எதை எழுதவேண்டும் என்று கேட்டது. அல்லாஹ் கூறினான் : எதுவெல்லாம் நடக்க இருக்கின்றதோ அவை அனைத்தையும் எழுது என்று. அது அனைத்தையும் எழுதி முடித்துவிட்டது.

அல்லாஹ் விதியில் எழுதியதின் படிதான் இவ்வுலகில் எல்லாம் நடக்கின்றன. விதியை நம்புவது ஈமானின் ஆறு ருக்னுகளில் ஆறாவதாகும். விதியை மறுப்பது அல்லது தவறாக விளங்கி தான் செய்யக் கூடிய பாவங்களுக்கு விதியை காரணம் கூறுவது நிராகரிப்பில் கொண்டுபோய் சேர்த்துவிடும்.

விதிபற்றி வருகின்ற சில வசனங்களையும் நபிமொழிகளையும் பார்ப்போம்.

﴿وَكُلُّ شَيْءٍ فَعَلُوهُ فِي الزُّبُرِ ○ وَكُلُّ صَغِيرٍ وَكَبِيرٍ مُسْتَطَرٌ○﴾

பொருள் : இவர்கள் செய்கின்ற ஒவ்வொரு காரியமும் (அவர்களுடைய) பதிவுப் புத்தகத்தில் இருக்கிறது. சிறிதோ, பெரிதோ அனைத்துமே அதில் வரையப்பட்டிருக்கும். (அல்குர்ஆன் 54 : 52, 53)

﴿وَاللَّهُ خَلَقَكُمْ وَمَا تَعْمَلُونَ○﴾

பொருள் : உங்களையும், நீங்கள் சித்தரித்த அவற்றையும் அல்லாஹ்வே படைத்தான் என்றார். (அல்குர்ஆன் 37 : 96)

﴿إِنَّا كُلَّ شَيْءٍ خَلَقْنَاهُ بِقَدَرٍ○﴾

பொருள் : நிச்சயமாக நாம் ஒவ்வொரு பொருளையும் குறிப்பான திட்டப்படியே படைத்திருக்கிறோம். (அல்குர்ஆன் 54 : 49)

﴿عَالِمِ الْغَيْبِ لَا يَعْزُبُ عَنْهُ مِثْقَالُ ذَرَّةٍ فِي السَّمَاوَاتِ وَلَا فِي
الْأَرْضِ وَلَا أَصْغَرُ مِنْ ذَٰلِكَ وَلَا أَكْبَرُ إِلَّا فِي كِتَابٍ مُبِينٍ○﴾

பொருள் : (எனினும்) “மறுமை நமக்கு வராது” என்று (இந்) நிராகரிப்பவர்கள் கூறுகின்றனர். (நபியே!) கூறுவீராக : “ஏன் வராது, மறைவானவை அனைத்தையும் அறிந்தவனான என் இறைவன் மீது சத்தியம்! கண்டிப்பாக அது உங்களிடம் வந்தே தீரும். அவன்

அறிவை விட்டும் வானங்களிலோ பூமியிலோ உள்ளவற்றில் ஓர் அணுவளவும் தப்பிவிடாது. அணுவைவிட சிறியதோ அல்லது பெரியதோ (ஒவ்வொன்றும் 'லவ்ஹுல் மஹ்ஃபூள்' என்னும்) தெளிவான குறிப்புப் புத்தகத்தில் பதிவு செய்யப்படாமல் இல்லை."

(அல்குர்ஆன் 34 : 3)

﴿وَعِندَهُ مَفَاتِحُ الْغَيْبِ لَا يَعْلَمُهَا إِلَّا هُوَ وَيَعْلَمُ مَا فِي الْبَرِّ وَالْبَحْرِ وَمَا تَسْقُطُ مِن وَرَقَةٍ إِلَّا يَعْلَمُهَا وَلَا حَبَّةٍ فِي ظُلُمَاتِ الْأَرْضِ وَلَا رَطْبٍ وَلَا يَابِسٍ إِلَّا فِي كِتَابٍ مُّبِينٍ۝﴾

பொருள் : மறைவானவற்றின் சாவிகள் அவனிடமே இருக்கின்றன. அவற்(றில் உள்ளவற்)றை அவனைத் தவிர வேறெவரும் அறியமாட்டார். நிலத்திலும், நீரிலும் உள்ளவற்றையும் அவன் நன்கறிவான். அவன் அறியாமல் ஓர் இலையும் உதிருவதில்லை. பூமியின் (ஆழத்தில்) அடர்ந்த இருளில் (புதைந்து) கிடக்கும் (கடுகு போன்ற சிறிய) வித்தும், பசுமையானதும், உலர்ந்ததும் அவனுடைய தெளிவான (பதிவுப்) புத்தகத்தில் இல்லாமலில்லை.

(அல்குர்ஆன் 6 : 59)

﴿مَا أَصَابَ مِن مُّصِيبَةٍ فِي الْأَرْضِ وَلَا فِي أَنفُسِكُمْ إِلَّا فِي كِتَابٍ مِّن قَبْلِ أَن نَّبْرَأَهَا إِنَّ ذَٰلِكَ عَلَى اللَّهِ يَسِيرٌ ۝ لِّكَيْلَا تَأْسَوْا عَلَىٰ مَا فَاتَكُمْ وَلَا تَفْرَحُوا بِمَا آتَاكُمْ وَاللَّهُ لَا يُحِبُّ كُلَّ مُخْتَالٍ فَخُورٍ۝﴾

பொருள் : (பொதுவாக) பூமியிலோ அல்லது (குறிப்பாக) உங்களுக்கோ ஏற்படக்கூடிய எந்தச் சிரமமும், (நஷ்டமும்) அது ஏற்படுவதற்கு முன்னதாகவே (லவ்ஹுல் மஹ்ஃபூள் என்னும்) பதிவுப் புத்தகத்தில் பதிவு செய்யப்படாமல் இல்லை. நிச்சயமாக இது அல்லாஹ்வுக்கு

மிக எளிதானதே! உங்களை விட்டும் தவறிப்போனதைப் பற்றி நீங்கள் கவலை கொள்ளாதிருக்கவும் (அல்லாஹ்) உங்களுக்குக் கொடுத்ததைப் பற்றி நீங்கள் கர்வம் கொள்ளாதிருக்கவும். (இதை உங்களுக்கு அறிவிக்கிறான்). அல்லாஹ், கர்வம் கொள்பவர்களையும் பெருமையடிப்பவர்களையும் நேசிப்பதில்லை.

(அல்குர்ஆன் 57 : 22-23)

விதி குறித்து ஷைகு உஸைமீன் ﵀ அவர்கள் தங்கள் அகீதத்து அஹ்லுஸ் ஸுன்னா வல்ஜமாஆ என்ற சிறு நூலில் கூறிய சில விளக்கத்தை அதன் பலனை கருதி, இங்கு எடுத்து எழுதுகிறோம்.

ஷைகு கூறுகிறார்கள் :

அல்லாஹ் நிர்ணயித்த “கதா்” எனும் விதியை நம்பிக்கை கொள்ள வேண்டும். நன்மை தீமை அனைத்தும் அந்த விதியின்படியே நடக்கின்றன. “கதா்” என்பது அல்லாஹ்வின் அறிவிற்கும் ஞானத்திற்கும் ஏற்ப படைப்பினங்கள் அனைத்தையும் பற்றிய அல்லாஹ்வின் தீர்மானமாகும்.

## கதரில் நான்கு படித்தரங்கள் உள்ளன.

**முதலாவது :**

அறிந்திருத்தல். அதாவது, அல்லாஹ் அனைத்தையும் நன்கறிந்தவன்; நடந்தது, நடக்கப்போவது, அது எப்படி நடக்கும் என்ற அனைத்தையும் அவனது முன்சென்ற நிலையான அறிவைக் கொண்டு அவன் அறிந்து வைத்துள்ளான். எனவே அறியாமைக்குப் பின் அறிதல் (ஒன்றை அறியாமல் இருந்தான்; பின்பு அறிந்து கொண்டான்) என்பதும் அறிந்த பின் மறதி (ஒன்றை அறிந்து வைத்திருந்தான்; பின்பு மறந்து விட்டான்) என்பதும் அல்லாஹ்வுக்குக் கிடையாது.

**இரண்டாவது :**

எழுதப்பட்டிருத்தல். மறுமை நாள்வரை நிகழக்கூடிய அனைத்தையும்

அல்லாஹ் “அல்லவ்ஹுல் மஹ்ஃபூள்” எனும் பதிவுப் புத்தகத்தில் எழுதியுள்ளான்.

﴿أَلَمْ تَعْلَمْ أَنَّ اللَّهَ يَعْلَمُ مَا فِي السَّمَاءِ وَالْأَرْضِ
إِنَّ ذَٰلِكَ فِي كِتَابٍ إِنَّ ذَٰلِكَ عَلَى اللَّهِ يَسِيرٌ ۝﴾

பொருள் : (நபியே!) வானத்திலும் பூமியிலும் இருப்பவற்றை நிச்சயமாக அல்லாஹ் நன்கறிவான் என்பதை நீர் அறியவில்லையா? நிச்சயமாக இவை அனைத்தும் ஒரு புத்தகத்தில் இருக்கின்றன. நிச்சயமாக இது அல்லாஹ்வுக்கு மிகச் சுலபமானதே! (அல்குர்ஆன் 22 : 70)

﴿فِي لَوْحٍ مَّحْفُوظٍ ۝﴾

பொருள் : அல்லவ்ஹுல் மஹ்ஃபூளில் பதிவு செய்யப் பட்டுள்ளது. (அல்குர்ஆன் 85 : 22)

**மூன்றாவது :**

நாடுதல். வானங்கள் பூமியில் உள்ள அனைத்தையும் அல்லாஹ் நாடியிருக்கின்றான். அவனது நாட்டமின்றி எதுவும் உண்டாகவில்லை; உண்டாகவும் முடியாது. அல்லாஹ் எதை நாடினானோ அதுவே நடந்தது; அவன் எதை நாடவில்லையோ அது நடக்கவில்லை; ஒருபோதும் நடக்கவே நடக்காது.

**நான்காவது :**

படைத்தல். அதாவது,

﴿اللَّهُ خَالِقُ كُلِّ شَيْءٍ وَهُوَ عَلَىٰ كُلِّ شَيْءٍ وَكِيلٌ ۝
لَهُ مَقَالِيدُ السَّمَاوَاتِ وَالْأَرْضِ﴾

பொருள் : அல்லாஹ்வே அனைத்து பொருட்களையும் படைப்பவன்; அவனே சகல பொருட்களின் பொறுப்பாளன். வானங்கள்

பூமியிலுள்ளவற்றின் சாவிகள் அவனிடமே இருக்கின்றன. (அல்குர்ஆன் 39 : 62, 63)

இந்த நான்கு விஷயங்கள் அல்லாஹ்வுக்கும் அவனது அடியார்களுக்கும் இடையே உள்ள அனைத்தையும் எடுத்துக் கொள்ளும். அடியார்களின் சொல், செயல், அமைதி என அனைத்தையும் அல்லாஹ் அறிந்திருக்கிறான். அனைத்தும் அல்லாஹ்வின் நூலில் பதிவு செய்யப்பட்டுள்ளன. அவை அனைத்தும் அல்லாஹ் நாடியே நடக்கின்றன. அவனே அவற்றைப் படைக்கின்றான்.

﴿لِمَنْ شَاءَ مِنْكُمْ أَنْ يَسْتَقِيمَ ○
وَمَا تَشَاءُونَ إِلَّا أَنْ يَشَاءَ اللَّهُ رَبُّ الْعَالَمِينَ○﴾

பொருள் : ஆகவே, உங்களில் எவர் நேரான பாதையில் செல்ல விரும்புகிறாரோ அவருக்கு (இந்தக் குர்ஆன் ஓர் உபதேசமாகும்.) எனினும், அகிலகத்தாரின் இறைவனாகிய அல்லாஹ் நாடினால் தவிர நீங்கள் (நல்லுணர்ச்சி பெற) நாடமாட்டீர்கள்.
(அல்குர்ஆன் 81 : 28, 29)

﴿وَلَوْ شَاءَ اللَّهُ مَا اقْتَتَلُوا وَلَٰكِنَّ اللَّهَ يَفْعَلُ مَا يُرِيدُ○﴾

பொருள் : ஆகவே அல்லாஹ் நாடியிருந்தால் (இவ்வாறு) அவர்கள் சண்டை செய்திருக்க மாட்டார்கள். ஆனால் அல்லாஹ், தான் நாடியவற்றையே செய்வான். (அல்குர்ஆன் 2 : 253)

﴿وَلَوْ شَاءَ اللَّهُ مَا فَعَلُوهُ فَذَرْهُمْ وَمَا يَفْتَرُونَ○﴾

பொருள் : அல்லாஹ் நாடியிருந்தால் அவர்கள் இவ்வாறு செய்திருக்க மாட்டார்கள். ஆகவே (நபியே!) நீர் அவர்களையும் அவர்களுடைய பொய்க்கூற்றுகளையும் விட்டு விடுவீராக! (அல்குர்ஆன் 6 : 137)

﴿وَاللَّهُ خَلَقَكُمْ وَمَا تَعْمَلُونَ﴾

பொருள் : உங்களையும் நீங்கள் செய்பவற்றையும் அல்லாஹ்வே படைத்தான். (அல்குர்ஆன் 37 : 96)

அல்லாஹ்வின் நாட்டப்படியே அனைத்தும் நடைபெறுகிறது என்பதை நம்பிக்கை கொள்வதுடன் அல்லாஹ் அடியார்களுக்கு சுய விருப்பத்தையும் ஆற்றலையும் வழங்கியிருக்கிறான். அவர்கள் அவற்றைக் கொண்டே தங்கள் செயல்களைச் செய்கிறார்கள் என்றும் நம்பிக்கை கொள்ள வேண்டும்.

அடியான் செய்யும் செயல்களில் அவனது விருப்பமும் ஆற்றலும் உள்ளது என்பதற்குப் பல ஆதாரங்கள் உள்ளன.

**ஆதாரம்** 1 :

﴿فَأْتُوا حَرْثَكُمْ أَنَّىٰ شِئْتُمْ﴾

பொருள் : ஆகவே, உங்கள் விளை நிலங்களுக்கு நீங்கள் நாடியவாறு வாருங்கள். (அல்குர்ஆன் 2 : 223)

﴿وَلَوْ أَرَادُوا الْخُرُوجَ لَأَعَدُّوا لَهُ عُدَّةً﴾

பொருள் : அவர்கள் (உம்முடன் போருக்குப்) புறப்பட (உண்மையாகவே) நாடியிருந்தால் அதற்கு வேண்டிய தயாரிப்புகளை (முன்னதாகவே) செய்திருப்பார்கள். (அல்குர்ஆன் 9 : 46)

வருவது, தயார் செய்வது, குறித்த நாட்டம் அடியார்களுக்கு இருப்பதை மேற்கண்ட குர்ஆன் வசனங்கள் உறுதிப்படுத்துகின்றன.

**ஆதாரம்** 2 :

ஏவல் விலக்கலை அடியார்களுக்கு அல்லாஹ் தந்திருக்கின்றான். அடியார்களுக்கென சுய விருப்பமும் வலிமையும் இல்லையென்றால்

ஏவல் விலக்கலை அவர்களுக்குத் தருவது சக்தியில்லாதவரிடம் ஒரு செயலைச் செய்யுமாறு நிர்ப்பந்திப்பதாகிவிடும். ஆனால், அல்லாஹ் ஞானமிக்கவன்; அளவற்ற அருளாளன். மேலும், அவன் இறக்கிய நூலும் இதை மறுத்துரைக்கிறது.

﴿لَا يُكَلِّفُ اللَّهُ نَفْسًا إِلَّا وُسْعَهَا﴾

பொருள் : அல்லாஹ் எந்த ஆத்மாவையும் அதன் சக்திக்குமேல் நிர்ப்பந்திப்பதில்லை. (அல்குர்ஆன் 2 : 286)

**ஆதாரம் 3 :**

நன்மை செய்பவர்களை அல்லாஹ் புகழ்கிறான். அதற்காக அவர்களுக்கு நற்கூலி வழங்குகின்றான். தீமை செய்பவர்களை இகழ்கிறான். அவர்களுக்குத் தண்டனை கொடுக்கின்றான். இப்படி இரு விதமான செயலுக்கும் ஏற்ப அல்லாஹ் கூலி கொடுக்கிறான். செயல்கள் அடியார்களின் விருப்பம் மற்றும் நாட்டத்தின் படி நடைபெறவில்லையெனில் நன்மை செய்பவர்களைப் புகழ்வது வீணானதாகவும் தீமை செய்பவர்களைத் தண்டிப்பது அநீதமாகவும் ஆகிவிடும். அல்லாஹ் வீணானவற்றை விட்டும் அநீதியிழைப்பதை விட்டும் பரிசுத்தமானவன்.

**ஆதாரம் 4 :**

அல்லாஹ் தூதர்களை அனுப்பி வைத்தான்.

﴿رُسُلًا مُبَشِّرِينَ وَمُنْذِرِينَ لِئَلَّا يَكُونَ لِلنَّاسِ
عَلَى اللَّهِ حُجَّةٌ بَعْدَ الرُّسُلِ﴾

பொருள் : பல தூதர்களை நற்செய்தி கூறுகின்றவர்களாகவும் அச்சமூட்டி எச்சரிக்கின்றவர்களாகவும் (நாம் அனுப்பி வைத்தோம்). இதற்குக் காரணம் தூதர்களை அனுப்பிய பிறகு அல்லாஹ்விற்கு

எதிராக மக்களுக்கு எவ்வித ஆதாரமும் இருக்கக்கூடாது என்பதே. (அல்குர்ஆன் 4 : 165)

அடியார்களின் செயல்கள் அவர்களது நாட்டப்படியும் விருப்பப்படியும் நடைபெறவில்லை என்றால் தூதர்களை அனுப்பி அல்லாஹ் நிலை நாட்டிய ஆதாரம் வீணாகிவிடும்.

**ஆதாரம் 5 :**

செயல் புரியும் ஒவ்வொருவனும் எந்தவொரு நிர்ப்பந்தமோ தூண்டுதலோ இன்றிதான் செயல்படுவதாக உணர்கிறான். அவன் நாடினால் நிற்கிறான்; அமர்கிறான்; நுழைகிறான்; வெளியேறுகிறான். பயணிக்கிறான்; தங்கி விடுகிறான். இவ்வாறான தனது செயல்களில் தன்னை எவரும் நிர்ப்பந்திப்பதாக அவன் உணர்வதில்லை. மாறாக தனது நாட்டப்படி செயல்படுவதற்கும் பிறரின் நிர்ப்பந்தத்தால் செயல்படுவதற்குமிடையே தெளிவான வேறுபாட்டை உணர்கிறான்.

அவ்வாறே, பிறரால் நிர்ப்பந்திக்கப்பட்டு ஒரு செயலைச் செய்வதற்கும் தானே விரும்பிச் செய்வதற்குமிடையேயான வேறுபாட்டை மார்க்கம் சட்டரீதியாகவும் தெளிவுபடுத்தியுள்ளது. அல்லாஹ்வுக்குரியதில் தனது மனம் விரும்பாமல் நிர்ப்பந்திக்கப்பட்ட நிலையில் ஒரு செயலைச் செய்பவன் தண்டிக்கப்படமாட்டான்.

விதியைக் காரணம் காட்டி ஒரு பாவி தனது பாவச் செயல்களை நியாயப்படுத்த முடியாது. ஏனெனில், தன் விஷயத்தில் அந்தப் பாவம் தீர்மானிக்கப்பட்டுள்ளதை அறியாமல் தனது சுயவிருப்பப்படியே அந்தப் பாவச் செயலை அவன் செய்கிறான். அல்லாஹ் எதைத் தீர்மானித்திருக்கிறான் என்பது அந்தச் செயல் நடைபெற்ற பிறகுதான் எவரும் அறிந்து கொள்ள முடியும்.

﴿وَمَا تَدْرِي نَفْسٌ مَاذَا تَكْسِبُ غَدًا﴾

பொருள் : எந்த ஆத்மாவும் நாளைக்கு அது என்ன செய்யும் என்பதை அறியாது. (அல்குர்ஆன் 31 : 34)

இந்த நிலையில், "அல்லாஹ் எனக்கு விதித்திருந்ததைத்தானே நான் செய்கிறேன்; அதற்கு நான் எப்படிப் பொறுப்பாளியாக முடியும்?" என்று எவரும் கூறமுடியாது. காரணம், அவன் அந்த செயலில் ஈடுபடுவதற்கு முன் விதியில் தனக்கு என்ன விதிக்கப்பட்டுள்ளது என்பது அவனுக்குத் தெரியாது. இவ்வாறு வாதிடுவது தவறு என அல்லாஹ் குர்ஆனில் தெளிவுபடுத்துகிறான்.

﴿سَيَقُولُ الَّذِينَ أَشْرَكُوا لَوْ شَاءَ اللهُ مَا أَشْرَكْنَا وَلَا آبَاؤُنَا
وَلَا حَرَّمْنَا مِنْ شَيْءٍ كَذٰلِكَ كَذَّبَ الَّذِينَ مِنْ قَبْلِهِمْ
حَتّٰى ذَاقُوا بَأْسَنَا قُلْ هَلْ عِنْدَكُمْ مِنْ عِلْمٍ فَتُخْرِجُوهُ لَنَا
إِنْ تَتَّبِعُونَ إِلَّا الظَّنَّ وَإِنْ أَنْتُمْ إِلَّا تَخْرُصُونَ○﴾

பொருள் : அல்லாஹ் நாடியிருந்தால் நாங்களும் எங்களுடைய மூதாதைகளும் (அல்லாஹ்வுக்கு எதையும்) இணைவைத்திருக்க மாட்டோம்; (புசிக்கக்கூடிய) எதையும் (ஆகாதென) நாங்கள் தடுத்திருக்க மாட்டோம் என்று இணைவைத்து வணங்கும் இவர்கள் கூறுகின்றனர். இவ்வாறுதான் இவர்களுக்கு முன்னிருந்தவர்களும் நம்முடைய வேதனையை அனுபவிக்கும் வரை (இறைத் தூதர்களைப்) பொய்யாக்கியே வந்தனர். ஆகவே (நபியே! அவர்களை நோக்கி இதற்கு) உங்களிடம் ஏதும் ஆதாரமுண்டா? (இருந்தால்) அதனை நம்மிடம் கொண்டு வாருங்கள். நீங்கள் வீணான சந்தேகத்தைத்தான் பின்பற்றுகிறீர்கள். மேலும், நீங்கள் சுயமாகவே கற்பனை செய்து கொள்கிறீர்கள் என்று கூறுவீராக! (அல்குர்ஆன் 6 : 148)

அல்லாஹ்வின் "கதரை" தனது செயல்களுக்குக் காரணம் காட்டும் பாவிகளுக்கு நாம் கூறுவதெல்லாம், "நன்மையாயினும் தீமையாயினும் அதை நீ செய்வதற்கு முன்னால் அல்லாஹ் எதைத் தீர்மானித்திருக்கிறான் என்பது உனக்குத் தெரியாது. இந்நிலையில் நான் நன்மை செய்வதைத்தான் அல்லாஹ் எனக்கு நாடி இருக்கிறான் என்று நினைத்து நீ ஏன் நன்மை செய்திருக்கக் கூடாது?.

இது குறித்து வருகின்ற ஒரு நபிமொழியைப் பார்ப்போம்.

**عَنْ عَلِيٍّ ﵁ قَالَ كُنَّا جُلُوسًا عِنْدَ النَّبِيِّ ﷺ فَقَالَ مَا مِنْكُمْ مِنْ أَحَدٍ إِلَّا وَقَدْ كُتِبَ مَقْعَدُهُ مِنَ الْجَنَّةِ وَمَقْعَدُهُ مِنَ النَّارِ فَقُلْنَا يَا رَسُولَ اللهِ أَفَلاَ نَتَّكِلُ قَالَ لاَ اعْمَلُوا فَكُلٌّ مُيَسَّرٌ ثُمَّ قَرَأَ فَأَمَّا مَنْ أَعْطَىٰ وَاتَّقَىٰ وَصَدَّقَ بِالْحُسْنَىٰ فَسَنُيَسِّرُهُ لِلْيُسْرَىٰ إِلَىٰ قَوْلِهِ فَسَنُيَسِّرُهُ لِلْعُسْرَىٰ رَوَاهُ الْبُخَارِيُّ ﵀**

நாங்கள் நபி ﷺ அவர்களுடன் அமர்ந்திருந்தோம். அவர்கள் கூறினார்கள் : உங்களில் ஒவ்வொருவருக்கும் சொர்க்கத்தில் அவருடைய இடம் அல்லது நரகத்தில் அவரது இடம் எழுதப்படாமல் இல்லை. அப்போது, நாங்கள் கேட்டோம், நாங்கள் அதையே சார்ந்து இருந்து விடலாமா? நபி ﷺ அவர்கள் கூறினார்கள் : இல்லை; அமல் செய்யுங்கள்! நிச்சயமாக ஒவ்வொருவரும் (சொர்க்கம் அல்லது நரகம் இரண்டில் எதற்காக படைக்கப்பட்டாரோ) அது அவருக்கு எளிதாக்கப்படும்.[13]

**விதியைக் காரணம் காட்டும் பாவிக்கு நாம் சொல்வோம் :**

1) நீ மக்காவுக்கு பிரயாணம் செய்ய விரும்புகிறாய்; அதற்கு இரு வழிகள் உள்ளன. அதில் ஒன்று பாதுகாப்பற்ற, சிரமங்கள் நிறைந்த பாதை; மற்றொன்று பாதுகாப்பான, எளிதான பாதை என உன் நம்பிக்கைக்குரிய நண்பர் கூறுகிறார். அப்போது முதல் பாதையில் செல்ல உனக்குத் துணிவு பிறக்காது. இரண்டாவது பாதையிலேயே செல்வாய். அவ்வாறில்லாமல் முதல் பாதையில் செல்வதுதான் எனது விதியில் உள்ளது என்று கூறி அதில் நீ சென்றால் மக்கள் உன்னை பைத்தியக்காரன் என்றுதான் தீர்மானிப்பார்கள்.

---

13. அறிவிப்பாளர் : அலீ ﵁, நூல் : புகாரி, எண் : 4947.

2) உனக்கு இரண்டு வேலைகள் வருகின்றன. ஒன்று அதிக வருவாய் தரக்கூடியது. மற்றொன்று குறைந்த வருவாய் தரக்கூடியது. இப்போது சிறந்ததைப் பெறத்தானே நீ முயற்சி செய்வாய்? அவ்வாறிருக்க மறுமை விஷயத்தில் சிறந்ததைப் புறக்கணித்துவிட்டு, தாழ்ந்ததைச் செய்து விதியின் மீது நீ எப்படிப் பழி போடுவாய்!

3) உனக்கு ஏதேனும் உடல் ரீதியான நோய் ஏற்பட்டால் பல மருத்துவர்களின் கதவைத் தட்டுகிறாய்; சிகிச்சையின் போது ஏற்படும் வலியையும் சகித்துக் கொள்கிறாய். இதற்காக மருத்துவரிடம் பல முறை செல்கிறாய். இவை உனக்கு சிரமமாகத் தோன்றுவதில்லை. அப்படி இருக்க பாவ நோயால் பீடிக்கப்பட்ட உனது இதயத்துக்குச் சிகிச்சை பெற இதே முயற்சியை நீ ஏன் மேற்கொள்ளக்கூடாது? அல்லாஹ்வின் ஞானத்தையும், கருணையையும் கவனித்து “ஷர்ரு” -தீமை அல்லாஹ்வின்பால் இணைக்கப்படுவதில்லை.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள் :

وَالشَّرُّ لَيْسَ إِلَيْكَ

(இறைவனே!) தீமைகள் உன் பக்கம் இணைக்கப்படாது.[14]

அல்லாஹ்வின் விதிகளில் எந்த நிலையிலும் தீமை இருக்காது. ஏனெனில், அல்லாஹ்வின் விதிகள் அவனது ஞானம் மற்றும் அருளின் வெளிப்பாடாகும். தீமைகள் உண்டாவதெல்லாம் அந்த விதியால் நடப்பவற்றில்தான்.

நபி ﷺ அவர்கள், ஹஸன் رضي الله عنه அவர்களுக்குக் கற்றுக் கொடுத்த “குனூத்” பிரார்த்தனையில்,

وَقِنِي شَرَّ مَا قَضَيْتَ

14. அறிவிப்பாளர் : அலீ இப்னு அபீ தாலிப் رضي الله عنه, நூல் : ஸஹீஹ் முஸ்லிம், எண் : 771

(அல்லாஹ்வே!) நீ எதைத் தீர்மானித்தாயோ அதன் தீமையிலிருந்து என்னைக் காப்பாயாக![15]

என்று கூறினார்கள்.

அல்லாஹ் எதைத் தீர்மானித்தானோ அந்த தீர்மானிக்கப் பட்டதுடன் தீமையை இணைத்துக் கூறியுள்ளார்கள். அத்துடன், தீர்மானிக்கப்பட்டவற்றில் ஏற்படும் தீமை முற்றிலும் தீமையாக இருப்பதல்ல. மாறாக ஒரு வகையில் பார்த்தால் தீமையாகத் தென்படும் அதே நேரத்தில் மற்றொரு கோணத்தில் அது நன்மையாக இருக்கும். அவ்வாறே ஓர் இடத்தில் தீமையாக இருப்பது மற்றோர் இடத்தில் நன்மையாக இருக்கும். வறட்சி, வறுமை, நோய், அச்சம் போன்றவை தீமையே. இருப்பினும் மற்றொரு கோணத்தில் அவை நன்மையாகும்.

அல்லாஹு தஆலா கூறுகிறான் :

﴿ظَهَرَ الْفَسَادُ فِي الْبَرِّ وَالْبَحْرِ بِمَا كَسَبَتْ أَيْدِي النَّاسِ لِيُذِيقَهُمْ بَعْضَ الَّذِي عَمِلُوا لَعَلَّهُمْ يَرْجِعُونَ۝﴾

பொருள் : மனிதர்களின் கைகள் தேடிக் கொண்டதன் காரணமாக கடலிலும் தரையிலும் அழிவு வேலைகள் (அதிகமாகப்) பரவிவிட்டன. அதிலிருந்து அவர்கள் விலகிக்கொள்ளும் பொருட்டு அவர்களின் தீய செயல்களில் சிலவற்றின் தண்டனையை அவர்கள் (இம்மையிலும்) சுகிக்கும்படி அவன் செய்ய வேண்டியதாகிறது. (அல்குர்ஆன் 30 : 41)

திருடனின் கரத்தைத் துண்டிப்பது, விபசாரம் செய்தவனைக் கல்லால் எறிந்து கொலை செய்வது என்ற தண்டனைகளில் கரம் துண்டிக்கப்படுவதும் உயிர் பறிக்கப்படுவதும் திருடன் மற்றும் விபசாரியைக் கவனித்துத் தீமைதான். இது மற்றொரு கோணத்தில் நன்மையாகும். அதாவது, அவர்களது குற்றத்துக்கான தண்டனை நிறைவேற்றப்பட்டு விட்டால் அது அந்தக் குற்றங்களுக்குப்

15. அறிவிப்பாளர் : அல்ஹசன் இப்னு அலீ ﵄, நூல் : இப்னு மாஜா, எண் : 1178

பரிகாரமாகி விடுகிறது. ஏனெனில், ஒரு குற்றத்துக்காக உலகிலும் மறுமையிலும் என இருமுறை தண்டனை நிறைவேற்றப்படாது. அது மட்டுமின்றி மற்றொரு கோணத்திலும் நன்மையாகும். தண்டனை நிறைவேற்றப்படுவதன் மூலம் சமூகத்தின் பொருள், கண்ணியம் மற்றும் உயிர்கள் பாதுகாக்கப்படுகின்றன.

**சுருக்கம் :**

1. நன்மை தீமை அனைத்தும் அல்லாஹ்வின் விதிப்படியே நடக்கின்றன.
2. அல்லாஹ் விதித்ததை மீறி எதுவும் நடந்து விடாது.
3. விதியை மறுப்பவர் மார்க்கத்தை விட்டு வெளியேறி விடுவார்.
4. விதியை நம்புவதுடன் மனிதனுக்கு அல்லாஹ் சுய உரிமையை கொடுத்திருக்கின்றான், அவன் தனது செயல்களை தன் விருப்பப்படி செய்கிறான். ஆகவே, அவன் செய்கின்ற நன்மை அல்லது தீமைக்கு ஏற்ப அவனுக்கு கூலி கொடுக்கப்படுகின்றது.
5. மனிதர்கள் தங்கள் செயல்களை தங்கள் விருப்பப்படி செய்தாலும் அந்த செயல்களை படைப்பவன் அல்லாஹ்தான் என்று நம்பிக்கை கொள்ள வேண்டும்.
6. அல்லாஹ் நாடாமல், அவன் படைக்காமல் எதுவும் நடக்காது என்று நம்பிக்கை கொள்ள வேண்டும்.

மேற்கூறப்பட்ட கவிதை மற்றும் விளக்க உரையிலிருந்து பல வழிகேடுகளை நாம் புரிந்து கொள்ள முடியும். அவற்றை சுருக்கமாக பார்ப்போம்.

**வழிகேடுகள் :**

1. விதியை மறுப்பது.
2. விதியை நம்புவதை வழிகேடு என்று கூறுவது.

3. ஒவ்வொரு படைப்பும் தனது செயலை தானாக திட்டமிட்டு, தானாக படைத்து, அதை செய்கிறது என்று கூறுவது.

4. அல்லாஹ்விற்கும் அடியார்களின் செயல்களுக்கும் அறவே சம்பந்தம் இல்லை என்று கூறுவது.

5. விதியை குறைக் கூறுவது.

6. விதியை காரணம் காட்டி பாவம் செய்வது, நன்மை செய்வதை விடுவது.

7. விதிதான் எல்லாவற்றுக்கும் காரணம், எனக்கு எவ்வித சுய விருப்பமும், சுய செயல்பாடும் இல்லை என்று கூறி தன்னை விதியின் கீழ் நிர்ப்பந்திக்கப்பட்டவன் என்று கூறுவது.

8. எல்லாம் விதியின் படி என்றால் பிறகு அமல் எதற்கு என்று கூறி அமல்கள் செய்வதை விட்டுவிடுவது.

9. விதியைப் பற்றி விவாதிப்பது, சர்ச்சை செய்வது.

10. விதியின் இரகசியங்களை அறிய முயற்சிப்பது.

இன்னும் இதுபோன்ற அநேக வழிகேடுகள் உள்ளன. அவற்றை தெளிவாக அறிந்து அவற்றை விட்டு நாம் விலகி இருக்க வேண்டும். அல்லாஹ்விடம் ஈமானையும் யக்கீனையும் கேட்டுக் கொண்டே இருக்க வேண்டும்.

அல்லாஹ்வே எங்களுக்கு உறுதியான நம்பிக்கையைத் தா! உன் கதரை நம்பிக்கை கொண்டவர்களிலும், உனது அறிவையும் உனது ஆற்றலையும் நம்பிக்கை கொண்டவர்களிலும் எங்களை ஆக்கி வை! சந்தேக நோயிலிருந்தும் தடுமாற்றங்களிலிருந்தும் எங்களை பாதுகாப்பாயாக! ஆமீன்.

---------------------

وَلَا تُنْكِرَنَّ جَهْلًا نَكِيْرًا وَمُنْكَرًا

وَلَا الْـحَوْضَ وَالْـمِيزَانَ إِنَّكَ تُنْصَحُ

**பொருள் :**

முன்கர், நகீரையும், நீர் தடாகத்தையும், தராசையும் (உன்) அறியாமையால் (நீ) மறுத்துவிடாதே! நிச்சயமாக உனக்கு நல்லுபதேசம் கூறப்படுகின்றது. (ஏற்றுக்கொள்!)

**கருத்து :**

மனிதன் அடக்கம் செய்யப்பட்ட பிறகு கப்ரில் முன்கர் மற்றும் நகீர் என்ற இரண்டு வானவர்கள் அந்த மனிதனிடம் கேள்வி கேட்பார்கள். மறுமையில் நபி ﷺ அவர்களுக்கு விசாலமான நீர் தடாகம் கொடுக்கப்படும். நபியின் உம்மத்தில் உள்ள நல்லோர் அதில் நீர் அருந்துவார்கள். நமது நல்லமல்களின் நன்மைகளையும் பாவங்களின் தீமைகளையும் நிறுப்பதற்கு மறுமையில் தராசு இருக்கும். யாருடைய நன்மையின் தட்டு கனத்ததோ அவர் வெற்றி பெறுவார். யாருடைய தீமையின் தட்டு கனத்ததோ அவர் நஷ்டம் அடைந்து நரகம் செல்வார். இவற்றில் எதையும் மறுக்காமல் நம்ப வேண்டும். இவை மிக்க அவசியமான நல்லுபதேசங்கள் ஆகும். இவற்றில் நாம் சந்தேகப்படாமல் இருக்க வேண்டும்.

**விளக்கம் :**

இந்த கவிதையில் மறைவான விஷயங்களிலிருந்து மூன்று விஷயங்கள் கூறப்பட்டுள்ளன. அவை 1. கப்ரில் கேள்வி கேட்க வருகின்ற முன்கர், நகீர் என்ற இரு வானவர்களை நம்பிக்கைக் கொள்வது. 2. நபி அவர்களின் நீர் தடாகத்தை நம்பிக்கைக் கொள்வது.

3. நன்மைகள், தீமைகள் நிறுக்கப்படும் தராசை நம்பிக்கைக் கொள்வது.

இன் ஷா அல்லாஹ் இவற்றை முறையாக விளங்க முயற்சிப்போம்.

இஸ்லாமிய மார்க்கத்தின் முக்கியமான அம்சம் மறைவானவற்றை நம்பிக்கை கொள்வதாகும். அதாவது, அல்லாஹ்வும் ரஸூலும் நம்முடைய அறிவுக்கும் கண்களுக்கும் மறைந்த விஷயங்களில் எதை எல்லாம் அறிவித்தார்களோ அவை அனைத்தையும் உண்மை என நாம் நம்பிக்கை கொள்ள வேண்டும். அவற்றில் நமக்கு அறவே சந்தேகம் வரக்கூடாது.

அல்லாஹ்வின் கூற்றிலும் நபி ﷺ அவர்களின் கூற்றிலும் நமக்கு முழுமையான நம்பிக்கை இருக்க வேண்டும். அவர்கள் உண்மையைத்தான் நமக்கு கூறுவார்கள். அவர்கள் நமக்கு நேரான வழியைத்தான் நமக்கு காட்டுவார்கள்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான் :

﴿وَمَنْ أَصْدَقُ مِنَ اللّٰهِ حَدِيثًا۝﴾

பொருள் : அல்லாஹ்வைவிட உண்மை சொல்பவர் யார்?
(அல்குர்ஆன் 4 : 87)

﴿وَمَنْ أَصْدَقُ مِنَ اللّٰهِ قِيلًا۝﴾

பொருள் : அல்லாஹ்வைவிட உண்மை சொல்பவர் யார்?
(அல்குர்ஆன் 4 : 122)

﴿وَتَمَّتْ كَلِمَتُ رَبِّكَ صِدْقًا وَعَدْلًا لَا مُبَدِّلَ لِكَلِمَاتِهِ
وَهُوَ السَّمِيعُ الْعَلِيمُ۝﴾

பொருள் : (நபியே!) உமது இறைவனின் வாக்கு உண்மையாகவும் நீதமாகவும் முழுமையாகி விட்டது. அவனுடைய வாக்குகளை

மாற்றுபவன் யாருமில்லை. அவன் (அனைத்தையும்) செவியுறுபவன், நன்கறிந்தவன். (அல்குர்ஆன் 6 : 115)

﴿وَلَوْ تَقَوَّلَ عَلَيْنَا بَعْضَ الْأَقَاوِيلِ ○ لَأَخَذْنَا مِنْهُ بِالْيَمِينِ ○
ثُمَّ لَقَطَعْنَا مِنْهُ الْوَتِينَ ○ فَمَا مِنْكُمْ مِنْ أَحَدٍ عَنْهُ حَاجِزِينَ ○﴾

பொருள் : ஒரு சில வார்த்தைகளை அவர் நம்மீது கற்பனை செய்து பொய்யாகக் கூறினாலும், அவருடைய வலது கரத்தை நாம் (பலமாகப்) பிடித்துக் கொண்டு, பிறகு, அவருடைய உயிர் நாடியை நாம் தறித்து விடுவோம். உங்களில் எவருமே அவரை விட்டும் அதைத் தடுத்துவிட முடியாது. (அல்குர்ஆன் 69 : 44-47)

﴿وَالنَّجْمِ إِذَا هَوَىٰ ○ مَا ضَلَّ صَاحِبُكُمْ وَمَا غَوَىٰ ○
وَمَا يَنْطِقُ عَنِ الْهَوَىٰ ○ إِنْ هُوَ إِلَّا وَحْيٌ يُوحَىٰ ○﴾

பொருள் : விழுந்து மறையும் நட்சத்திரத்தின் மீது சத்தியமாக! (நம் தூதராகிய) உங்கள் தோழர் வழி தவறி விடவுமில்லை; தவறான வழியில் செல்லவுமில்லை. அவர் தன் விருப்பப்படி எதையும் கூறுவதில்லை. இது அவருக்கு வஹ்யு மூலம் அறிவிக்கப்பட்டதே தவிர (வேறு) இல்லை. (அல்குர்ஆன் 53 : 1-4)

عن أَبِي سَعِيدٍ الْخُدْرِيَّ ﵁ يَقُولُ قَالَ رسول الله ﷺ أَلاَ تَأْمَنُونِي وَأَنَا أَمِينُ مَنْ فِي السَّمَاءِ يَأْتِينِي خَبَرُ السَّمَاءِ صَبَاحًا وَمَسَاءً رَوَاهُ الْبُخَارِيُّ ﵀

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள் : நீங்கள் என்னை நம்பமாட்டீர்களா? நான் வானத்தில் உள்ளவனுக்கு நம்பிக்கைக்குரியவனாக இருக்கின்றேன். வானத்தின் செய்திகள்

எனக்கு காலையிலும் மாலையிலும் வருகிறது. (அதைத்தான் நான் உங்களுக்கு கூறுகின்றேன்.)[16]

وَقَالَ ابْنُ مَسْعُودٍ ﵁ حَدَّثَنَا رَسُولُ اللهِ ﷺ وَهُوَ الصَّادِقُ المَصْدُوقُ

இப்னு மஸ்வூத் ﵁ கூறுகிறார்கள் : எங்களுக்கு ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் ஹதீஸ்களை கூறுவார்கள். அவர்கள் உண்மையாளர், நம்பிக்கைக்குரியவர் ஆவார்கள்.[17]

மேற்கூறப்பட்ட ஆதாரங்களின் வெளிச்சத்தில் நமக்கு விளங்க வருவதாவது, நாம் அல்லாஹ்வை நம்பிக்கை கொள்வது உண்மை என்றால் அவனது கூற்றுகளை நம்பிக்கை கொள்ள வேண்டும். நபி ﷺ அவர்களை நபியாக நாம் நம்பிக்கை கொண்டது உண்மை என்றால் அவர்கள் கூறுவதை உண்மை என்று நாம் நம்பிக்கை கொள்ள வேண்டும்.

இப்போது மறைவான விஷயங்கள் பற்றிப் பேசுவோம்.

மார்க்கத்தின் பார்வையில் மறைவான விஷயங்களை நாம் மூன்று வகைப் படுத்தலாம்.

1. நமக்கு முன்னர் வாழ்ந்த மக்களைப் பற்றிய வரலாறு. அதாவது, நமக்கு முன்னர் வாழ்ந்த நபிமார்கள், அவர்களின் சமுதாயத்தினர் மற்றும் அவர்களின் காலம் சம்பந்தப்பட்ட விஷயங்கள். இவற்றில் இருந்து அல்லாஹ்வும் ரஸூலும் எதைக் கூறினார்களோ அதை நாம் கண்டிப்பாக ஏற்று நம்பிக்கை கொள்ள வேண்டும்.

2. இனி வரும் காலங்களில் நடக்கப் போகும் விஷயங்கள் என்று குர்ஆனிலும் ஹதீஸிலும் அறிவிக்கப்பட்டுள்ள செய்திகள். இவற்றையும் நாம் நம்பிக்கை கொள்ள வேண்டும். இது வரை நடக்கவில்லையே! இனி எப்போது நடக்கும்? என்று குதர்க்கம் பேசக் கூடாது. உதாரணமாக சில வழிகேடர்கள் தஜ்ஜால்,

16. அறிவிப்பாளர் : அபூ சயீது குத்ரி ﵁, நூல் : புகாரி, எண் : 4351

17. அறிவிப்பாளர் : இப்னு மஸ்வூத் ﵁, நூல் : புகாரி, எண் : 3208

யஃஜூஜ், மஃஜூஜ் உடைய வருகை, ஈஸா ﷺ அவர்கள் வானத்திலிருந்து இறங்குதல் இன்னும் இது போன்ற மறுமையின் பல அடையாளங்களை மறுக்கின்றனர். இது மிகப் பெரிய தவறாகும்.

3. நமது மரணத்திற்கு பின்னர் நடக்கப் போகும் விஷயங்கள். இவை சம்பந்தமாக குர்ஆனிலும் ஹதீஸிலும் வந்த அனைத்தையும் நாம் நம்பிக்கை கொள்ள வேண்டும். அந்த மறைவான விஷயங்களை நமது அறிவைக் கொண்டு எடைப்போட்டு, அது முடியுமா முடியாதா என்று கேள்வி கேட்கக் கூடாது. அல்லாஹ்வை நம்பிக்கை கொள்வது உண்மை என்றால் அவன் கூறியதை நாம் முழுமையாக நம்பிக்கை கொள்ள வேண்டும். நபி ﷺ அவர்களை நாம் நம்பிக்கை கொண்டது உண்மை என்றால் அவர்கள் கூறிய அனைத்தையும் நாம் நம்பிக்கை கொள்ள வேண்டும். அவற்றில் நமக்கு எவ்வித குழப்பமும் ஐயமும் இருக்கக் கூடாது.

ஈமான் உடைய ஆறு தூண்களில் ஒன்று, மறுமையை -மரணத்திற்குப் பின்னுள்ள வாழ்க்கையை நம்பிக்கை கொள்வதாகும்.

ஆசிரியர் அவர்கள் மறைவான விஷயங்களில் வழிகெட்ட மக்கள் அதிகம் கருத்து வேற்றுமை செய்கின்ற சிலவற்றை மட்டும் இங்கு குறிப்பிடுகிறார்கள். இவற்றை மட்டும் நம்பிக்கைக் கொண்டுவிட்டு, மற்றதை விட்டுவிட முடியாது. மாறாக, இவற்றை கூறுவதன் நோக்கம் மக்கள் எதில் அதிகம் கருத்து வேற்றுமை செய்து, அதை மறுக்கின்றார்களோ அத்தகைய விஷயங்களை அவை உண்மை என்று உறுதிப்படுத்துவதாகும்.

நமக்கு மரணம் உண்டு. மரணத்திற்குப் பிறகு நமக்கு பர்ஸக் என்ற மண்ணறை வாழ்க்கையும் அதன் பிறகு நியாயத்தீர்ப்பு நாள் என்ற மண்ணறையிலிருந்து எழுப்பப்படுகின்ற நாள் ஒன்றும் உண்டு.

மனிதன் இறந்த பின்னர், அவன் மறுமையில் எழுப்பப்படுகின்ற வரை அந்த மண்ணறையில் இருப்பான். அதைத்தான் برزخ -பர்ஸக் என்று

கூறப்படும். ஒரு மனிதன் எப்படி இறந்தாலும் அவனுக்கு பர்ஸக் வாழ்க்கை உண்டு. அவனை மிருகங்கள் தின்றாலும் சரி, அவன் தீயில் கருகி சாம்பலாகி விட்டாலும் சரி, அவன் கடலில் மூழ்கி கரைந்து விட்டாலும் சரி. எப்படி மனிதன் இறந்தாலும் அவனுக்கு பர்ஸக் வாழ்க்கை உண்டு. அங்கு அவனுக்கு விசாரணை உண்டு. இரண்டு வானவர்கள் அவனிடம் கேள்வி கேட்பார்கள். பிறகு அவனுக்கு அந்த மண்ணறை ஒன்று சொர்க்க பூங்காவாக மாறும். அல்லது நரகப் படுகுழியாக மாறும். மறுமை நாளில் எழுப்பப்படுகின்ற வரை எல்லா மனிதர்களும் அங்குதான் இருக்க வேண்டும்.

மண்ணறையில் நடப்பது நமது கண்ணுக்குத் தெரியவில்லை என்ற காரணத்தால் அதை மறுப்பது வழிகேடாகும். மறுமை வாழ்க்கையை நாம் பார்க்காமல் நம்புவது போன்று நாம் மண்ணறை வாழ்க்கை குறித்து குர்ஆனிலும் ஹதீஸிலும் வந்துள்ள அனைத்து விஷயங்களையும் நம்பிக்கை கொள்ள வேண்டும்.

மறைவானவற்றை நம்பிக்கை கொள்வதில் மரணத்திற்குப் பிறகு நடக்கும் அனைத்து விஷயங்களும் அடங்கும். கப்ருடைய வாழ்க்கையிலிருந்து சொர்க்கம், நரகம் வரை உள்ள அனைத்தும் அதில் அடங்கும். அதுபோன்று மறுமையை நம்பிக்கை கொள்வது என்பதில் மரணத்திற்குப் பிறகுள்ள அனைத்து விஷயங்களும் அடங்கும்.

இப்போது மறைவானவற்றை நம்பிக்கைக் கொள்வது, மற்றும் மண்ணறை வாழ்க்கைப் பற்றி வந்துள்ள சில வசனங்களையும் ஹதீஸ்களையும் பார்ப்போம்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான் :

﴿ذٰلِكَ الْكِتَابُ لَا رَيْبَ فِيهِ هُدًى لِلْمُتَّقِينَ○ الَّذِينَ يُؤْمِنُونَ بِالْغَيْبِ وَيُقِيمُونَ الصَّلَاةَ وَمِمَّا رَزَقْنَاهُمْ يُنْفِقُونَ○ وَالَّذِينَ يُؤْمِنُونَ بِمَا أُنْزِلَ إِلَيْكَ وَمَا أُنْزِلَ مِنْ قَبْلِكَ وَبِالْآخِرَةِ هُمْ يُوقِنُونَ○

﴿أُولَٰئِكَ عَلَىٰ هُدًى مِنْ رَبِّهِمْ وَأُولَٰئِكَ هُمُ الْمُفْلِحُونَ۝﴾

பொருள் : இதுதான் வேதநூல். இதில் சந்தேகமேயில்லை. இறையச்சம் உடையவர்களுக்கு (இது) நேரான வழியைக் காட்டும். அவர்கள் மறைவானவற்றை (உண்டென்று) நம்பிக்கை கொள்வார்கள். தொழுகையையும் நிலைநிறுத்துவார்கள் (தவறாது கடைபிடிப்பார்கள்). நாம் அவர்களுக்கு வழங்கிய (பொருள், செல்வம் போன்ற) வற்றிலிருந்து (தானமாக) செலவும் செய்வார்கள். மேலும், (நபியே!) அவர்கள் உமக்கு இறக்கப்பட்ட இ(வ்வேதத்)தையும், உமக்கு முன் (சென்ற நபிமார்களுக்கு) இறக்கப்பட்ட (வேதங்கள் யா)வற்றையும் நம்பிக்கை கொள்வார்கள். (நியாயத் தீர்ப்பு நாளாகிய) இறுதி நாளையும் (உண்மை என்று) உறுதியாக நம்புவார்கள். இவர்கள்தான் தங்கள் இறைவனின் நேரான வழியில் இருக்கிறார்கள். இவர்கள்தான் நிச்சயமாக வெற்றி பெற்றவர்கள். (அல்குர்ஆன் 2 : 2-5)

﴿عَالِمُ الْغَيْبِ وَالشَّهَادَةِ الْعَزِيزُ الْحَكِيمُ۝﴾

பொருள் : அவன் மறைவானதையும், வெளிப்படையானதையும் நன்கறிந்தவன்; (அனைவரையும்) மிகைத்தவன்; ஞானமுடையவன் ஆவான். (அல்குர்ஆன் 64 : 18)

﴿جَنَّاتِ عَدْنٍ الَّتِي وَعَدَ الرَّحْمَٰنُ عِبَادَهُ
بِالْغَيْبِ إِنَّهُ كَانَ وَعْدُهُ مَأْتِيًّا۝ لَا يَسْمَعُونَ فِيهَا لَغْوًا إِلَّا سَلَامًا
وَلَهُمْ رِزْقُهُمْ فِيهَا بُكْرَةً وَعَشِيًّا۝ تِلْكَ الْجَنَّةُ الَّتِي نُورِثُ
مِنْ عِبَادِنَا مَنْ كَانَ تَقِيًّا۝﴾

பொருள் : அது ‘அத்ன்’ என்னும் என்றென்றும் நிலையான சொர்க்கங்களாகும். (அவை தற்சமயம்) மறைவாக இருந்தபோதிலும், அவற்றை ரஹ்மான் தன் நல்லடியார்களுக்கு வாக்களித்திருக்கிறான்.

நிச்சயமாக அவனுடைய வாக்குறுதி நடைபெற்றே தீரும். (அவற்றில்) ஸலாம் (என்ற முகமனைத்) தவிர வீணான வார்த்தைகளைச் செவியுற மாட்டார்கள். அங்கு அவர்களுக்குக் காலையிலும் மாலையிலும் (மிக்க மேலான) உணவு அளிக்கப்படும். இத்தகைய சொர்க்கத்திற்கு நம் அடியார்களில் இறையச்சமுடையவர்களை நாம் வாரிசாக்கி விடுவோம். (அல்குர்ஆன் 19 : 61-63)

﴿لَيْسَ الْبِرَّ أَنْ تُوَلُّوا وُجُوهَكُمْ قِبَلَ الْمَشْرِقِ وَالْمَغْرِبِ وَلٰكِنَّ الْبِرَّ مَنْ آمَنَ بِاللّٰهِ وَالْيَوْمِ الْآخِرِ وَالْمَلَائِكَةِ وَالْكِتَابِ وَالنَّبِيِّينَ﴾

பொருள் : மேற்கிலோ கிழக்கிலோ உங்கள் முகங்களை நீங்கள் திருப்பி விடுவதனால் மட்டும் நன்மை செய்தவர்களாக ஆகிவிடமாட்டீர்கள். (உங்களில்) எவர் அல்லாஹ்வையும், இறுதி நாளையும் (மறுமை நாளையும்), வானவர்களையும், வேதங்களையும், நபிமார்களையும், நிச்சயமாக நம்பிக்கை கொண்டார்களோ அதுதான் நன்மையாகும். (அல்குர்ஆன் 2 : 177)

﴿ذٰلِكَ يُوعَظُ بِهِ مَنْ كَانَ مِنْكُمْ يُؤْمِنُ بِاللّٰهِ وَالْيَوْمِ الْآخِرِ﴾

பொருள் : உங்களில் எவர் அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்பிக்கை கொண்டிருக்கிறாரோ அவர் இதைக் கொண்டு உபதேசிக்கப்படுகிறார். (அல்குர்ஆன் 2 : 232)

﴿يُؤْمِنُونَ بِاللّٰهِ وَالْيَوْمِ الْآخِرِ وَيَأْمُرُونَ بِالْمَعْرُوفِ وَيَنْهَوْنَ عَنِ الْمُنْكَرِ وَيُسَارِعُونَ فِي الْخَيْرَاتِ وَأُولٰئِكَ مِنَ الصَّالِحِينَ○﴾

பொருள் : அவர்கள் அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்பிக்கை கொண்டு, (மனிதர்களுக்கு) நன்மையான காரியங்களை ஏவி, தீமையான காரியங்களிலிருந்து தடுத்து, நன்மையான காரியங்களைச் செய்ய விரை(ந்தும் செல்)கின்றனர். இவர்களும் நல்லவர்களில் உள்ளவர்களே. (அல்குர்ஆன் 3 : 114)

﴿يَاأَيُّهَا الَّذِينَ آمَنُوا آمِنُوا بِاللّٰهِ وَرَسُولِهِ وَالْكِتَابِ الَّذِي نَزَّلَ عَلَىٰ رَسُولِهِ وَالْكِتَابِ الَّذِي أَنْزَلَ مِنْ قَبْلُ وَمَنْ يَكْفُرْ بِاللّٰهِ وَمَلَائِكَتِهِ وَكُتُبِهِ وَرُسُلِهِ وَالْيَوْمِ الْآخِرِ فَقَدْ ضَلَّ ضَلَالًا بَعِيدًا۝﴾

பொருள் : நம்பிக்கையாளர்களே! நீங்கள் அல்லாஹ்வையும், அவனுடைய தூதரையும், அவன் தன் தூதர் மீது அருளிய இவ்வேதத்தையும், இதற்கு முன்னர் அவன் அருளிய வேதங்களையும் நம்பிக்கை கொள்ளுங்கள். எவன் அல்லாஹ்வையும், அவனுடைய வானவர்களையும், அவனுடைய வேதங்களையும், அவனுடைய தூதர்களையும், இறுதி நாளையும் நிராகரிக்கிறானோ அவன் நிச்சயமாக வெகு தூரமான வழிகேட்டில்தான் செல்கிறான்.
(அல்குர்ஆன் 4 : 136)

﴿لٰكِنِ الرَّاسِخُونَ فِي الْعِلْمِ مِنْهُمْ وَالْمُؤْمِنُونَ يُؤْمِنُونَ بِمَا أُنْزِلَ إِلَيْكَ وَمَا أُنْزِلَ مِنْ قَبْلِكَ وَالْمُقِيمِينَ الصَّلَاةَ وَالْمُؤْتُونَ الزَّكَاةَ وَالْمُؤْمِنُونَ بِاللّٰهِ وَالْيَوْمِ الْآخِرِ أُولٰئِكَ سَنُؤْتِيهِمْ أَجْرًا عَظِيمًا۝﴾

பொருள் : எனினும் (நபியே!) அவர்களில் கல்வியில் உறுதி மிக்கவர்களும், உண்மை நம்பிக்கையாளர்களும், உம் மீது அருளப்பட்ட (இவ்வேதத்)தையும், உமக்கு முன்னர் அருளப்பட்டிருந்த (வேதங்கள் யா)வற்றையும் மெய்யாகவே நம்பிக்கை கொள்வார்கள் தொழுகையையும் கடைப்பிடித்துத் தொழுபவர்கள்; ஜகாத்தும் கொடுத்து வருபவர்கள்; அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்பிக்கை கொண்டவர்கள். ஆகிய இவர்களுக்கு (மறுமையில்) மகத்தான கூலியை நாம் கொடுப்போம். (அல்குர்ஆன் 4 : 162)

﴿وَمِنْ وَرَائِهِمْ بَرْزَخٌ إِلَىٰ يَوْمِ يُبْعَثُونَ۝﴾

பொருள் : அவர்களுக்கு முன் ஓர் அரண் ஏற்பட்டு விடும். (உயிர்

கொடுத்து) எழுப்பப்படும் நாள் வரை அதில் தங்கிவிடுவார்கள். (அல்குர்ஆன் 23 : 100)

﴿وَمَنْ أَعْرَضَ عَنْ ذِكْرِي فَإِنَّ لَهُ مَعِيشَةً ضَنْكًا
وَنَحْشُرُهُ يَوْمَ الْقِيَامَةِ أَعْمَىٰ ۝﴾

பொருள் : எவன் என் நல்லுபதேசங்களைப் புறக்கணிக்கிறானோ அவனுடைய வாழ்க்கை நிச்சயமாக நெருக்கடியானதாகவே இருக்கும். மறுமை நாளிலோ நாம் அவனைக் குருடனாகவே எழுப்புவோம். (அல்குர்ஆன் 20 : 124)

﴿وَحَاقَ بِآلِ فِرْعَوْنَ سُوءُ الْعَذَابِ ۝ النَّارُ يُعْرَضُونَ عَلَيْهَا غُدُوًّا
وَعَشِيًّا وَيَوْمَ تَقُومُ السَّاعَةُ أَدْخِلُوا آلَ فِرْعَوْنَ أَشَدَّ الْعَذَابِ ۝﴾

பொருள் : ஃபிர்அவ்னுடைய மக்களைக் கடினமான வேதனை சூழ்ந்துகொண்டது. காலையிலும் மாலையிலும் அவர்கள் நரக நெருப்பின் முன் கொண்டு போகப்படுகின்றனர். மறுமை நாளிலோ, ஃபிர்அவ்னுடைய மக்களை மிகக் கடினமான வேதனையில் புகுத்துங்கள் எனக் கூறப்படும். (அல்குர்ஆன் 40 : 45, 46)

﴿مِمَّا خَطِيئَاتِهِمْ أُغْرِقُوا فَأُدْخِلُوا نَارًا فَلَمْ يَجِدُوا
لَهُمْ مِنْ دُونِ اللَّهِ أَنْصَارًا ۝﴾

பொருள் : ஆகவே, அவர்கள் செய்துகொண்டிருந்த பாவத்தின் காரணமாக, (வெள்ளப் பிரளயத்தில்) மூழ்கடிக்கப்பட்டு, பின்னர் நரகத்திலும் புகுத்தப்பட்டனர். அல்லாஹ்வையன்றி அவர்களுக்கு உதவி செய்பவர்களை அவர்கள் காணவில்லை.

(அல்குர்ஆன் 71 : 25)

ஜிப்ரீல் عليه السلام அவர்கள் நபி ﷺ அவர்களிடம் ஈமான் என்றால் என்ன

என்று கேட்டார்கள். அதற்கு நபி ﷺ அவர்கள் கூறினார்கள் : நீ அல்லாஹ்வையும் அவனது வேதங்களையும் அவனது வானவர்களையும் அவனது தூதர்களையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொள்ள வேண்டும். இன்னும் விதியை அதில் உள்ள நன்மையையும் தீமையையும் சேர்த்து நம்பிக்கை கொள்ள வேண்டும். இதற்கு, நீங்கள் உண்மையை கூறினீர்கள் என்று நபியை நோக்கி ஜிப்ரீல் عليه السلام அவர்கள் பதில் கூறினார்கள்.[18]

**عَنْ عَائِشَةَ رضي الله عنها زَوْجِ النَّبِيِّ ﷺ أَنَّ يَهُودِيَّةً جَاءَتْ تَسْأَلُهَا فَقَالَتْ لَهَا أَعَاذَكِ اللّٰهُ مِنْ عَذَابِ الْقَبْرِ فَسَأَلَتْ عَائِشَةُ رضي الله عنها رَسُولَ اللّٰهِ ﷺ أَيُعَذَّبُ النَّاسُ فِي قُبُورِهِمْ فَقَالَ رَسُولُ اللّٰهِ ﷺ عَائِذًا بِاللّٰهِ مِنْ ذٰلِكَ رَوَاهُ الْبُخَارِيُّ رحمه الله**

நபி ﷺ அவர்களின் மனைவியார் ஆயிஷா رضي الله عنها அவர்கள் கூறுகிறார்கள் : ஒரு யூதப் பெண் ஆயிஷா رضي الله عنها அவர்களிடம் கேள்வி கேட்க வந்தார். பிறகு அவர் ஆயிஷா رضي الله عنها அவர்களை நோக்கி அல்லாஹ் உம்மை கப்ருடைய வேதனையிலிருந்து பாதுகாப்பானாக! என்று கூறினார். ஆயிஷா رضي الله عنها அவர்கள் இது பற்றி ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களிடம், மக்கள் தங்கள் கப்ருகளில் வேதனை செய்யப்படுவார்களா? என்று கேட்டார்கள். அதற்கு, ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் அல்லாஹ்விடம் அதிலிருந்து பாதுகாப்புத் தேடியவராக (ஆம்) என்று கூறினார்கள்.[19]

**قَالَتْ عَائِشَةُ رضي الله عنها فَمَا رَأَيْتُ رَسُولَ اللّٰهِ ﷺ بَعْدُ صَلَّى صَلَاةً إِلَّا تَعَوَّذَ مِنْ عَذَابِ الْقَبْرِ زَادَ غُنْدَرٌ عَذَابُ الْقَبْرِ حَقٌّ رَوَاهُ الْبُخَارِيُّ رحمه الله**

ஆயிஷா رضي الله عنها அவர்கள் அறிவிக்கின்ற மற்றொரு அறிவிப்பில்

---

18. அறிவிப்பாளர் : உமர் رضي الله عنه, நூல் : புகாரி, எண் : 50
19. அறிவிப்பாளர் : ஆயிஷா رضي الله عنها, நூல் : புகாரி, எண் : 1049.

வந்துள்ளதாவது : அதற்குப் பிறகு ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் எந்த தொழுகை தொழுதாலும் கப்ருடைய வேதனையிலிருந்து பாதுகாப்பு தேடாமல் இருக்க மாட்டார்கள். அறிவிப்பாளர் குன்தர் அவர்கள் இந்த அறிவிப்பில், கப்ருடைய வேதனை உண்மை ஆகும் என்ற செய்தியையும் சேர்த்து அறிவிக்கிறார்.[20]

**عَنِ الْبَرَاءِ بْنِ عَازِبٍ رضي الله عنهما عَنِ النَّبِيِّ ﷺ قَالَ إِذَا أُقْعِدَ الْمُؤْمِنُ فِي قَبْرِهِ أُتِيَ ثُمَّ شَهِدَ أَنْ لاَ إِلٰهَ إِلَّا اللهُ وَأَنَّ مُحَمَّدًا رَسُولُ اللهِ فَذٰلِكَ قَوْلُهُ يُثَبِّتُ اللهُ الَّذِينَ آمَنُوا بِالقَوْلِ الثَّابِتِ حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ بَشَّارٍ حَدَّثَنَا غُنْدَرٌ حَدَّثَنَا شُعْبَةُ بِهٰذَا وَزَادَ يُثَبِّتُ اللهُ الَّذِينَ آمَنُوا نَزَلَتْ فِي عَذَابِ القَبْرِ رَوَاهُ الْبُخَارِيُّ رحمه الله**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள் : முஃமின் தனது கப்ரில் அமரவைக்கப்படும்போது அவரிடம் (இரு வானவர்கள்) வருவார்கள். பிறகு அவர் அஷ்ஹது அல்லா இலாஹ இல்லல்லாஹ், வஅஷ்ஹது அன்ன முஹம்மதர் ரஸூலுல்லாஹ் என்று சாட்சி கூறுவார். இதைத்தான் அல்லாஹ் கூறுகிறான் :

**﴿يُثَبِّتُ اللهُ الَّذِينَ آمَنُوا بِالقَوْلِ الثَّابِتِ﴾**

பொருள் : நம்பிக்கைக் கொண்டவர்களை அல்லாஹ் உறுதியான சொல்லைக் கொண்டு உறுதிப் படுத்துவான்.

(அல்குர்ஆன் 14 : 27)

தாபியீ ஷுஅபா رحمه الله அவர்கள் அறிவிக்கின்ற அறிவிப்பில், இந்த வசனம் கப்ருடைய தண்டனை விஷயத்தில் இறங்கியது என்ற செய்தியும் இடம் பெற்றுள்ளது.[21]

---

20. அறிவிப்பாளர் : ஆயிஷா رضي الله عنها, நூல் : புகாரி, எண் : 1372.
21. அறிவிப்பாளர் : அல் பரா இப்னு ஆஸிப் رضي الله عنهما, நூல் : புகாரி, எண் : 1369

عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ قَالَ كَانَ رَسُولُ اللهِ ﷺ يَدْعُو وَيَقُولُ اَللّٰهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ عَذَابِ القَبْرِ وَمِنْ عَذَابِ النَّارِ وَمِنْ فِتْنَةِ المَحْيَا وَالمَمَاتِ وَمِنْ فِتْنَةِ المَسِيحِ الدَّجَّالِ رَوَاهُ الْبُخَارِيُّ رحمه الله

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் துஆ செய்வார்கள். மேலும், அந்த துஆவில் அவர்கள் கூறுவார்கள் : அல்லாஹ்வே! நிச்சயமாக நான் உன்னிடம் கப்ருடைய வேதனையிலிருந்தும் நரகத்தின் வேதனையிலிருந்தும் வாழ்க்கை, இன்னும் மரணத்தின் குழப்பத்திலிருந்தும் மசீஹ் தஜ்ஜால் உடைய குழப்பத்திலிருந்தும் பாதுகாவல் தேடுகிறேன்.[22]

عَنْ أَنَسٍ رضي الله عنه عَنِ النَّبِيِّ ﷺ قَالَ العَبْدُ إِذَا وُضِعَ فِي قَبْرِهِ وَتُوُلِّيَ وَذَهَبَ أَصْحَابُهُ حَتَّىٰ إِنَّهُ لَيَسْمَعُ قَرْعَ نِعَالِهِمْ أَتَاهُ مَلَكَانِ فَأَقْعَدَاهُ فَيَقُولَانِ لَهُ مَا كُنْتَ تَقُولُ فِي هٰذَا الرَّجُلِ مُحَمَّدٍ ﷺ فَيَقُولُ أَشْهَدُ أَنَّهُ عَبْدُ اللهِ وَرَسُولُهُ فَيُقَالُ انْظُرْ إِلَىٰ مَقْعَدِكَ مِنَ النَّارِ أَبْدَلَكَ اللهُ بِهِ مَقْعَدًا مِنَ الجَنَّةِ قَالَ النَّبِيُّ ﷺ فَيَرَاهُمَا جَمِيعًا وَأَمَّا الكَافِرُ أَوِ المُنَافِقُ فَيَقُولُ لاَ أَدْرِي كُنْتُ أَقُولُ مَا يَقُولُ النَّاسُ فَيُقَالُ لاَ دَرَيْتَ وَلاَ تَلَيْتَ ثُمَّ يُضْرَبُ بِمِطْرَقَةٍ مِنْ حَدِيدٍ ضَرْبَةً بَيْنَ أُذُنَيْهِ فَيَصِيحُ صَيْحَةً يَسْمَعُهَا مَنْ يَلِيهِ إِلَّا الثَّقَلَيْنِ رَوَاهُ الْبُخَارِيُّ رحمه الله

நபி ﷺ அவர்கள் கூறினார்கள் : ஓர் அடியான் கப்ரில் அடக்கம் செய்யப்பட்டுவிட்டு, அவனுடைய தோழர்கள் திரும்பும்போது இறுதியாக, அவர்களின் செருப்பின் ஓசையை நிச்சயமாக அவர் செவியுறுகிறார். அப்போது, இரண்டு வானவர்கள் அவனிடம் வந்து

22. அறிவிப்பாளர் : அபூ ஹுரைரா رضي الله عنه, நூல் : புகாரி, எண் : 1377

அவனை உட்கார வைத்து, முஹம்மத் எனும் இந்த மனிதரைப் - பற்றி நீ என்ன கூறிக் கொண்டிருந்தாய்? எனக் கேட்பர். அதற்கவன், நிச்சயமாக இவர் அல்லாஹ்வின் அடியாரும் அவனுடைய தூதருமாவார் என நான் சாட்சி கூறுகிறேன் என்பான். பிறகு (நீ கெட்டவனாக இருந்திருந்தால் நரகத்தில் உனக்கு கிடைக்க இருந்த) தங்குமிடத்தைப் பார்! (நீ நல்லவனாக இருப்பதால்) அல்லாஹ் இதற்குப் பதிலாக உனக்குச் சொர்க்கத்தில் தங்குமிடத்தை ஏற்படுத்தியுள்ளான் என்று அவனிடம் கூறப்பட்டதும் அவன் அவ்விரண்டையும் ஒரே நேரத்தில் காண்பான். நிராகரிப்பவனாகவோ, அல்லது நயவஞ்சகனாகவோ இருந்தால் கேள்வி கேட்கப்பட்டவுடன், எனக்குத் தெரியாது; மக்கள் சொல்வதையே நானும் சொல்லிக் கொண்டிருந்தேன் என்பான். அப்போது அவனிடம் நீயாக எதையும் அறிந்ததுமில்லை; (குர்ஆனை) ஓதி (விளங்கி)யதுமில்லை என்று கூறப்படும். பிறகு இரும்பினாலான சுத்தியலால் அவனுடைய இரண்டு காதுகளுக்குமிடையே (பிடரியில்) ஓர் அடி கொடுக்கப்படும். அப்போது மனிதர்கள், ஜின்களைத் தவிர மற்ற அனைத்தும் செவியேற்குமளவுக்கு அவன் கத்துவான்.[23]

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِذَا قُبِرَ الْمَيِّتُ أَوْ قَالَ أَحَدُكُمْ أَتَاهُ مَلَكَانِ أَسْوَدَانِ أَزْرَقَانِ يُقَالُ لأَحَدِهِمَا الْمُنْكَرُ وَلِلآخَرِ النَّكِيرُ فَيَقُولاَنِ مَا كُنْتَ تَقُولُ فِي هٰذَا الرَّجُلِ فَيَقُولُ مَا كَانَ يَقُولُ هُوَ عَبْدُ اللهِ وَرَسُولُهُ أَشْهَدُ أَنْ لاَ إِلٰهَ إِلاَّ اللهُ وَأَنَّ مُحَمَّدًا عَبْدُهُ وَرَسُولُهُ فَيَقُولاَنِ قَدْ كُنَّا نَعْلَمُ أَنَّكَ تَقُولُ هٰذَا ثُمَّ يُفْسَحُ لَهُ فِي قَبْرِهِ سَبْعُونَ ذِرَاعًا فِي سَبْعِينَ ثُمَّ يُنَوَّرُ لَهُ فِيهِ ثُمَّ يُقَالُ لَهُ نَمْ فَيَقُولُ أَرْجِعُ إِلَى أَهْلِي فَأُخْبِرُهُمْ فَيَقُولاَنِ نَمْ كَنَوْمَةِ العَرُوسِ الَّذِي لاَ يُوقِظُهُ إِلاَّ أَحَبُّ أَهْلِهِ**

23. அறிவிப்பாளர் : அனஸ் ﷺ, நூல் : புகாரி : 1338

إِلَيْهِ حَتَّىٰ يَبْعَثَهُ اللهُ مِنْ مَضْجَعِهِ ذٰلِكَ وَإِنْ كَانَ مُنَافِقًا قَالَ سَمِعْتُ النَّاسَ يَقُولُونَ فَقُلْتُ مِثْلَهُ لاَ أَدْرِي فَيَقُولاَنِ قَدْ كُنَّا نَعْلَمُ أَنَّكَ تَقُولُ ذٰلِكَ فَيُقَالُ لِلأَرْضِ التَئِمِي عَلَيْهِ فَتَلْتَئِمُ عَلَيْهِ فَتَخْتَلِفُ فِيهَا أَضْلاَعُهُ فَلاَ يَزَالُ فِيهَا مُعَذَّبًا حَتَّىٰ يَبْعَثَهُ اللَّهُ مِنْ مَضْجَعِهِ ذٰلِكَ رَوَاهُ التِّرْمِذِيُّ رحمه الله

இறந்தவரை அல்லது உங்களில் ஒருவரை அடக்கம் செய்யப்பட்டால் அவரிடம் கருப்பும் நீலநிறமும் கலந்த இரு வானவர்கள் வருவார்கள். அவர்களில் ஒருவருக்கு முன்கர் என்றும் மற்றொருவருக்கு நகீர் என்றும் கூறப்படும். இந்த மனிதரைப் பற்றி நீ என்ன கூறிக்கொண்டிருந்தாய் என்று அவ்விருவரும் கேட்பார்கள். அவர் கூறுவார் : அவர் அல்லாஹ் உடைய அடியாரும் அவனுடைய தூதரும் ஆவார். நிச்சயமாக வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் அறவே இல்லை. நிச்சயமாக முஹம்மது அவர்கள் அவனுடைய அடியாரும் அவனது தூதரும் ஆவார் என்று நான் சாட்சி கூறுகின்றேன். நீ இப்படித்தான் கூறிக் கொண்டிருந்தாய் என்பதை நாங்கள் திட்டமாக அறிவோம் என்று அவ்விருவரும் கூறுவார்கள். பிறகு, அவருடைய கப்ர் அவருக்கு எழுபதுக்கு எழுபது முழம் விசாலமாக்கப்படும். பிறகு அவருக்கு அதில் ஒளி ஏற்படுத்தப்படும். பிறகு அவருக்கு நீ தூங்கு என்று கூறப்படும். அதற்கு அவர், நான் திரும்பிச் சென்று எனது குடும்பத்திடம் இதை அறிவிக்கப் போகிறேன் என்று கூறுவார். அதற்கு அவ்விருவரும் கூறுவார்கள் : நீ புதுமாப்பிள்ளைப் போன்று தூங்கு. அவரை அவருடைய குடும்பத்தில் அவருக்கு விருப்பமானவர்களைத் தவிர மற்றெவரும் எழுப்ப மாட்டார்கள். இறுதியாக (மறுமை வரும்போது) அவரை அவரின் தூக்கஸ்தளத்திலிருந்து அல்லாஹ் உயிர் கொடுத்து எழுப்புவான். அவர் முனாஃபிக்காக இருந்தால் அவர் கூறுவார் : மக்கள் எதையோ கூற நான் செவியுற்றேன். நானும் அதைப் போன்று

கூறினேன். வேறு ஏதும் எனக்கு தெரியாது. அதற்கு அவ்விரு வானவர்களும் கூறுவார்கள் : நிச்சயமாக நீ இதைத்தான் கூறிக் கொண்டிருந்தாய் என்று நாங்கள் திட்டமாக அறிந்திருக்கின்றோம். பிறகு, பூமிக்கு கூறப்படும், நீ அவர் மீது இணைந்து கொள்! (அவரை நெருக்கிக்கொள்!) அது அவரை நெருக்கிக் கொள்ளும். அதனால் அவரின் விலாக்கள் ஒன்றோடு ஒன்று சேர்ந்துவிடும். இவ்வாறே அவர் அதில் வேதனை செய்யப்பட்டுக் கொண்டே இருப்பார். இறுதியாக அல்லாஹ் அவரை தூக்கஸ்த்தளத்திலிருந்து எழுப்புவான்.[24]

கப்ருடைய தண்டனைப் பற்றி இன்னும் ஏராளமான ஸஹீஹான ஹதீஸ்கள் இருக்கின்றன. அவற்றை படித்தறிந்து நமது உள்ளத்தில் அல்லாஹ்வின் அச்சத்தை கொண்டு வர வேண்டும். அமல்களில் ஆர்வத்தை கொண்டுவர வேண்டும். பாவங்களை விட்டு விலக வேண்டும்.

உஸ்மான் ﷺ அவர்கள் கப்ரைப் பார்த்தால் தங்கள் தாடி நனையும் அளவு அழுவார்கள். சொர்க்கம், நரகம் பற்றி பேசும்போதெல்லாம் நீங்கள் இந்தளவு அழுவதில்லையே? கப்ரைப் பார்த்தால் இப்படி அழுகிறீர்களே என்று அவர்களிடம் கேட்கப்பட்டால், அதற்கு அவர்கள் கூறுவார்கள் : கப்ர்தான் மறுமையின் முதல் தங்குமிடம். அது ஒருவருக்கு சரியாகிவிட்டால் மறுமையின் மற்ற நிலைகள் எல்லாம் சரியாகிவிடும். அது மோசமாகிவிட்டால் மற்ற எல்லா நிலைகளும் மோசமாகிவிடும்.

கண்ணுக்குத் தெரியாத எத்தனையோ விஷயங்களை நம்பத்தகுந்தவர்கள் கூறும்போது மனிதன் அவற்றை நம்புகிறான்; ஏற்றுக்கொள்கிறான். அல்லாஹ்வும் அவனது ரஸூலும் உண்மையைத் தவிர வேறு எதையும் கூற மாட்டார்கள்.

அல்லாஹ்வின் ஆற்றல் மனித அறிவை மிகைத்தது. மனிதன் தனது அறிவால் அல்லாஹ்வின் எல்லா ஆற்றல்களையும் செயல்களையும் புரிந்துகொள்ள நினைத்தால் அது முடியாது.

---

24. அறிவிப்பாளர் : அபூ ஹுரைரா ﷺ, நூல் : திர்மிதி, எண் : 1071

மனிதன் தன் உடலைப் பற்றி இதுவரை முழுமையாக அறியவில்லை. தான், வாழும் இந்த பூமியில் கண்ணால் பார்க்கின்ற எத்தனையோ விஷயங்களை மனிதன் இதுநாள் வரை புரியமுடியாமல், அவற்றை சரியாக விளங்கிக் கொள்ள முடியாமல் திகைத்து நிற்கின்றான். அப்படி இருக்க நம்மை விட்டும் முற்றிலும் மறைந்த மறுமை வாழ்க்கையைப் பற்றி இந்த உலகத்தில் நமக்கு கொடுக்கப்பட்ட அற்ப அறிவைக் கொண்டு நாம் எப்படி அறிந்து கொள்ள முடியும்?

ஆகவே, அல்லாஹ்விற்கும் அவனது ரஸூலுக்கும் கட்டுப்பட்டு அவர்கள் கூறுவதை முழுமையாக ஏற்றுக் கொள்வதைத் தவிர நமக்கு வேறு வழி இல்லை. அதில்தான் நமது வெற்றியும் நற்பாக்கியமும் இருக்கின்றது.

கவிதையில் கூறப்பட்ட இரண்டாவது மூன்றாவது நம்பிக்கைகளைப் பற்றி சுருக்கமாக பார்ப்போம். அதாவது, 2. நபி ﷺ அவர்களின் நீர் தடாகத்தை நம்பிக்கைக் கொள்வது. 3. நன்மைகள், தீமைகள் நிறுக்கப்படும் தராசை நம்பிக்கைக் கொள்வது.

இந்த உலகத்தை அல்லாஹ் நிரந்தரமாக இருப்பதற்கு படைக்கவில்லை. மாறாக, இந்த உலகத்தை ஒரு நாள் அல்லாஹ் அழித்துவிடுவான். வானம் துண்டு துண்டாக வெடித்து சிதறிவிடும். நட்சத்திரங்கள் உதிர்ந்துவிடும். சூரியன் சந்திரன் ஒளி மங்கி சுருட்டப்பட்டு விடும். கடல்கள் தீ மூட்டப்படும். மலைகள் சுக்கு நூறாக உடைந்து, பஞ்சாக பறக்கும். இப்படியாக இந்த உலகம் மாபெரும் அழிவை சந்திக்கும். அது இஸ்ராஃபீல் என்ற வானவர் முதல் முறையாக சூர் என்ற எக்காளத்தில் ஊதும்போது நிகழும். மனிதர்கள் மற்றும் எல்லா உயிரினங்களும் மரணித்துவிடும். பிறகு அல்லாஹ் நாடிய அளவு ஒரு காலம் கடந்த பின்னர் அல்லாஹ் இஸ்ராஃபீலுக்கு மீண்டும் கட்டளை இடுவான். அவர் மீண்டும் சூரில் ஊதுவார். படைப்புகள் எல்லோரும் உயிர் பெற்று எழுந்து அழைப்பாளரை பின்தொடர்ந்து செல்வார்கள். இந்த பூமி வேறு பூமியாக மாற்றப்பட்டிருக்கும். சொர்க்கம் நல்லவர்களுக்கு நெருக்கமாகவும் நரகம் பாவிகளுக்கு தெரியும்படியாகவும் கொண்டு வரப்பட்டிருக்கும். மஹ்ஷர்

மைதானத்தின் காட்சிகள் மிகப் பயங்கரமாக இருக்கும். அங்கு அமல்கள்தான் மனிதனுக்கு பலன் தரும். செல்வம், செல்வாக்கு, ஆட்சி, அதிகாரம், நண்பர்கள், உறவுகள் ஆகிய இவை எதுவும் பலன் தராது. அல்லாஹ்வின் தீர்ப்பு மிக நீதமாக இருக்கும். அவன் கடுகளவும் அநீதி செய்ய மாட்டான்.

மனிதர்களின் அமல்களுக்கு ஏற்ப வெற்றி தோல்வி அமையும். சொர்க்கம் சென்றவர் வெற்றிப் பெற்றார். நரகம் சென்றவர் தோல்வியுற்றார்.

சொர்க்கம் செல்வதற்கு முன்னர் அவனுடைய அமல்கள் எடைப் போடப்படும். நன்மையின் தட்டு கனத்தால் அவரின் வெற்றிக்கான பத்திரம் அவருக்கு வலது கையில் கொடுக்கப்படும். அவரின் அதிகமான பாவத்தினால் தீமையின் தட்டு கனத்துவிட்டால் அவருடைய தோல்வியின் பத்திரம் இடது கையில் கொடுக்கப்படும். அதற்குப் பிறகு அவரின் நிலைமை மிக மோசமாக இருக்கும்.

உலக முடிவு நாளைப் பற்றியும் அப்போது நடக்கப் போகும் நிகழ்வுகள் பற்றியும் அல்லாஹ்வும் நபி ﷺ அவர்களும் நமக்கு கூறி இருப்பதைப் போன்று மறுமையில் நடக்க இருக்கின்ற பல காரியங்களை அல்லாஹ்வும் நபி ﷺ அவர்களும் நமக்கு கூறி இருக்கின்றார்கள். அவற்றை முழுமையாக நாம் நம்பிக்கை கொள்ள வேண்டும். அவற்றில் இரண்டு விஷயங்களை ஆசிரியர் அவர்கள் இங்கு குறிப்பிடுகிறார்கள். அதன் மூலம் நோக்கம் என்னவென்றால் மறுமை குறித்த அனைத்து செய்திகளையும் நம்பிக்கை கொள்ள அழைப்பதாகும். இந்த இரண்டை மட்டும் நம்பிக்கை கொள்ள அழைப்பதல்ல. சிலர் நன்மை தீமை எடைப்போடப்படுவதை மறுப்பதாலும் நபி ﷺ அவர்களின் நீர் தடாகத்தை மறுப்பதாலும் அவ்விரண்டை இங்கு குறிப்பிட்டுள்ளார்கள். ஆனால், நோக்கம் மறுமை சம்பந்தமான எல்லா விஷயங்களையும் நம்பிக்கை கொள்ள அழைப்பதாகும்.

மறுமை மற்றும் உலக முடிவைப் பற்றி குர்ஆன் பல இடங்களில்

பேசுவதை அதனுடன் தொடர்புள்ளவர்களுக்கு சொல்ல வேண்டிய அவசியமில்லை. குறிப்பாக, சுருக்கமாக தெரிந்து கொள்வதற்கு சூரா அல்ஹாக்கா, அல்வாகிஆ, அல்கியாமா, அத்தக்வீர், அல்இன்ஃபிதார், அல்காஷியா, அல்காரிஆ, ஸில்ஸால், அல்ஹஜ் இன்னும் இதுபோன்ற சூராக்களை படித்துப் பார்க்கவும். ஹதீஸ் நூல்களில் இதற்காகவே தனி அத்தியாயங்கள் உள்ளன. அவற்றை அவசியம் படித்தறியவும்.

ஹவ்ழ் -நீர் தடாகம் மற்றும் மீஸான் - தராசு குறித்து குர்ஆனிலும் ஹதீஸிலும் வந்துள்ள சில செய்திகளைப் பார்ப்போம்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான் :

﴿إِنَّا أَعْطَيْنَاكَ الْكَوْثَرَ○﴾

பொருள் : (நபியே!) நிச்சயமாக நாம் உமக்கு 'கவ்ஸர்' என்னும் நீர் தடாகத்தை கொடுத்திருக்கிறோம். (அல்குர்ஆன் 108 : 1)

**عَنْ سَمُرَةَ ﷺ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِنَّ لِكُلِّ نَبِيٍّ حَوْضًا وَإِنَّهُمْ يَتَبَاهَوْنَ أَيُّهُمْ أَكْثَرُ وَارِدَةً وَإِنِّي أَرْجُو أَنْ أَكُونَ أَكْثَرَهُمْ وَارِدَةً**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள் : (மறுமையில்) ஒவ்வொரு நபிக்கும் ஒரு நீர் தடாகம் உண்டு. நிச்சயமாக அவர்கள் யாருடைய நீர் தடாகத்திற்கு மக்கள் அதிகம் வருகிறார்கள் என்று பெருமையாக பேசிக்கொள்வார்கள். நிச்சயமாக என்னுடைய நீர் தடாகத்திற்கு வருபவர்கள்தான் அதிகமாக இருப்பார்கள் என்று நான் ஆதரவு வைக்கின்றேன்.[25]

அல்லாஹு தஆலா சொர்க்கத்தில் நபி ﷺ அவர்களுக்கு ஒரு நீர் தடாகத்தைத் தருவான். அதன் பெயர் **كوثر** -கவ்ஸர் ஆகும். அதிலிருந்து ஓர் நீரோடை மஹ்ஷர் மைதானத்திற்கு வரும். நபி ﷺ

25. அறிவிப்பாளர் : சமுரா ﷺ, நூல் : திர்மிதி, எண் : 2443 , தரம் : ஸஹீஹ்- அல்பானி

அவர்கள் மக்களுக்கு அந்த தடாகத்திலிருந்து நீர் புகட்டுவார்கள்.

**عن أَنَسِ بْنِ مَالِكٍ ﵁ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ إِنَّ قَدْرَ حَوْضِي كَمَا بَيْنَ أَيْلَةَ وَصَنْعَاءَ مِنَ الْيَمَنِ وَإِنَّ فِيهِ مِنَ الْأَبَارِيقِ كَعَدَدِ نُجُومِ السَّمَاءِ رَوَاهُ الْبُخَارِيُّ ﵀**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள் : நிச்சயமாக எனது நீர் தடாகத்தின் அளவு (ஜோர்டானில் உள்ள) அய்லா நகரம் மற்றும் ஏமனில் உள்ள ஸன்ஆ நகரத்திற்கும் இடையில் உள்ள தூரம் இருக்கும். இன்னும், நிச்சயமாக அதில் வானத்தின் நட்சத்திரங்களின் எண்ணிக்கை அளவு குவளைகள் இருக்கும்.[26]

**عَنْ أَبِي ذَرٍّ ﵁ قَالَ قُلْتُ يَا رَسُولَ اللهِ مَا آنِيَةُ الْحَوْضِ قَالَ وَالَّذِي نَفْسُ مُحَمَّدٍ بِيَدِهِ لَآنِيَتُهُ أَكْثَرُ مِنْ عَدَدِ نُجُومِ السَّمَاءِ وَكَوَاكِبِهَا أَلَا فِي اللَّيْلَةِ الْمُظْلِمَةِ الْمُصْحِيَةِ آنِيَةُ الْجَنَّةِ مَنْ شَرِبَ مِنْهَا لَمْ يَظْمَأْ آخِرَ مَا عَلَيْهِ يَشْخَبُ فِيهِ مِيزَابَانِ مِنَ الْجَنَّةِ مَنْ شَرِبَ مِنْهُ لَمْ يَظْمَأْ عَرْضُهُ مِثْلُ طُولِهِ مَا بَيْنَ عَمَّانَ إِلَىٰ أَيْلَةَ مَاؤُهُ أَشَدُّ بَيَاضًا مِنَ اللَّبَنِ وَأَحْلَىٰ مِنَ الْعَسَلِ رَوَاهُ مُسْلِمٌ ﵀**

அபூ தர் ﵁ கூறுகிறார்கள், அல்லாஹ்வின் தூதரே! (உங்கள்) தடாகத்தின் பாத்திரங்கள் எப்படி இருக்கும் என்று நான் கேட்டேன். அதற்கு நபி ﷺ அவர்கள் கூறினார்கள் : முஹம்மதுடைய ஆன்மா யாருடைய கையில் இருக்கிறதோ அவன் மீது ஆணையாக அதன் பாத்திரங்கள் வானத்தின் நட்சத்திரங்களின் எண்ணிக்கையைவிட அதிகமாக இருக்கும். அவை சொர்க்கத்தின் பாத்திரங்கள் ஆகும்.

26. அறிவிப்பாளர் : அனஸ் இப்னு மாலிக் ﵁, நூல் : புகாரி, எண் : 6580.

யார் அதில் நீர் பருகுவாரோ அவர் இறுதிவரை தாகிக்கவே மாட்டார். சொர்க்கத்தில் இருந்து இரண்டு ஓடைகள் அதில் கொட்டிக்கொண்டு இருக்கும். யார் அதில் நீர் அருந்துவாரோ அவர் தாகிக்க மாட்டார். அதன் அகலமும் அதன் நீளத்தைப் போன்று இருக்கும். அம்மானுக்கும் ஐலாவிற்கும் இடையில் உள்ள தூரம் அளவு இருக்கும். அதன் நீர் பாலைவிட வெண்மையாகவும் தேனைவிட இனிப்பாகவும் இருக்கும்.[27]

﴿وَنَضَعُ الْمَوَازِينَ الْقِسْطَ لِيَوْمِ الْقِيَامَةِ فَلَا تُظْلَمُ نَفْسٌ شَيْئًا وَإِنْ كَانَ مِثْقَالَ حَبَّةٍ مِنْ خَرْدَلٍ أَتَيْنَا بِهَا وَكَفَىٰ بِنَا حَاسِبِينَ۝﴾

பொருள் : மறுமை நாளில் சரியான தராசையே நாம் நிறுத்துவோம். எந்த ஓர் ஆத்மாவுக்கும் (நன்மையைக் குறைத்தோ, தீமையைக் கூட்டியோ) அநியாயம் செய்யப்பட மாட்டாது. (நன்மையோ தீமையோ) ஒரு கடுகின் அளவு இருந்தபோதிலும் அதையும் கொண்டு வருவோம். கணக்கெடுக்க நாமே போதும். (வேறெவரின் உதவியும் நமக்குத் தேவையில்லை.) (அல்குர்ஆன் 21 : 47)

﴿وَالْوَزْنُ يَوْمَئِذٍ الْحَقُّ فَمَنْ ثَقُلَتْ مَوَازِينُهُ فَأُولَٰئِكَ هُمُ الْمُفْلِحُونَ ۝ وَمَنْ خَفَّتْ مَوَازِينُهُ فَأُولَٰئِكَ الَّذِينَ خَسِرُوا أَنْفُسَهُمْ بِمَا كَانُوا بِآيَاتِنَا يَظْلِمُونَ۝﴾

பொருள் : (ஒவ்வொருவரின் நன்மை தீமைகளையும்) அன்றைய தினம் எடை போடுவது சத்தியம். ஆகவே, எவர்களுடைய (நன்மையின்) எடை கனத்ததோ அவர்கள்தான் நிச்சயமாக வெற்றி பெறுவார்கள். எவர்களுடைய (நன்மையின்) எடை (கனம் குறைந்து) இலேசாக இருக்கிறதோ அவர்கள் நம் வசனங்களுக்கு மாறுசெய்து தங்களுக்குத் தாமே நஷ்டத்தை உண்டுபண்ணிக் கொண்டவர்கள் ஆவர்.

(அல்குர்ஆன் 7 : 8, 9)

27. அறிவிப்பாளர் : அபூ தர் ؓ, நூல் : முஸ்லிம், எண் : 2300

﴿فَمَنْ ثَقُلَتْ مَوَازِينُهُ فَأُولَٰئِكَ هُمُ الْمُفْلِحُونَ○ وَمَنْ خَفَّتْ مَوَازِينُهُ فَأُولَٰئِكَ الَّذِينَ خَسِرُوا أَنْفُسَهُمْ فِي جَهَنَّمَ خَالِدُونَ○ تَلْفَحُ وُجُوهَهُمُ النَّارُ وَهُمْ فِيهَا كَالِحُونَ○﴾

பொருள் : ஆகவே, எவர்களுடைய நன்மையின் எடைகள் கணக்கிறதோ அவர்கள்தான் வெற்றி அடைவார்கள். எவர்களுடைய (நன்மையின்) எடைகள் குறைகிறதோ அவர்கள் தமக்குத் தாமே நஷ்டத்தை உண்டுபண்ணிக் கொண்டு எந்நாளுமே நரகத்தில் தங்கிவிடுவார்கள். அவர்களுடைய முகங்களை (நரகத்தின்) நெருப்புப் பொசுக்கும். அதில் அவர்களுடைய (உதடுகளெல்லாம் வெந்து சுருண்டு) முகம் விகாரமாக இருக்கும்.

(அல்குர்ஆன் 23 : 102-104)

عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ كَلِمَتَانِ خَفِيفَتَانِ عَلَى اللِّسَانِ ثَقِيلَتَانِ فِي الْمِيزَانِ حَبِيبَتَانِ إِلَى الرَّحْمَنِ سُبْحَانَ اللَّهِ الْعَظِيمِ سُبْحَانَ اللَّهِ وَبِحَمْدِهِ رَوَاهُ الْبُخَارِيُّ ﵀

நபி ﷺ அவர்கள் கூறினார்கள் : இரண்டு வாக்கியங்கள் நாவில் இலகுவாக இருக்கும். மீஸானில் கனமாக இருக்கும். ரஹ்மானுக்கு பிரியமாக இருக்கும். அவை ஸுப்ஹானல்லாஹில் அளீம் - மகத்துவமிக்க அல்லாஹ் மகாப் பரிசுத்தமானவன். ஸுப்ஹானல்லாஹி வபிஹம்திஹி - அல்லாஹ்வை நான் புகழ்வதோடு அவனை மிகவும் பரிசுத்தப்படுத்துகின்றேன்.[28]

عَنْ أَبِي مَالِكٍ الْأَشْعَرِيِّ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ ﷺ الطُّهُورُ شَطْرُ الْإِيمَانِ وَالْحَمْدُ لِلَّهِ تَمْلَأُ الْمِيزَانَ وَسُبْحَانَ اللَّهِ وَالْحَمْدُ لِلَّهِ تَمْلَآنِ

28. அறிவிப்பாளர் : அபூ ஹுரைரா ﵁, நூல் : புகாரி, எண் : 6406

أَوْ تَمْلَأُ مَا بَيْنَ السَّمَاوَاتِ وَالْأَرْضِ وَالصَّلَاةُ نُورٌ وَالصَّدَقَةُ بُرْهَانٌ وَالصَّبْرُ ضِيَاءٌ وَالْقُرْآنُ حُجَّةٌ لَكَ أَوْ عَلَيْكَ كُلُّ النَّاسِ يَغْدُو فَبَايِعٌ نَفْسَهُ فَمُعْتِقُهَا أَوْ مُوبِقُهَا رَوَاهُ مُسْلِمٌ ﷺ

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள் : சுத்தம் ஈமானின் பகுதியாகும். அல்ஹம்து லில்லாஹ் மீஸானை நிரப்பிவிடும். சுப்ஹானல்லாஹ், அல்ஹம்து லில்லாஹ் இவை இரண்டும் வானங்களுக்கும் பூமிக்கும் இடையில் உள்ளவற்றை நிரப்பிவிடும். தொழுகை ஒளியாகும். தர்மம் ஆதாரமாகும். பொறுமை பேரொளியாகும். குர்ஆன் உனக்கு சாதகமான அல்லது உனக்கு பாதகமான சான்றாக இருக்கும். மனிதர்கள் எல்லோரும் காலையில் செல்கின்றனர். சிலர் தன்னை காப்பாற்றிக் கொள்கின்றனர். சிலர் தன்னை அழித்துக் கொள்கின்றனர்.[29]

மறுமையில் அல்லாஹ் ஏற்படுத்தி இருக்கின்ற அந்த தராசுக்கு இரண்டு தட்டுகளும் நாக்கு ஒன்றும் இருக்கும். இதுதான் அஹ்லுஸ் ஸுன்னா உடைய ஏகோபித்த முடிவாகும்.

அடியார்களின் ஏடுகள், அல்லது அமல்கள், அல்லது நன்மைகள் அந்த தராசில் நிறுக்கப்படும். சில சமயம் அந்த மனிதனையே அதில் நிறுக்கப்படும். இதுப் பற்றியும் பல ஹதீஸ்கள் வந்துள்ளன. ஹதீஸ் மற்றும் கொள்கை சார்ந்த நூல்களில் மேலதிகமான விளக்கங்களை தேடிப் பெறவும்.

அஹ்லுஸ் ஸுன்னா உடைய முக்கியமான பத்துக் கொள்கைகளில் ஹவ்ளையும் மீஸானையும் நம்பிக்கை கொள்வது அடங்கும்.

قال سفيان بن عيينة رحمه الله السنة عشرة فمن كن فيه فقد استكمل السنة ومن ترك منها شيئًا فقد ترك السنة إثبات القدر وتقديم

29. அறிவிப்பாளர் : அபூ மாலிக் رضي الله عنه, நூல் : முஸ்லிம், எண் : 223.

أبي بكر وعمر والحوض والشفاعة والميزان والصراط والإيمان قول وعمل والقرآن كلام الله وعذاب القبر والبعث يوم القيامة ولا تقطعوا بالشهادة على مسلم أخرجه اللالكائي

ஸுஃப்யான் இப்னு உஅய்னா ﷺ கூறுகிறார்கள் : ஸுன்னா -நபிவழி பத்தாகும். யாரிடம் அந்த பத்தும் இருக்குமோ அவர் ஸுன்னாவை தனக்குள் முழுமைப்படுத்திக் கொண்டார். யார் அதிலிருந்து எதையும் விடுவாரோ அவர் ஸுன்னாவை விட்டு விட்டார். கதர் -விதியை உறுதி செய்வது, அபூ பக்ர், உமர் ஆகிய இருவரையும் முன்னிலைப் படுத்துவது, ஹவ்ல் - நீர் தடாகம், ஷஃபாஅத் - சிபாரிசு, மீஸான்- தராசு, சிராத் - பாலம், சொல்லும் செயலும் சேர்ந்ததுதான் ஈமான், குர்ஆன் அல்லாஹ் உடைய பேச்சு, கப்ர் - மண்ணறையில் வேதனை உண்டு, மறுமையில் எழுப்பப்படுதல், எந்த ஒரு முஸ்லிமுக்கும் (சொர்க்கம் அல்லது நரகத்தைக்) கொண்டு சாட்சி சொல்லாமல் இருப்பது.[30]

இதுவரை இந்த கவிதையிலிருந்தும் அதன் விளக்க உரையிலிருந்தும் நாம் அறிந்துகொண்டவற்றின் சுருக்கத்தைப் பார்ப்போம்.

**சுருக்கம் :**

1. வானவர்களைப் பற்றி குர்ஆனும் ஹதீஸும் கூறுகின்ற அனைத்து செய்திகளையும் நாம் நம்பிக்கை கொள்ள வேண்டும்.
2. குறிப்பாக மரணத்திற்கு பிறகு நடப்பவை பற்றி குர்ஆனிலும் ஹதீஸிலும் வந்துள்ள அனைத்து உண்மைகளையும் நாம் நம்பிக்கை கொள்ள வேண்டும். அது கப்ரில் நடக்கின்ற விஷயங்களாக இருந்தாலும் சரி. அல்லது மறுமையில் எழுப்பப்பட்டப் பிறகு நடக்க இருக்கின்ற விஷயங்களாக இருந்தாலும் சரி.

30. நூல் : அஸ் ஸுன்னா, ஆசிரியர் : லால்காயி, முழுப்பெயர் : ஹிபதுல்லாஹ் இப்னு அல் ஹசன் இப்னு மன்சூர் அத்தபரி, இறப்பு : ஹிஜ்ரி 418

3. மறைவான விஷயங்களில் நாம் நமது அறிவை அளவுகோலாக ஆக்கக்கூடாது. அவற்றை நம்பிக்கை கொள்வதுதான் நம்மீதுள்ள கடமையாகும்.

4. கப்ர் உடைய வாழ்க்கை சம்பந்தமாக வந்துள்ள அனைத்தையும் நாம் நம்பிக்கை கொள்ள வேண்டும். அதில் எவ்வித சந்தேகமும் நமக்கு இருக்கக் கூடாது. அவற்றில் குதர்க்கம் செய்யக் கூடாது.

5. மறைவான செய்திகளில் குர்ஆனும் ஹதீஸும் கூறுவதுதான் அறிவாகும். அதை மறுப்பதும் அதில் சந்தேகப்படுவதும் வழிகேடும் அறியாமையும் ஆகும்.

6. கப்ரில் கேள்வி கணக்கு உண்டு. அங்கு வானவர்கள் கேள்வி கேட்பார்கள். அதற்கு பிறகு அது சொர்க்க பூங்காவாக அல்லது நரகப் படுகுழியாக இருக்கும்.

7. அல்லாஹ் உடைய ஆற்றலை மனிதன் அறியும்போது கப்ருடைய வாழ்க்கை குறித்து வந்துள்ளதை அவன் மறுக்க மாட்டான்.

8. உலக முடிவு நாள் உடைய அடையாளங்கள், மற்றும் உலகம் எப்படி அழியும் என்று வந்துள்ள அனைத்து செய்திகளையும் நம்பிக்கை கொள்ள வேண்டும். கண்டிப்பாக அது நடக்கக்கூடிய ஒன்றுதான்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான் :

﴿وَإِنَّ السَّاعَةَ لَآتِيَةٌ﴾

பொருள் : இன்னும், நிச்சயமாக உலக முடிவு நாள் வந்தே தீரும். (அல்குர்ஆன் 15 : 85)

﴿إِنَّ السَّاعَةَ آتِيَةٌ﴾

பொருள் : இன்னும், நிச்சயமாக உலக முடிவு நாள் வந்தே தீரும். (அல்குர்ஆன் 20 : 15)

﴿وَأَنَّ السَّاعَةَ آتِيَةٌ لَا رَيْبَ فِيهَا وَأَنَّ اللَّهَ يَبْعَثُ مَنْ فِي الْقُبُورِ ۝﴾

பொருள் : இன்னும், நிச்சயமாக உலக முடிவு நாள் வந்தே தீரும். அதில் அறவே சந்தேகம் இல்லை. இன்னும் நிச்சயமாக அல்லாஹ் கப்ருகளில் உள்ளவர்களை உயிர்ப்பிப்பான்.

(அல்குர்ஆன் 22 : 7)

﴿ إِنَّ السَّاعَةَ لَآتِيَةٌ لَا رَيْبَ فِيهَا وَلَٰكِنَّ أَكْثَرَ النَّاسِ لَا يُؤْمِنُونَ ۝﴾

பொருள் : இன்னும், நிச்சயமாக உலக முடிவு நாள் வந்தே தீரும். அதில் அறவே சந்தேகம் இல்லை. என்றாலும் அதிகமான மக்கள் நம்பிக்கை கொள்ள மாட்டார்கள். (அல்குர்ஆன் 40 : 59)

﴿أَلَا إِنَّ الَّذِينَ يُمَارُونَ فِي السَّاعَةِ لَفِي ضَلَالٍ بَعِيدٍ ۝﴾

பொருள் : அறிந்து கொள்ளுங்கள்! நிச்சயமாக உலக முடிவு நாள் குறித்து யார் சந்தேகத்தில் இருக்கின்றார்களோ அவர்கள் தெளிவான வழிகேட்டில்தான் இருக்கின்றனர். (அல்குர்ஆன் 42 : 18)

﴿إِنَّمَا تُوعَدُونَ لَصَادِقٌ ۝ وَإِنَّ الدِّينَ لَوَاقِعٌ ۝﴾

பொருள் : நிச்சயமாக உங்களுக்கு வாக்களிக்கப்படுவதெல்லாம் (அல்லது உங்களுக்கு எச்சரிக்கை செய்யப்படுவதெல்லாம்) உண்மைதான். இன்னும், நிச்சயமாக மறுமை நிகழத்தான் போகிறது.

(அல்குர்ஆன் 51 : 5,6)

9. அல்லாஹ்வும் ரஸூலும் மறுமை நாளில் எதுவெல்லாம் நிகழும் என்று கூறினார்களோ அவற்றை அப்படியே நம்பிக்கை கொள்ள வேண்டும். அவற்றுக்கு மாற்றுப் பொருள் கூறாமல், அவற்றை மறுக்காமல், அவற்றில் குதர்க்கம் செய்யாமல் இருக்க வேண்டும்.

10. வழிகெட்ட கூட்டத்தினர் கூறும் தர்க்க வாதங்களை செவியுறுவதும், பிறகு குர்ஆன், ஸுன்னா கூறுவதில் சந்தேகம் கொள்வதும் அறவே கூடாது.

11. மறுமையைப் பற்றி கூறக்கூடிய வசனங்களையும் ஹதீஸ்களையும் அதிகம் அதிகம் படிக்க வேண்டும். அதன் மூலம் நமது ஈமானையும் தக்வாவையும் அதிகப்படுத்திக் கொள்ள வேண்டும்.

12. உள்ளத்தில் ஈமான் இருக்கின்றது என்பதன் அடையாளங்களில் ஒன்று மறுமையை அதிகம் பயப்படுவது.

13. சொர்க்கம் மற்றும் நரகத்தைப் பற்றியும் அதிகம் நாம் கற்க வேண்டும். அதன் மூலம் நல்லமல்களில் ஆர்வம் வரும். பாவத்தின் மீது பயம் வரும்.

14. உள்ளத்தில் சந்தேக நோய் வந்துவிட்டால் அவர் நேர்வழி பெற முடியாது.

15. மார்க்க ஆதாரங்களுக்கு கட்டுப்பட்டால் மட்டும்தான் மறைவான விஷயங்களை சரியான முறையில் நம்பிக்கை கொள்ள முடியும். அவற்றில் எவ்வித குழப்பமும் முரண்பாடுகளும் உள்ளங்களில் ஏற்படாமல் இருக்கும்.

கவிதையின் முதல் செய்தி மற்றும் அதற்கான விளக்கமாக இதுவரை கூறப்பட்ட விளக்க உரையிலிருந்து சத்திய கொள்கைக்கு மாற்றமான பல வழிகேடுகளை நாம் புரிந்து கொள்ள முடியும். அந்த வழிகேடுகளில் சிலவற்றை அடுத்துப் பார்ப்போம்.

**வழிகேடுகள் :**

1. அல்லாஹ்வும் ரஸூலும் கூறியதை அறிவைக் கொண்டு எதிர்ப்பது.

2. நேர்வழியை அறிவதற்கு முதலில் அறிவை ஆதாரமாக ஆக்குவது.

3. ஸஹாபாக்களின் கருத்துகள் இன்றி அறிவை வைத்து மார்க்க ஆதாரங்களுக்கு வியாக்கியானம் செய்து, தனக்கு புரிந்ததை ஏற்பது, புரியாததை மறுப்பது.

4. மார்க்கத்தில் உறுதியான எந்த ஒரு கைபான - மறைவான செய்தியை மறுப்பது, அல்லது அதற்கு மாற்றுப் பொருள் கூறுவது, அதில் சந்தேகிப்பது.

5. மறுமையைப் பற்றி பரிகாசம் செய்வது, அல்லது மறுமையை அலட்சியம் செய்வது, மறுமையைப் பயப்படாமல் இருப்பது.

6. அஹ்லுஸ் ஸுன்னா உடைய நேரிய கொள்கையை விட்டு விலகிச் செல்வது.

7. நேர்வழிப் பெற்ற நல்லோரை ஆதாரமாக எடுக்காமல் வேத அறிவில்லாத மனித மூளையை நம்பக் கூடிய தத்துவ வாதிகளின் வாதங்களை நம்பி குர்ஆனை அல்லது ஹதீஸை மறுப்பது.

8. தெளிவான வசனங்களையும் ஹதீஸ்களையும் குழப்புவது.

9. குர்ஆனுக்கும் ஸுன்னாவிற்கும் மன இச்சையின்படி விளக்கம் கூறுவது.

10. மார்க்கத்தைப் பற்றி யார் எதைக் கூறினாலும் அதை குர்ஆன், ஸுன்னா உடன் ஒப்பிட்டுப் பார்க்காமல் நம்புவது. இன்னும் குர்ஆன், ஸுன்னாவில் உள்ளதை செவியுறும்போது இன்னார் என்ன கூறி இருக்கிறார், இன்னார் இதற்கு இப்படி மாற்றமாக பொருள் கூறி இருக்கிறார், இன்னாரின் விளக்கம் இப்படித்தான் இருக்கிறது என்று கூறி குர்ஆன், ஸுன்னாவில் உள்ளதை உள்ளபடி நம்ப மறுப்பது.

இதுபோன்ற இன்னும் பல வழிகேடுகள் உள்ளன. அல்லாஹ் நம்மை நேர்வழியில் உறுதிப்படுத்தி, வழிகேட்டிலிருந்து பாதுகாப்பானாக! ஆமீன்.

--------------------

وَقُلْ يُـخْرِجُ اللّهُ الْعَظِيْمُ بِفَضْلِهِ

مِنَ النَّارِ أَجْسَادًا مِّنَ الْفَحْمِ تُطْرَحُ

عَلَى النَّهْرِ فِي الْفِرْدَوْسِ تَحْيَا بِمَائِهِ

كَحَبِّ حَمِيلِ السَّيْلِ إِذْ جَاءَ يَطْفَحُ

**பொருள் :**

மகத்துவமிக்க அல்லாஹ் தனது அருளால் நரகத்திலிருந்து பல உடல்களை அவை கரிகட்டைகளாக மாறியபின்னர் வெளியேற்றுவான். சொர்க்கத்திற்கு முன்னுள்ள ஆற்றில் அவை போடப்படும். அதன் நீரால் அவர்கள் மீண்டும் உயிர்பெறுவார்கள், நிரம்பி வழியும் ஆற்று வெள்ளத்தில் அடித்து வரப்படும் களிமண்ணில் விதை முளைப்பதுபோல்.

**கருத்து :**

அல்லாஹ்வின் அருளும் கருணையும் அன்பும் முஃமின்களுக்கு மிக விசாலமாக இருக்கும். இந்த உலகத்தில் அல்லாஹ்வின் அருள் பொதுவாக இருந்தாலும் மறுமையில் அல்லாஹ் தனது கருணையையும் மன்னிப்பையும் முஃமின்களுக்கு மட்டும் பிரத்தியேகமாக ஆக்கிவிடுவான்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான் :

﴿قَالَ عَذَابِي أُصِيبُ بِهِ مَنْ أَشَاءُ وَرَحْمَتِي وَسِعَتْ كُلَّ شَيْءٍ
فَسَأَكْتُبُهَا لِلَّذِينَ يَتَّقُونَ وَيُؤْتُونَ الزَّكَاةَ وَالَّذِينَ هُمْ

﴿بِآيَاتِنَا يُؤْمِنُونَ ○ الَّذِينَ يَتَّبِعُونَ الرَّسُولَ النَّبِيَّ الْأُمِّيَّ﴾

பொருள் : அ(தற்கு இறை)வன் கூறினான் : எனது தண்டனையை, அதை நான் நாடியவர்களுக்கு கொடுப்பேன். எனினும், என் அருட்கொடை அனைத்தையும்விட மிக விரிவானது. ஆகவே, எவர்கள் (எனக்குப்) பயந்து ஸகாத்தும் கொடுத்து வருகிறார்களோ அவர்களுக்கும், இன்னும் எவர்கள் நம் வசனங்களை நம்பிக்கை கொள்கிறார்களோ அவர்களுக்கும் அதை நான் முடிவு செய்வேன். அவர்கள் உம்மீ நபியாகிய இந்த ரஸூலைப் பின்பற்றுவார்கள். (அல்குர்ஆன் 7 : 156, 157)

﴿الَّذِينَ يَحْمِلُونَ الْعَرْشَ وَمَنْ حَوْلَهُ يُسَبِّحُونَ بِحَمْدِ رَبِّهِمْ وَيُؤْمِنُونَ بِهِ وَيَسْتَغْفِرُونَ لِلَّذِينَ آمَنُوا رَبَّنَا وَسِعْتَ كُلَّ شَيْءٍ رَحْمَةً وَعِلْمًا فَاغْفِرْ لِلَّذِينَ تَابُوا وَاتَّبَعُوا سَبِيلَكَ وَقِهِمْ عَذَابَ الْجَحِيمِ ○ رَبَّنَا وَأَدْخِلْهُمْ جَنَّاتِ عَدْنٍ الَّتِي وَعَدْتَهُمْ وَمَنْ صَلَحَ مِنْ آبَائِهِمْ وَأَزْوَاجِهِمْ وَذُرِّيَّاتِهِمْ إِنَّكَ أَنْتَ الْعَزِيزُ الْحَكِيمُ○﴾

பொருள் : அர்ஷை சுமப்பவர்களும் அதைச் சுற்றி இருப்பவர்களும் தங்கள் இறைவனின் புகழை துதிக்கின்றனர். அவனை நம்பிக்கை கொள்கின்றனர். நம்பிக்கை கொண்டவர்களுக்காக பாவமன்னிப்புக் கோருகின்றனர், “எங்கள் இறைவா! எல்லாவற்றையும் நீ கருணையாலும் கல்வியாலும் விசாலமடைந்து இருக்கின்றாய். ஆகவே, (தவறுகளை விட்டு) திருந்தி, உனது பாதையை பின்பற்றியவர்களை நீ மன்னிப்பாயாக! அவர்களை நரகத்தின் வேதனையை விட்டு பாதுகாப்பாயாக! எங்கள் இறைவா! இன்னும் அவர்களை அத்ன் சொர்க்கங்களில் நுழைப்பாயாக! அதை நீ அவர்களுக்கு வாக்களித்திருக்கின்றாய். இன்னும் அவர்களின் பெற்றோர்கள், அவர்களின் மனைவிகள், அவர்களின் சந்ததிகளில் நல்லவர்களாக

இருந்தவர்களையும் (சொர்க்கங்களில் நுழைப்பாயாக)! நிச்சயமாக நீதான் மிகைத்தவன், மகா ஞானவான்." (அல்குர்ஆன் 40 : 7,8)

﴿يُدْخِلُ مَنْ يَشَاءُ فِي رَحْمَتِهِ وَالظَّالِمِينَ أَعَدَّ لَهُمْ عَذَابًا أَلِيمًا○﴾

பொருள் : (ஆகவே, உங்களில்) அவன் விரும்பியவர்களைத் தன் அருளில் புகுத்தி விடுகிறான். அநியாயக்காரர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையைத்தான் தயார்படுத்தி வைத்திருக்கிறான். (அல்குர்ஆன் 76 : 31)

﴿قُلْ يَاعِبَادِيَ الَّذِينَ أَسْرَفُوا عَلَىٰ أَنْفُسِهِمْ لَا تَقْنَطُوا مِنْ رَحْمَةِ اللَّهِ إِنَّ اللَّهَ يَغْفِرُ الذُّنُوبَ جَمِيعًا إِنَّهُ هُوَ الْغَفُورُ الرَّحِيمُ ○ وَأَنِيبُوا إِلَىٰ رَبِّكُمْ وَأَسْلِمُوا لَهُ مِنْ قَبْلِ أَنْ يَأْتِيَكُمُ الْعَذَابُ ثُمَّ لَا تُنْصَرُونَ○﴾

பொருள் : (நபியே!) கூறுவீராக : எனது அடியார்களே! (உங்களில்) எவரும் வரம்பு மீறி தமக்குத்தாமே தீங்கிழைத்துக் கொண்டபோதிலும், அல்லாஹ்வின் அருளைப் பற்றி நீங்கள் நம்பிக்கை இழந்துவிட வேண்டாம். (நீங்கள் பாவத்திலிருந்து விலகி, மனம் வருந்தி மன்னிப்புக் கோரினால்) நிச்சயமாக அல்லாஹ் (உங்கள்) பாவங்கள் அனைத்தையும் மன்னித்து விடுவான். ஏனென்றால், நிச்சயமாக அவன்தான் மிக்க மன்னிப்பவன், மகா கருணை உடையவன் ஆவான். ஆகவே, (மனிதர்களே!) உங்களை வேதனை வந்தடைவதற்கு முன்னதாகவே, நீங்கள் உங்கள் இறைவன் பக்கம் திரும்பி, அவனுக்கு முற்றிலும் பணிந்து வழிபட்டு நடங்கள். (வேதனை வந்து விட்டாலோ,) பின்னர் (ஒருவராலும்) நீங்கள் உதவி செய்யப்பட மாட்டீர்கள்.

(அல்குர்ஆன் 39 : 53, 54)

முஃமின்களில் பாவம் செய்தவர்கள் நரகத்திற்கு சென்று விட்டாலும் இறுதியில் அவர்கள் நரகத்திலிருந்து அல்லாஹ்வின் அருளால் வெளியேற்றப்பட்டு நஹ்ருல் ஹயாத் - ஜீவ நதி என்ற ஓடையில்

குளிப்பாட்டப்பட்டு பிறகு புதிய மனிதர்களாக சொர்க்கம் செல்ல அனுமதிக்கப்படுவார்கள். அல்லாஹ் தன்னை நம்பிக்கைக் கொண்டவர்களை அவர்கள் நரகத்தில் நிரந்தரமாக தங்கும்படி விட்டுவிட மாட்டான். கண்டிப்பாக ஒரு நாள் அவன் அவர்களை அவர்களின் பாவங்களில் இருந்து சுத்தப்படுத்திய பின்னர் நரகத்திலிருந்து அவர்களை வெளியேற்றி சொர்க்கத்தில் நுழைப்பான்.

இது குறித்து பல நபிமொழிகள் வந்துள்ளன. அவற்றை இப்போது பார்ப்போம்.

**عَنْ أَبِي سَعِيدٍ الخُدْرِيِّ ﵁ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ إِذَا دَخَلَ أَهْلُ الجَنَّةِ الجَنَّةَ وَأَهْلُ النَّارِ النَّارَ يَقُولُ اللَّهُ مَنْ كَانَ فِي قَلْبِهِ مِثْقَالُ حَبَّةٍ مِنْ خَرْدَلٍ مِنْ إِيمَانٍ فَأَخْرِجُوهُ فَيَخْرُجُونَ قَدْ امْتُحِشُوا وَعَادُوا حُمَمًا فَيُلْقَوْنَ فِي نَهَرِ الحَيَاةِ فَيَنْبُتُونَ كَمَا تَنْبُتُ الحِبَّةُ فِي حَمِيلِ السَّيْلِ أَوْ قَالَ حَمِيَّةِ السَّيْلِ وَقَالَ النَّبِيُّ ﷺ أَلَمْ تَرَوْا أَنَّهَا تَنْبُتُ صَفْرَاءَ مُلْتَوِيَةً رَوَاهُ الْبُخَارِيُّ ﵀**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள் : (மறுமை நாளில் விசாரணை முடிந்த பின்) சொர்க்கவாசிகள் சொர்க்கத்திலும் நரகவாசிகள் நரகத்திலும் நுழைந்து விட்டால், அல்லாஹ் கூறுவான் : எவருடைய உள்ளத்தில் கடுகளவு ஈமான் எனும் இறைநம்பிக்கை உள்ளதோ அவரை (நரகத்திலிருந்து) வெளியேற்றி விடுங்கள். உடனே அவர்கள் கருகிய நிலையில் வெளியேறுவார்கள். அப்போது அவர்கள் கரிக் கட்டைகளாகக் காட்சியளிப்பார்கள். பின்னர் அவர்கள் 'நஹ்ருல் ஹயாத்' எனும் ஜீவ நதியில் போடப்படுவார்கள். உடனே அவர்கள், ஆற்று வெள்ளத்தில் அடித்து வரப்படும் களிமண்ணில் அல்லது வெள்ளத்தின் கறுப்புக் களிமண்ணில் விதை முளைப்பதைப் போன்று (புதுப் பொலிவுடன்) அவர்கள் முளைப்பார்கள். அந்த வித்து (விலிருந்து வரும் புற்பூண்டுகள்) மஞ்சள் நிறத்தில் முளைத்து (பார்ப்பதற்கு அழகாகவும், காற்றில்) வளைந்து நெளிவதையும்

முளைப்பதை நீங்கள் பார்க்கவில்லையா?[31]

இமாம் முஸ்லிம் பதிவு செய்துள்ள ஒரு நீண்ட ஹதீஸில் வருவதாவது :

فَوَالَّذِي نَفْسِي بِيَدِهِ مَا مِنْكُمْ مِنْ أَحَدٍ بِأَشَدَّ مُنَاشَدَةً لِلّٰهِ فِي اسْتِقْصَاءِ الْحَقِّ مِنَ الْمُؤْمِنِينَ لِلّٰهِ يَوْمَ الْقِيَامَةِ لِإِخْوَانِهِمُ الَّذِينَ فِي النَّارِ يَقُولُونَ رَبَّنَا كَانُوا يَصُومُونَ مَعَنَا وَيُصَلُّونَ وَيَحُجُّونَ فَيُقَالُ لَهُمْ أَخْرِجُوا مَنْ عَرَفْتُمْ فَتُحَرَّمُ صُوَرُهُمْ عَلَى النَّارِ فَيُخْرِجُونَ خَلْقًا كَثِيرًا قَدِ أَخَذَتِ النَّارُ إِلَىٰ نِصْفِ سَاقَيْهِ وَإِلَىٰ رُكْبَتَيْهِ ثُمَّ يَقُولُونَ رَبَّنَا مَا بَقِيَ فِيهَا أَحَدٌ مِمَّنْ أَمَرْتَنَا بِهِ فَيَقُولُ ارْجِعُوا فَمَنْ وَجَدْتُمْ فِي قَلْبِهِ مِثْقَالَ دِينَارٍ مِنْ خَيْرٍ فَأَخْرِجُوهُ فَيُخْرِجُونَ خَلْقًا كَثِيرًا ثُمَّ يَقُولُونَ رَبَّنَا لَمْ نَذَرْ فِيهَا أَحَدًا مِمَّنْ أَمَرْتَنَا ثُمَّ يَقُولُ ارْجِعُوا فَمَنْ وَجَدْتُمْ فِي قَلْبِهِ مِثْقَالَ نِصْفِ دِينَارٍ مِنْ خَيْرٍ فَأَخْرِجُوهُ فَيُخْرِجُونَ خَلْقًا كَثِيرًا ثُمَّ يَقُولُونَ رَبَّنَا لَمْ نَذَرْ فِيهَا مِمَّنْ أَمَرْتَنَا أَحَدًا ثُمَّ يَقُولُ ارْجِعُوا فَمَنْ وَجَدْتُمْ فِي قَلْبِهِ مِثْقَالَ ذَرَّةٍ مِنْ خَيْرٍ فَأَخْرِجُوهُ فَيُخْرِجُونَ خَلْقًا كَثِيرًا ثُمَّ يَقُولُونَ رَبَّنَا لَمْ نَذَرْ فِيهَا خَيْرًا وَكَانَ أَبُو سَعِيدٍ الْخُدْرِيُّ يَقُولُ إِنْ لَمْ تُصَدِّقُونِي بِهٰذَا الْحَدِيثِ فَاقْرَءُوا إِنْ شِئْتُمْ إِنَّ اللّٰهَ لَا يَظْلِمُ مِثْقَالَ ذَرَّةٍ وَإِنْ تَكُ حَسَنَةً يُضَاعِفْهَا وَيُؤْتِ مِنْ لَدُنْهُ أَجْرًا عَظِيمًا فَيَقُولُ اللّٰهُ عَزَّ وَجَلَّ شَفَعَتِ الْمَلَائِكَةُ وَشَفَعَ النَّبِيُّونَ وَشَفَعَ الْمُؤْمِنُونَ وَلَمْ يَبْقَ إِلَّا أَرْحَمُ الرَّاحِمِينَ فَيَقْبِضُ

---

31. அறிவிப்பாளர் : அபூ ஸயீத் அல்குத்ரீ ﵁, நூல் : புகாரி, எண் : 6560.

قَبْضَةً مِنَ النَّارِ فَيُخْرِجُ مِنْهَا قَوْمًا لَمْ يَعْمَلُوا خَيْرًا قَطُّ قَدْ عَادُوا
حُمَمًا فَيُلْقِيهِمْ فِي نَهَرٍ فِي أَفْوَاهِ الْجَنَّةِ يُقَالُ لَهُ نَهَرُ الْحَيَاةِ فَيَخْرُجُونَ
كَمَا تَخْرُجُ الْحِبَّةُ فِي حَمِيلِ السَّيْلِ أَلَا تَرَوْنَهَا تَكُونُ إِلَى الْحَجَرِ أَوْ
إِلَى الشَّجَرِ مَا يَكُونُ إِلَى الشَّمْسِ أُصَيْفِرُ وَأُخَيْضِرُ وَمَا يَكُونُ
مِنْهَا إِلَى الظِّلِّ يَكُونُ أَبْيَضَ فَقَالُوا يَا رَسُولَ اللهِ كَأَنَّكَ كُنْتَ
تَرْعَىٰ بِالْبَادِيَةِ قَالَ فَيَخْرُجُونَ كَاللُّؤْلُؤِ فِي رِقَابِهِمُ الْخَوَاتِمُ يَعْرِفُهُمْ
أَهْلُ الْجَنَّةِ هٰؤُلَاءِ عُتَقَاءُ اللهِ الَّذِينَ أَدْخَلَهُمُ اللهُ الْجَنَّةَ بِغَيْرِ عَمَلٍ
عَمِلُوهُ وَلَا خَيْرٍ قَدَّمُوهُ ثُمَّ يَقُولُ ادْخُلُوا الْجَنَّةَ فَمَا رَأَيْتُمُوهُ فَهُوَ
لَكُمْ فَيَقُولُونَ رَبَّنَا أَعْطَيْتَنَا مَا لَمْ تُعْطِ أَحَدًا مِنَ الْعَالَمِينَ فَيَقُولُ
لَكُمْ عِنْدِي أَفْضَلُ مِنْ هٰذَا فَيَقُولُونَ يَا رَبَّنَا أَيُّ شَيْءٍ أَفْضَلُ مِنْ
هٰذَا فَيَقُولُ رِضَايَ فَلَا أَسْخَطُ عَلَيْكُمْ بَعْدَهُ أَبَدًا رَوَاهُ مُسْلِمٌ رحمه الله

என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன்மீது சத்தியமாக! மறுமை நாளில் நரகத்தில் கிடக்கும் தம் சகோதரர்களின் உரிமையை வலியுறுத்தி இறைவனிடம் மிகவும் மன்றாடி வேண்டுபவர்கள் இறை நம்பிக்கையாளர்களைவிட வேறெவருமில்லை. அவர்கள் (பின்வருமாறு) கூறுவார்கள் : எங்கள் இறைவா! இவர்கள் எங்களுடன்தான் நோன்பு நோற்றார்கள்; தொழுதார்கள்; ஹஜ் செய்தார்கள் (எனவே இவர்களை நீ நரகத்திலிருந்து விடுதலை செய்வாயாக!). அப்போது அவர்களிடம், நீங்கள் (சென்று) உங்களுக்குத் தெரிந்தவர்களை (நரகத்திலிருந்து) வெளியேற்றுங்கள் என்று கூறப்படும். மேலும், (நரகத்திலுள்ள அவர்களை இவர்கள் அடையாளம் காண்பதற்கு வசதியாக) அவர்களது உடலைத் தீண்டக் கூடாதென நரகத்திற்குத் தடை விதிக்கப்படும். உடனே

அவர்கள் (நரகத்திற்குச் சென்று) ஏராளமான மக்களை வெளியே கொண்டுவருவார்கள். அப்போது (நரகத்தில் இருந்த) அவர்களில் சிலருடைய கணைக்கால்களில் பாதிவரையும், (இன்னும் சிலருடைய) முழங்கால்கள்வரையும் நரக நெருப்பு தீண்டியிருக்கும். பிறகு, எங்கள் இறைவா! நீ யாரை வெளியேற்றுமாறு கூறினாயோ அவர்களில் ஒருவர்கூட நரகத்தில் எஞ்சவில்லை (எல்லோரையும் நாங்கள் வெளியேற்றிவிட்டோம்) என்று கூறுவார்கள். அப்போது, நீங்கள் திரும்பிச் சென்று எவரது உள்ளத்தில் ஒரு பொற்காசு அளவு நன்மை இருக்கிறதோ அவரை வெளியேற்றுங்கள் என்று இறைவன் கூறுவான். அவ்வாறே அவர்களும் (இன்னும்) ஏராளமான மக்களை வெளியேற்றிவிட்டு (வந்து), எங்கள் இறைவா! நீ உத்தரவிட்ட யாரையும் அதில் நாங்கள் விட்டு வைக்கவில்லை (எல்லோரையும் வெளியேற்றி விட்டோம்) என்று கூறுவார்கள். பிறகு, "நீங்கள் திரும்பிச்சென்று எவரது உள்ளத்தில் அரைப் பொற்காசு அளவு நன்மை இருக்கிறதோ அவரையும் (நரகத்திலிருந்து) வெளியேற்றிவிடுங்கள் என்று இறைவன் கூறுவான். அவர்களும் ஏராளமான மக்களை வெளியே கொண்டு வருவார்கள். பின்னர், எங்கள் இறைவா, நீ கட்டளையிட்ட ஒருவரையும் நாங்கள் விட்டு வைக்கவில்லை என்று கூறுவார்கள். பின்பும் இறைவன், நீங்கள் திரும்பிச்சென்று எவரது உள்ளத்தில் அணுவளவு நன்மை இருக்கிறதோ அவரை வெளியேற்றுங்கள் என்பான். அவ்வாறே அவர்கள் (சென்று) அதிகமான மக்களை வெளியேற்றிவிட்டு (வந்து), எங்கள் இறைவா! நரகத்தில் எந்த நன்மையையும் நாங்கள் விட்டுவைக்கவில்லை என்று கூறுவார்கள். அறிவிப்பாளர் அபூசயீத் அல்குத்ரீ ﵁ அவர்கள் கூறுகிறார்கள் : நான் கூறும் இந்த ஹதீஸை நீங்கள் நம்பாவிட்டால்,

﴿إِنَّ اللَّهَ لَا يَظْلِمُ مِثْقَالَ ذَرَّةٍ وَإِنْ تَكُ حَسَنَةً يُضَاعِفْهَا وَيُؤْتِ مِنْ لَدُنْهُ أَجْرًا عَظِيمًا۝﴾

பொருள் : நிச்சயமாக அல்லாஹ் (யாருக்கும் அவர்களுடைய

பாவத்திற்கு அதிகமான தண்டனையைக் கொடுத்து) ஓர் அணுவளவும் அநியாயம் செய்வதில்லை. ஆயினும், (ஓர் அணுவளவு) நன்மை இருந்தால் (கூட) அதை இரட்டிப்பாக்கித் தன் அருளால் மேலும், அதற்கு மகத்தான கூலியைக் கொடுக்கிறான். (அல்குர்ஆன் 4 : 40)

எனும் வசனத்தை நீங்கள் விரும்பினால் ஓதிக்கொள்ளுங்கள்.

பிறகு, கண்ணியமும் கம்பீரமும் மிக்க அல்லாஹ், வானவர்கள் பரிந்துரைத்து விட்டார்கள்; இறைத்தூதர்களும் பரிந்துரைத்து விட்டார்கள்; இறைநம்பிக்கையாளர்களும் பரிந்துரைத்து விட்டார்கள். இப்போது கருணையாளர்களுக்கெல்லாம் கருணையாளன் மட்டுமே எஞ்சியிருக்கிறான் என்று கூறிவிட்டு, நரகத்திலிருந்து ஒரு கைப்பிடி அளவிலான மக்களை அள்ளியெடுத்து, அறவே எந்த நன்மையும் செய்திராத ஒரு கூட்டத்தை நரகத்திலிருந்து வெளியேற்றுவான். அவர்கள் கரிக்கட்டை போன்று மாறியிருப்பார்கள். எனவே, அவர்களைச் சொர்க்கத்தின் நுழைவாயில்களில் உள்ள ஒரு நதியில் போடுவான். அதற்கு நஹ்ருல் ஹயாத் (ஜீவநதி) என்று பெயர். உடனே அவர்கள் சேற்று வெள்ளத்தில் விதைப் பயிர் முளைப்பதைப் போன்று (புதுப் பொலிவுடன்) வெளியேறுவார்கள். நீங்கள் விதைப் பயிரைப் பார்த்ததில்லையா? பாறையோரங்களில் அல்லது மரங்களுக்கு அருகில் அவை வளர்கின்றன. அவற்றில் வெயில் படுமிடத்தில் இருப்பவை மஞ்சளாகவும் பச்சையாகவும் இருக்கும். (வெயில் படாமல்) நிழலில் இருப்பவை (வெளிறிப்போய்) வெள்ளை நிறத்தில் இருக்கும் அல்லவா? என்று கேட்டார்கள். அதற்கு மக்கள், அல்லாஹ்வின் தூதரே! தாங்கள் கிராமப் புறங்களில் (கால்நடைகளை) மேய்த்துக் கொண்டிருந்தீர்கள் போலும் என்றார்கள்.

(தொடர்ந்து) அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள் : ஆக, அவர்கள் (அந் நதியிலிருந்து) முத்துக்களைப் போன்று (ஒளிர்ந்தவர்களாக) வெளியேறுவார்கள். அவர்களது கழுத்தில் (ஜஹன்னமி- நரகத்தில் இருந்து விடுதலை அடைந்தவர்கள் எனும்) முத்திரை இருக்கும். (அதை வைத்து) அவர்களைச் சொர்க்கவாசிகள்

அடையாளம் கண்டு கொள்வார்கள். இவர்கள் அல்லாஹ்வால் (நரகத்திலிருந்து) விடுதலை செய்யப்பட்டவர்கள்; (உலகில்) எந்த நற்செயலும் புரிந்திராமலும் எந்த நன்மையும் செய்துவைத்திராமலும் இருந்த இவர்களை அல்லாஹ்வே (தனது தனிப்பெரும் கருணையால்) சொர்க்கத்திற்கு அனுப்பினான் என்று பேசிக்கொள்வார்கள். பிறகு (அவர்களிடம்) இறைவன், சொர்க்கத்திற்குள் செல்லுங்கள்; அங்கு எதையெல்லாம் நீங்கள் காண்கிறீர்களோ அது உங்களுக்கே உரியது என்று கூறுவான். அதற்கு அவர்கள், எங்கள் இறைவா! அகிலத்தாரில் யாருக்கும் வழங்காத (பாக்கியத்)தை எங்களுக்கு நீ வழங்கிவிட்டாய் என்று (நன்றியுடன்) கூறுவார்கள். அதற்கு இறைவன், உங்களுக்கு இதைவிடச் சிறந்த வேறொன்று உள்ளது என்று கூறுவான். அதற்கு அவர்கள், எங்கள் இறைவா! இதைவிடச் சிறந்த அந்த ஒன்று எது? என்று கேட்பார்கள். அதற்கு, எனது திருப்தி(தான் அது). இனி ஒருபோதும் உங்கள் மீது நான் கோபம் கொள்ளமாட்டேன் என்பான்.[32]

மேற்கூறப்பட்ட 23, 24 ஆகிய கவிதைகள் மற்றும் அதன் விளக்க உரையிலிருந்து நாம் விளங்கிக்கொள்ள வேண்டிய கருத்துக்களின் சுருக்கத்தை இப்போது பார்ப்போம்.

**சுருக்கம் :**

1. பாவம் ஈமானை பாதிக்கும்.
2. பாவம் செய்த முஃமின்கள், முஸ்லிம்கள் அல்லாஹ்வின் அருளால் மன்னிக்கப்படுவார்கள். அல்லது தங்கள் பாவங்களுக்கு தண்டனை பெற நரகத்தில் செல்வார்கள்.
3. முஃமின்கள், முஸ்லிம்கள் தங்கள் பாவங்களின் காரணமாக நரகத்தில் சென்று விட்டால் அவர்கள் அவர்களின் தண்டனைக் காலம் முடிந்தவுடன் அல்லது நல்லோரின் சிபாரிசால், அல்லது அல்லாஹ்வின் மிக விசாலமான அருளால் நரகத்திலிருந்து வெளியேற்றப்படுவார்கள்.

---

32. அறிவிப்பாளர் : அபூசயீத் அல்குத்ரீ ؓ, நூல் : முஸ்லிம், எண் : 303

4. முஃமின்கள் நரகத்தில் நிரந்தரமாக தங்க மாட்டார்கள். அவர்கள் எவ்வளவுதான் பெரும் பாவம் செய்திருந்தாலும் சரி.

5. காஃபிர்கள் சொர்க்கத்தில் அறவே நுழைய மாட்டார்கள். அவர்கள் எவ்வளவுதான் புண்ணியங்கள் செய்திருந்தாலும் சரி.

6. சொர்க்கம் முஃமின்களின் நிரந்தர இல்லம். நரகம் காஃபிர்களின் நிரந்தர இல்லம்.

7. சொர்க்கம் செல்வதற்கு ஈமான் மட்டும் இருந்தால் போதும் என்று கூறக்கூடாது.

8. அமல், ஈமானின் அம்சங்களில் ஒன்றாகும்.

9. முஃமின்கள் அல்லாஹ்வின் அருளிலிருந்து நிராசை அடையக் கூடாது.

10. காஃபிர்கள் இவ்வுலகத்தை விட்டு ஈமான் இல்லாமல் சென்றுவிட்டால் அவர்கள் மறுமையில் அல்லாஹ்வின் அருளை ஆதரவு வைக்க முடியாது.

11. உலகம், அமல்களின் இல்லம். மறுமை, கூலிகளுடைய இல்லம்.

12. சொர்க்கவாசிகள் எல்லோரும் சொர்க்கம் சென்ற பின்னர் சொர்க்கத்தின் வாசல்களும் நரகத்தின் வாசல்களும் அடைக்கப்பட்டுவிடும்.

13. சொர்க்கமும் நரகமும் நிரந்தரம் ஆகும்.

14. சொர்க்கவாசிகள் சொர்க்கத்தில் நிரந்தரமாக இருப்பார்கள்.

15. பாவம் செய்த முஃமின்கள் நரகத்தில் தண்டனைப் பெற்று அதிலிருந்து வெளியேறிய பின்னர் நரகத்தின் வாசல்கள் முழுமையாக அடைக்கப்பட்டு விடும். அதில் இணைவைத்தவர்களும் நிராகரிப்பாளர்களும் முனாஃபிக்குகளும் நிரந்தரமாக தங்கிவிடுவார்கள்.

16. பெரும்பாவம் ஒருவரை இஸ்லாமை விட்டு வெளியேற்றி விடாது.

17. சொர்க்கம் மற்றும் நரகம் கற்பனை அல்ல. அல்லது ஆன்மாக்கள் மட்டும் இன்பத்தையோ துன்பத்தையோ அனுபவிக்கும் இடமல்ல. மாறாக, அங்கு உடலும் உயிரும் இன்புறும். அல்லது துன்புறும்.

18. சொர்க்கம் அல்லாஹ்வின் கருணையின் இல்லமாகும்.

19. நரகம் அல்லாஹ்வின் கோபம் மற்றும் தண்டனையின் இல்லமாகும்.

20. முஃமின்கள் சொர்க்கத்தை ஆசைப்படுவார்கள். நரகத்தைப் பயப்படுவார்கள்.

21. சொர்க்க நரகத்தை நம்பாதவர்கள் காஃபிர்கள் ஆவார்கள்.

22. ஈமான் கொண்டதற்கு பிறகு எந்த பாவமும் தீங்கு தராது, ஒரு நம்பிக்கையாளர் என்னதான் பாவம் செய்தாலும் அவர் நரகம் செல்ல மாட்டார், எந்த நல்லமலை விட்டாலும் அவர் நரகம் செல்ல மாட்டார் என்று கூறுவது வழிகேடாகும். இது வழிகெட்ட முர்ஜிய்யாக்களின் கொள்கை ஆகும்.

23. ஈமானுக்கு பிறகு பாவம் செய்தவர்கள் தங்கள் பாவங்களுக்கு ஏற்ப நரகத்தில் தண்டிக்கப்படுவார்கள் என்று பல நூறு வசனங்களும் நபிமொழிகளும் வந்துள்ளன. பெரும்பாவம் செய்த சிலரை அல்லாஹ் மஹ்ஷர் மைதானத்திலேயே மன்னித்து சொர்க்கத்திற்கு அனுப்புவான். அது அவர்கள் செய்த சில நன்மையின் காரணமாக, அல்லது நபி ﷺ அவர்களின் சிபாரிசின் காரணமாக, அல்லது நல்லோர் சிலரின் சிபாரிசின் காரணமாக.

அல்லாஹ் நம்மை சொர்க்கவாசிகளில் ஆக்குவானாக! நரக தண்டனையிலிருந்து பாதுகாப்பானாக!

முன் சென்ற விளக்கங்களில் இருந்து வழிகேடான கொள்கைகளை நாம் புரியமுடியும். வழிகெட்ட கொள்கைகளில் சிலவற்றை இங்கு குறிப்பிடுவோம்.

**வழிகேடுகள் :**

1. அல்லாஹ்வின் கருணையிலிருந்து நிராசை ஆவது.
2. ஈமான் கொண்ட பின்னர் பாவம் செய்வதால் அது எவ்வித இடையூறும் செய்யாது என்று கூறுவது.
3. ஈமான் கொண்ட பின்னர் நரகத்தின் மீது பயமில்லாமல் இருப்பது.
4. யார் நரகம் சென்றாலும் அவர் அதில் நிரந்தரமாக தங்கிவிடுவார் என்று கூறுவது.
5. சொர்க்க, நரகத்தை நம்பாமல் இருப்பது, அல்லது அங்கு இன்பங்கள், துன்பங்கள் உயிர் அல்லது அறிவுக்கு மட்டும்தான். உடலுக்கு இல்லை என்று கூறுவது.
6. மறுமையைப் பற்றி குர்ஆன் மற்றும் ஹதீஸில் வந்துள்ள செய்திகளுக்கு மாற்றமாக நம்பிக்கை கொள்வது.

இன்னும் பல வழிகேடான கொள்கைகள் இருக்கின்றன. அஹ்லுஸ் ஸுன்னா உடைய விரிவான கொள்கை நூல்களை படித்து அவற்றை அறிந்து கொள்ள வேண்டும். அஹ்லுஸ் ஸுன்னா உடைய கொள்கைக்கு மாற்றமான ஒவ்வொரு கொள்கையிலிருந்தும் இஸ்லாம் நீங்கியதாகும். ஒருவர் முஸ்லிம் என்று கூறிக் கொண்டு அஹ்லுஸ் ஸுன்னா உடைய கொள்கையை ஏற்றுக் கொள்ள வில்லை என்றால் அவர் ஒன்று முற்றிலும் இஸ்லாமை விட்டு வெளியேறி இருப்பார். அல்லது பெரிய வழிகேட்டில் இருப்பார்.

எல்லாவிதமான வழிகேட்டில் இருந்து அல்லாஹ் நம்மை பாதுகாத்து நேர்வழியில் நம்மை உறுதிப்படுத்துவானாக! ஆமீன்.

--------------------

وَإِنَّ رَسُوْلَ اللّٰهِ لِلْخَلْقِ شَافِعٌ

وَقُلْ فِي عَذَابِ الْقَبْرِ حَقٌّ مُوَضَّحُ

**பொருள் :**

இன்னும் நிச்சயமாக ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் படைப்புகளுக்கு சிபாரிசு செய்வார்கள். இன்னும், கப்ருடைய வேதனை விஷயத்தில், அது மிகத் தெளிவான உண்மை என்று நீ கூறு!

**கருத்து :**

மறுமையில் நபி ﷺ அவர்கள் சிபாரிசு செய்வார்கள். இது உண்மையாகும். கப்ர் - மண்ணறையில் தண்டனை உண்டு. அவ்வாறே இன்பமும் உண்டு. இது குர்ஆன் வசனங்களிலும் சரியான நபிமொழிகளிலும் உறுதி செய்யப்பட்ட உண்மையாகும். இவை அனைத்தையும் நம்பிக்கை கொள்ள வேண்டும்.

**விளக்கம் :**

இந்த கவிதையில் இரண்டு கொள்கைகளை ஆசிரியர் குறிப்பிடுகிறார்கள்.

1. நபி ﷺ அவர்கள் படைப்புகளுக்கு சிபாரிசு செய்வார்கள். நபி ﷺ அவர்களுக்கு மறுமையில் சிறப்பான சிபாரிசு செய்யும் தகுதி உண்டு.

2. கப்ரில் வேதனை நடக்கும் என்பது உண்மை.

இந்த இரண்டாவது கொள்கையின் விளக்கம் முன் சென்று விட்டது. ஆகவே, முதல் கொள்கை குறித்த விளக்கத்தை இப்போது பார்ப்போம்.

சிபாரிசு குறித்து சில அடிப்படைகளை நாம் சரியாக புரிந்து கொள்ள வேண்டும்.

ஷஃபாஅத் -சிபாரிசு என்பதன் பொருள் அகராதியில் பரிந்துரை ஆகும். மார்க்கத்தில், ஷஃபாஅத் என்றால் ஒரு நம்பிக்கையாளர் மற்றொரு நம்பிக்கையாளருக்காக அல்லாஹ்விடம் ஒரு நன்மையை கொடுக்கக் கோரி, அல்லது ஒரு தீமையை அவரை விட்டும் தடுக்கக் கோரி பரிந்துரை செய்வதாகும்.

இவ்வுலகத்தில் முஃமின்கள் தங்களுக்குள் ஒருவர் மற்றவருக்காக துஆவின் மூலம் அல்லாஹ்விடம் பரிந்துரை செய்வது அனுமதிக்கப்பட்டதாகும். அதாவது, அல்லாஹ்வே இன்னாருக்கு நீ நன்மை செய்வாயாக! அவரின் தேவையை நிறைவேற்றுவாயாக! அவருக்கு சுகமளிப்பாயாக! அவரை விட்டும் சிரமத்தை, நோயை அகற்றுவாயாக! இவ்வாறு ஒரு நம்பிக்கையாளர் மற்ற தனது சகோதரருக்காக துஆவின் மூலம் பரிந்துரை செய்யலாம். இதற்கு குர்ஆனிலும் ஹதீஸிலும் ஆதாரம் உண்டு. இது அல்லாஹ் அனுமதித்த, நபி ﷺ அவர்கள் செய்த ஒரு அமலாகும்.

ஆனால், மறுமையைப் பொறுத்த வரை யாரும் யாருக்கும் அல்லாஹ்விடம் அவனது அனுமதி இல்லாமல் பரிந்துரை செய்ய முடியாது. அங்கு பரிந்துரைப்பதை முழுமையாக அல்லாஹ் தனது அதிகாரத்திற்குள் வைத்திருப்பான். அங்கு பரிந்துரைகள் அனைத்தும் அல்லாஹ்விற்கே சொந்தமானவை ஆகும்.

இதைப் பற்றி அல்லாஹு தஆலா கூறுகின்றான் :

﴿قُلْ لِلّٰهِ الشَّفَاعَةُ جَمِيعًا لَهُ مُلْكُ السَّمَاوَاتِ
وَالْأَرْضِ ثُمَّ إِلَيْهِ تُرْجَعُونَ۝﴾

பொருள் : (மேலும் நபியே!) கூறுவீராக: சிபாரிசுகள் அனைத்துமே அல்லாஹ்வுக்குச் சொந்தமானவை. (ஆகவே அவனுடைய அனுமதியின்றி, அவனிடத்தில் ஒருவரும் சிபாரிசு செய்ய முடியாது.)

வானங்கள் பூமியின் ஆட்சி முழுவதும் அல்லாஹ்வுக்குரியதே. பின்னர், (மறுமையில்) அவனிடமே நீங்கள் கொண்டு வரப்படுவீர்கள். (அல்குர்ஆன் 39 : 44)

﴿يَوْمَئِذٍ لَا تَنْفَعُ الشَّفَاعَةُ إِلَّا مَنْ أَذِنَ لَهُ الرَّحْمَنُ وَرَضِيَ لَهُ قَوْلًا○﴾

பொருள் : அந்நாளில் ரஹ்மான் எவருக்கு அனுமதி அளித்து அவரின் பேச்சைக் கேட்க அவன் விரும்பினானோ அவரைத்தவிர மற்ற எவருடைய சிபாரிசும் பயனளிக்காது. (அல்குர்ஆன் 20 : 109)

﴿لَا يَمْلِكُونَ الشَّفَاعَةَ إِلَّا مَنِ اتَّخَذَ عِنْدَ الرَّحْمَنِ عَهْدًا○﴾

பொருள் : ரஹ்மானிடம் அனுமதி பெற்றவர்களைத் தவிர எவரும் (எவருக்கும்) சிபாரிசு பேச உரிமை பெறமாட்டார். (அல்குர்ஆன் 19 : 87)

﴿وَلَا يَمْلِكُ الَّذِينَ يَدْعُونَ مِنْ دُونِهِ الشَّفَاعَةَ
إِلَّا مَنْ شَهِدَ بِالْحَقِّ وَهُمْ يَعْلَمُونَ○﴾

பொருள் : அல்லாஹ்வையன்றி எவற்றை இவர்கள் (இறைவனெனை) அழைக்கிறார்களோ அவை (இவர்களுக்காக அவனிடத்தில்) பரிந்து பேசவும் சக்தி பெறாது. ஆயினும், எவர்கள் உண்மையை அறிந்து அதைப் பகிரங்கமாகவும் கூறுகிறார்களோ அவர்களைத் தவிர. (அவர்களுக்கு அவனுடைய அனுமதி கிடைத்தால் அவனிடம் அவர்கள் பரிந்து பேசுவார்கள்.) (அல்குர்ஆன் 43 : 86)

﴿يَعْلَمُ مَا بَيْنَ أَيْدِيهِمْ وَمَا خَلْفَهُمْ وَلَا يَشْفَعُونَ
إِلَّا لِمَنِ ارْتَضَىٰ وَهُمْ مِنْ خَشْيَتِهِ مُشْفِقُونَ○﴾

பொருள் : அவர்களுக்கு முன்னிருப்பவற்றையும், பின்னிருப்பவற்றையும் அவன் நன்கறிவான். அவன்

விரும்பியவர்களுக்கே தவிர மற்றெவருக்கும் இவர்கள் சிபாரிசு செய்யமாட்டார்கள். இன்னும், அவனுக்குப் பயந்து நடுங்கிக் கொண்டே இருப்பார்கள். (அல்குர்ஆன் 21 : 28)

﴿مَنْ ذَا الَّذِي يَشْفَعُ عِنْدَهُ إِلَّا بِإِذْنِهِ﴾

பொருள் : அவனுடைய அனுமதியின்றி அவனிடத்தில் (எவருக்காகிலும்) யார்தான் பரிந்து பேசக்கூடும்?

(அல்குர்ஆன் 2 : 255)

இது வரை நாம் கூறிய ஆதாரங்கள் வாயிலாக தெரிய வருவதாவது :

1. மறுமையில் சிபாரிசு உண்டு.

2. மறுமையில் சிபாரிசு முழுமையாக அல்லாஹ்வின் அதிகாரத்தில் இருக்கும்.

3. அல்லாஹ் யாருக்கு யார் விஷயத்தில் அனுமதி கொடுப்பானோ அவர்கள் மட்டும் சிபாரிசு செய்வார்கள்.

4. மனிதர்கள் யாரை ஆதரவு வைத்தார்களோ அவர்கள் எல்லாம் அங்கு சிபாரிசு செய்ய முடியாது.

5. அல்லாஹ் யாருக்கு சிபாரிசு உடைய தகுதியை கொடுத்து இருந்தாலும் அவர்கள் தாமாக முன்வந்து அல்லாஹ்விடம் தாங்கள் விரும்பியவர்களுக்கு சிபாரிசு செய்ய முடியாது. மாறாக, அவர்கள் அல்லாஹ்வின் அனுமதியை பெற வேண்டும். சிபாரிசு செய்வதற்கும் அல்லாஹ்வின் அனுமதி வேண்டும். யாருக்கு சிபாரிசு செய்யலாம் என்பதற்கும் அல்லாஹ்வின் புறத்திலிருந்து அனுமதி வேண்டும்.

6. இணைவைப்பவர்கள் தங்கள் சிலைகள் தங்களுக்காக மறுமையில் பரிந்துரை செய்யும் என்று நம்பி இருக்கிறார்கள். இன்னும் வானவர்களை அல்லது நல்லவர்களை நம்பி இருந்து, அவர்கள் தங்களை அவர்களின் பரிந்துரையால் மறுமையில்

அல்லாஹ்வின் தண்டனையிலிருந்து காப்பாற்றி விடுவார்கள் என்று இந்த உலகத்தில் பலர் நம்பி இருக்கின்றார்கள். இந்த நம்பிக்கையின் அடிப்படையில் அவர்கள் அல்லாஹ்வை வணங்குவதை விட்டுவிட்டு வானவர்களை அல்லது அந்த நல்லவர்களை வணங்கி அவர்களுக்கு வழிபாடு செய்து வருகின்றனர். இத்தகைய இணைவைப்பாளர்கள் யாரும் மறுமையில் வெற்றிப் பெற முடியாது. அங்கு சிலைகள் அறவே பரிந்துரை செய்யாது. அந்த சிலைகளையும் நரகத்தில் எறியப்பட்டுவிடும்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான் :

﴿وَلَقَدْ جِئْتُمُونَا فُرَادَىٰ كَمَا خَلَقْنَاكُمْ أَوَّلَ مَرَّةٍ وَتَرَكْتُم مَا خَوَّلْنَاكُمْ وَرَاءَ ظُهُورِكُمْ وَمَا نَرَىٰ مَعَكُمْ شُفَعَاءَكُمُ الَّذِينَ زَعَمْتُمْ أَنَّهُمْ فِيكُمْ شُرَكَاءُ لَقَد تَّقَطَّعَ بَيْنَكُمْ وَضَلَّ عَنكُم مَّا كُنتُمْ تَزْعُمُونَ﴾

பொருள் : (இறைவன் மறுமையில் அவர்களை நோக்கி) “முன்னர் நாம் உங்களைப் படைத்தவாறே (உங்களுடன் ஒன்றுமில்லாது) நிச்சயமாக நீங்கள் தனியாகவே நம்மிடம் வந்து சேர்ந்தீர்கள். நாம் உங்களுக்குக் கொடுத்திருந்தவற்றையும் உங்கள் முதுகுப் புறமாகவே விட்டுவிட்டீர்கள். (உங்களைப் படைப்பதிலும் வளர்ப்பதிலும் இறைவனுக்குத்) துணையானவர்களென நீங்கள் எவர்களை எண்ணிக் கொண்டிருந்தீர்களோ அவர்கள் உங்களுக்குப் பரிந்து பேச இவ்விடத்தில் இருக்கவில்லையே! (அவர்களுக்கும்) உங்களுக்கு(ம்) இடையில் இருந்த சம்பந்தங்கள் எல்லாம் நீங்கி, உங்கள் நம்பிக்கைகள் எல்லாம் தவறிவிட்டன" (என்று கூறுவான்). (அல்குர்ஆன் 6 : 94)

7. வானவர்கள் மற்றும் நபிமார்கள் மற்றும் முஸ்லிமான நல்லவர்கள் யாரும் தங்களை வழிபட்டவர்களின் பாவத்திற்கு பொறுப்பாக

மாட்டார்கள். மலக்குகள், நபிமார்கள், நல்லோர் சிபாரிசு செய்வார்கள் என்று அவர்களை நம்பி இருந்து, அல்லாஹ்வை வணங்காமல், அவர்களை வணங்கியவர்களை விட்டும் அந்த மலக்குகள், நபிமார்கள் நல்லவர்கள் அனைவரும் விலகிக்கொள்வார்கள்.

8. அல்லாஹ்வின் மீது ஆதரவு வைக்காமல் படைப்புகள் மீது ஆதரவு வைத்த அனைவரும் முஷ்ரிக்குகள்தான். ஆகவே, அவர்களுக்கு அறவே யாருடைய பரிந்துரையும் கிடைக்காது. நல்லவர்கள் யாரும் இந்த பாவிகளுக்கு சிபாரிசு செய்ய அல்லாஹ் அனுமதி வழங்க மாட்டான். மறுமையில் முஃமின்களுக்கு மட்டும்தான் சிபாரிசு கிடைக்கும்.

9. மலக்குகளின் சிபாரிசோ அல்லது நபிமார்களின் சிபாரிசோ அல்லது நல்லவர்களின் சிபாரிசோ அல்லது இறுதியாக பேரருளாளன் அல்லாஹ்வின் சிபாரிசோ முஃமின்களுக்கு மட்டும்தான் கிடைக்கும். வானவர்கள், அல்லது நபிமார்கள், அல்லது நல்லவர்கள் யார் சிபாரிசு செய்தாலும் அந்த சிபாரிசு அல்லாஹ்வின் அருளாகும். அல்லாஹ்தான் அவர்களுக்கு அனுமதி வழங்கினான். அல்லாஹ்தான் நம்மை அவர்களின் சிபாரிசுக்கு தேர்ந்தெடுத்தான். அவர்கள் நம்மை தேர்ந்தெடுக்கவில்லை.

10. ஆகவே, நாம் இவ்வுலகில் யாரிடமும் சென்று எனக்காக மறுமையில் நீங்கள் சிபாரிசு செய்யுங்கள் என்று கூறுவது கூடாது. மாறாக இது ஷிர்க்காக ஆகிவிடலாம். மேலும், இன்னார் எனக்கு கண்டிப்பாக சிபாரிசு செய்வார்; எனவே, அல்லாஹ் என்னை சொர்க்கத்தில் சேர்த்து விடுவான் என்று நம்பிக்கை வைப்பதும் ஷிர்க் ஆகும். நாம் ஷஃபாஅத்தை அல்லாஹ்விடம் மட்டுமே கேட்க வேண்டும். அல்லாஹ்வே எனக்கு நல்லோரின் பரிந்துரையைத் தா! என்று.

11. எனக்கு மலக்குகள் சிபாரிசு செய்வார்கள், அல்லது இந்த நபி ﷺ அவர்கள் எனக்கு சிபாரிசு செய்வார், அல்லது இன்ன

இறைநேசர் எனக்கு சிபாரிசு செய்வார், அல்லது இன்ன ஷைகு எனக்கு சிபாரிசு செய்வார் என்று நம்புவதும் அதை ஆதரவு வைப்பதும் முற்றிலும் ஷிர்க் ஆகும். கண்டிப்பாக மலக்குகள், நபிமார்கள், இன்னும் யாரெல்லாம் அல்லாஹ்வின் அன்பைப் பெற்ற நல்ல முஃமின்களாக இருக்கிறார்களோ அவர்கள் எல்லோரும் சிபாரிசு செய்யத் தகுதியானவர்கள்தான். அவர்களை சிபாரிசு செய்ய தகுதி உள்ளவர்களாக ஆக்கியவன் அல்லாஹ் ஆவான். பிறகு, அவர்கள் யார் யாருக்கு சிபாரிசு செய்ய வேண்டும் என்று அனுமதி கொடுப்பவனும் அல்லாஹ்தான். அப்போது சிபாரிசு செய்யப்படுவதற்கு மனிதர்களை தேர்வு செய்பவனும் அல்லாஹ்தான். ஆகவே, நாம் அல்லாஹ்வை மட்டும்தான் நம்பிக்கை கொண்டு, அவனை மட்டும்தான் நம்பி, ஆதரவு வைத்து இருக்க வேண்டும்.

12. மறுமையின் சிபாரிசை இவ்வுலகில் ஒருவர் மற்றவருக்காக துஆ கேட்பது, அல்லது ஒருவர் மற்றவரிடம் துஆ கேட்க சொல்வதின் மீது கியாஸ் -அனுமானம் செய்யக் கூடாது. ஒருவர் மற்றவருக்காக இவ்வுலகில் துஆ கேட்கலாம் என்பது அல்லாஹ் அனுமதித்த ஒன்றாகும். அவ்வாறே ஒருவரிடம் எனக்கு அல்லாஹ்விடம் துஆ கேளுங்கள் என்று கூறுவதும் அல்லாஹ் அனுமதித்த சட்டமாகும். இதை வைத்து மறுமையில் சிபாரிசு செய்வதை முடிவு செய்யக் கூடாது.

மறுமையில் பாவிகளுக்கு நபி ﷺ அவர்கள் சிபாரிசு செய்வார்கள். மற்றவர்கள் செய்கின்ற சிபாரிசை விட நபி ﷺ அவர்கள் செய்கின்ற சிபாரிசு மிகப் பெரியதாக இருக்கும். நபி ﷺ அவர்களின் சிபாரிசுக்குப் பிறகுதான் அல்லாஹ் விசாரணையை, கேள்வி கணக்கை ஆரம்பிப்பான். பெரும் பாவம் செய்தவர்களுக்கும் நபி ﷺ அவர்கள் சிபாரிசு செய்வார்கள். இது அல்லாஹ் நமது நபி ﷺ அவர்களுக்கு கொடுத்த மாபெரும் கண்ணியமாகும். வேறெந்த நபிக்கும் இத்தகைய தகுதி இருக்காது. நபிமார்கள் சிபாரிசு செய்வார்கள் என்று இருந்தாலும் அது நமது நபி ﷺ அவர்கள் செய்கின்ற சிபாரிசு அளவுக்கு இருக்காது. இதற்கெல்லாம் மேலாக

கருணையாளர்களுக்கெல்லாம் மேலான மகா கருணையாளன் அல்லாஹ் தனது அருளால் முஃமின்கள் என்று அவன் மட்டும் அறிந்தவர்களை நரகத்திலிருந்து வெளியேற்றுவான்.

இப்போது மறுமையில் நடக்க இருக்கும் சிபாரிசு தொடர்பான ஹதீஸ்களைப் பார்ப்போம்.

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ أَنَّهُ قَالَ قُلْتُ يَا رَسُولَ اللهِ مَنْ أَسْعَدُ النَّاسِ بِشَفَاعَتِكَ يَوْمَ القِيَامَةِ فَقَالَ لَقَدْ ظَنَنْتُ يَا أَبَا هُرَيْرَةَ أَنْ لَا يَسْأَلَنِي عَنْ هٰذَا الحَدِيثِ أَحَدٌ أَوَّلُ مِنْكَ لِمَا رَأَيْتُ مِنْ حِرْصِكَ عَلَى الحَدِيثِ أَسْعَدُ النَّاسِ بِشَفَاعَتِي يَوْمَ القِيَامَةِ مَنْ قَالَ لاَ إِلٰهَ إِلَّا اللهُ خَالِصًا مِنْ قِبَلِ نَفْسِهِ رَوَاهُ الْبُخَارِيُّ ﵀**

அல்லாஹ்வின் தூதரே! மறுமை நாளில் உங்கள் பரிந்துரைக்கு மனிதர்களில் மிகத் தகுதியானவர் யார்? என்று கேட்டேன். அபூ ஹுரைராவே! உமக்கு ஹதீஸின் மீதுள்ள பேராசையை நான் பார்த்ததால் உம்மை விட முதலாமவராக ஒருவரும் இந்த ஹதீஸைப் பற்றி என்னிடம் கேட்கமாட்டார் என்று திட்டமாக நான் அறிந்திருந்தேன். மறுமை நாளில் எனது பரிந்துரைக்கு மிகத் தகுதியானவர் தனது உள்ளத்தில் தூய்மையானவராக **'லா இலாஹ இல்லல்லாஹ்'** கூறியவர்தான் என்று ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்.[33]

**عَنْ أَنَسٍ ﵁ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ يَجْتَمِعُ الْمُؤْمِنُونَ يَوْمَ القِيَامَةِ فَيَقُولُونَ لَوِ اسْتَشْفَعْنَا إِلَى رَبِّنَا فَيَأْتُونَ آدَمَ فَيَقُولُونَ أَنْتَ أَبُو النَّاسِ خَلَقَكَ اللهُ بِيَدِهِ وَأَسْجَدَ لَكَ مَلَائِكَتَهُ وَعَلَّمَكَ أَسْمَاءَ**

33. அறிவிப்பாளர் : அபூ ஹுரைரா ﵁, நூல் : ஸஹீஹுல் புகாரீ, எண் : 6570.

كُلِّ شَيْءٍ فَاشْفَعْ لَنَا عِنْدَ رَبِّكَ حَتَّىٰ يُرِيحَنَا مِنْ مَكَانِنَا هٰذَا فَيَقُولُ لَسْتُ هُنَاكُمْ وَيَذْكُرُ ذَنْبَهُ فَيَسْتَحِي ائْتُوا نُوحًا فَإِنَّهُ أَوَّلُ رَسُولٍ بَعَثَهُ اللهُ إِلَىٰ أَهْلِ الأَرْضِ فَيَأْتُونَهُ فَيَقُولُ لَسْتُ هُنَاكُمْ وَيَذْكُرُ سُؤَالَهُ رَبَّهُ مَا لَيْسَ لَهُ بِهِ عِلْمٌ فَيَسْتَحِي فَيَقُولُ ائْتُوا خَلِيلَ الرَّحْمَنِ فَيَأْتُونَهُ فَيَقُولُ لَسْتُ هُنَاكُمْ ائْتُوا مُوسَىٰ عَبْدًا كَلَّمَهُ اللهُ وَأَعْطَاهُ التَّوْرَاةَ فَيَأْتُونَهُ فَيَقُولُ لَسْتُ هُنَاكُمْ وَيَذْكُرُ قَتْلَ النَّفْسِ بِغَيْرِ نَفْسٍ فَيَسْتَحِي مِنْ رَبِّهِ فَيَقُولُ ائْتُوا عِيسَىٰ عَبْدَ اللهِ وَرَسُولَهُ وَكَلِمَةَ اللهِ وَرُوحَهُ فَيَقُولُ لَسْتُ هُنَاكُمْ ائْتُوا مُحَمَّدًا ﷺ عَبْدًا غَفَرَ اللهُ لَهُ مَا تَقَدَّمَ مِنْ ذَنْبِهِ وَمَا تَأَخَّرَ فَيَأْتُونِي فَأَنْطَلِقُ حَتَّىٰ أَسْتَأْذِنَ عَلَىٰ رَبِّي فَيُؤْذَنَ لِي فَإِذَا رَأَيْتُ رَبِّي وَقَعْتُ سَاجِدًا فَيَدَعُنِي مَا شَاءَ اللهُ ثُمَّ يُقَالُ ارْفَعْ رَأْسَكَ وَسَلْ تُعْطَهْ وَقُلْ يُسْمَعْ وَاشْفَعْ تُشَفَّعْ فَأَرْفَعُ رَأْسِي فَأَحْمَدُهُ بِتَحْمِيدٍ يُعَلِّمُنِيهِ ثُمَّ أَشْفَعُ فَيَحُدُّ لِي حَدًّا فَأُدْخِلُهُمُ الْجَنَّةَ ثُمَّ أَعُودُ إِلَيْهِ فَإِذَا رَأَيْتُ رَبِّي مِثْلَهُ ثُمَّ أَشْفَعُ فَيَحُدُّ لِي حَدًّا فَأُدْخِلُهُمُ الْجَنَّةَ ثُمَّ أَعُودُ الرَّابِعَةَ فَأَقُولُ مَا بَقِيَ فِي النَّارِ إِلَّا مَنْ حَبَسَهُ الْقُرْآنُ وَوَجَبَ عَلَيْهِ الْخُلُودُ قَالَ أَبُو عَبْدِ اللهِ إِلَّا مَنْ حَبَسَهُ الْقُرْآنُ يَعْنِي قَوْلَ اللهِ تَعَالَىٰ خَالِدِينَ فِيهَا رَوَاهُ الْبُخَارِيُّ رَحِمَهُ اللهُ

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: மறுமை நாளில் நம்பிக்கையாளர்கள் ஒன்றுகூடி, நம் இறைவனிடம் பரிந்துரைக்கும்படி நாம் (யாரிடமாவது) கூறலாமே! என்று (தங்களிடையே) பேசிக் கொள்வார்கள். பிறகு,

அவர்கள் ஆதம் ﷺ அவர்களிடம் வந்து, நீங்கள் மனிதர்களின் தந்தையாவீர்கள். அல்லாஹ், தன் கையால் உங்களைப் படைத்தான். தனது வானவர்களை உங்களுக்குச் சிரம் பணியச் செய்தான். மேலும், உங்களுக்கு எல்லாப் பொருள்களின் பெயர்களையும் கற்றுத் தந்தான். எனவே, உங்கள் இறைவனிடத்தில் எங்களுக்காகப் பரிந்துரை செய்யுங்கள், அவன் எங்களை இந்த இடத்திலிருந்து அகற்றி எங்களுக்கு அவன் நிம்மதியளிப்பான். அதற்கு ஆதம் ﷺ அவர்கள், (நீங்கள் நினைக்கும்) அந்த நிலையில் நான் இல்லை என்று கூறிவிட்டு, தாம் புரிந்த பாவத்தை நினைத்துப் பார்த்து வெட்கப்படுவார்கள். நீங்கள் (நபி) நூஹ் ﷺ அவர்களிடம் செல்லுங்கள். ஏனென்றால், அவர் பூமியிலுள்ளவர்களுக்கு அல்லாஹ் அனுப்பி வைத்த ரஸூல்களில் முதலாமவராவார் என்று சொல்வார்கள். உடனே, முஃமின்கள் நூஹ் ﷺ அவர்களிடம் செல்வார்கள். அப்போது அவரும், (நீங்கள் நினைக்கும்) அந்த நிலையில் நான் இல்லை என்று கூறிவிட்டு, தாம் அறியாத ஒன்றைக் குறித்துத் தம் இறைவனிடத்தில் கேட்டதை நினைத்து வெட்கப்படுவார்கள். பிறகு, நீங்கள் ரஹ்மானுடைய உற்ற நண்பரிடம் (இப்ராஹீம் ﷺ அவர்களிடம்) செல்லுங்கள் என்று சொல்வார்கள். உடனே, முஃமின்கள் (இப்ராஹீம் ﷺ) அவர்களிடம் செல்வார்கள். அப்போது அவர்களும், (நீங்கள் நினைக்கும்) அந்த நிலையில் நான் இல்லை. (நபி) மூஸாவிடம் நீங்கள் செல்லுங்கள், அவர் அல்லாஹ் பேசிய அடியார் ஆவார். இன்னும் அல்லாஹ் அவருக்கு தவ்ராத்தையும் கொடுத்தான் என்று சொல்வார்கள். உடனே, அவர்கள் மூஸா ﷺ அவர்களிடம் செல்வார்கள். அப்போது அவர்கள், '(நீங்கள் நினைக்கும்) அந்த நிலையில் நான் இல்லை' என்று கூறிவிட்டு, (தம் வாழ்நாளில் ஒருமுறை) எந்த உயிருக்கும் ஈடாக இல்லாமல் ஒரு (மனித) உயிரைக் கொன்றதை நினைவு கூர்ந்து தம் இறைவனுக்கு முன் வெட்கப்படுவார்கள். பிறகு, நீங்கள் அல்லாஹ்வின் அடியாரும், அவனுடைய தூதரும், அவனுடைய வார்த்தையும், அவனுடைய ரூஹ் ஆகிய (நபி) ஈஸாவிடம் செல்லுங்கள் என்று சொல்வார்கள். (அவ்வாறே அவர்கள் செல்ல,) அப்போது அவர்களும், (நீங்கள் நினைக்கும்) அந்த நிலையில் நான்

இல்லை. நீங்கள் முன் பின் பாவங்கள் மன்னிக்கப்பட்ட அடியாரான முஹம்மத் ﷺ அவர்களிடம் செல்லுங்கள் என்று சொல்வார்கள். உடனே, அவர்கள் என்னிடம் வருவார்கள். அப்போது நான், எனது இறைவனிடத்தில் அனுமதி கேட்பதற்காகச் செல்வேன். அப்போது (எனக்கு) அனுமதி வழங்கப்படும். என் இறைவனை நான் காணும்போது சஜ்தாவில் விழுவேன். தான் விரும்பிய வரையில் (அப்படியே) அவன் என்னை விட்டு விடுவான். பிறகு, (இறைவனின் தரப்பிலிருந்து) உங்கள் தலையை உயர்த்துங்கள்! கேளுங்கள்! உங்களுக்குத் தரப்படும். சொல்லுங்கள்; செவியேற்கப்படும். பரிந்துரை செய்யுங்கள்; உங்கள் பரிந்துரை ஏற்கப்படும் என்று சொல்லப்படும். அப்போது நான் என்னுடைய தலையை உயர்த்தி, இறைவன் எனக்குக் கற்றுத் தரும் புகழ் வாக்கியங்களைக் கூறி அவனைப் புகழ்வேன். பிறகு நான் பரிந்துரை செய்வேன். அப்போது இறைவன், (நான் யாருக்கு சிபாரிசு செய்ய வேண்டும் என்று) எனக்கு வரம்பு விதிப்பான். பிறகு அவர்களை நான் சொர்க்கத்திற்கு அனுப்பி வைப்பேன். பிறகு மீண்டும் நான் இறைவனிடம் செல்வேன். என் இறைவனைக் காணும்போது நான் முன்பு போன்றே செய்வேன். பிறகு நான் பரிந்துரைப்பேன். அப்போதும் இறைவன், (நான் யார் யாருக்குப் பரிந்துரை செய்யலாம் என்பதை வரையறுத்து) எனக்கு வரம்பு விதிப்பான். பிறகு, நான் அவர்களைச் சொர்க்கத்திற்கு அனுப்பி வைப்பேன். பிறகு மூன்றாம் முறையாக (இறைவனிடம்) நான் செல்வேன். பிறகு நான்காம் முறையும் செல்வேன். (இறுதியாக) நான், குர்ஆன் தடுத்துவிட்ட, நிரந்தர நரகம் கட்டாயமாகி விட்டவர்(களான இறைமறுப்பாளர்கள், நயவஞ்சகர்)களைத் தவிர வேறு யாரும் நரகத்தில் மிஞ்சவில்லை என்று சொல்வேன்.

இவ்வாறு அனஸ் رضي الله عنه அவர்கள் இந்த ஹதீஸை அறிவித்தார்கள்.

அபூ அப்தில்லாஹ் (புகாரி) رحمه الله கூறுகிறார்கள் : அல்லாஹு தஆலா (குர்ஆனில் யாரைக் குறித்து), நரகத்தில் இவர்கள் நிரந்தரமாக இருப்பார்கள் என்று குறிப்பிட்டுள்ளானோ அவர்களைத்தான், குர்ஆன் தடுத்துவிட்டவர்கள் எனும் வாக்கியம் குறிக்கிறது.[34]

34, அறிவிப்பாளர் : அனஸ் رضي الله عنه, நூல் : புகாரி, எண் : 4476

அனஸ் ﵁ அவர்கள் அறிவிக்கின்ற மற்றொரு அறிவிப்பில் இந்த செய்திகளுடன் அறிவிப்பின் இறுதியில் இவ்வாறு இடம்பெற்றுள்ளது :

**قَالَ النَّبِيُّ ﷺ يَخْرُجُ مِنَ النَّارِ مَنْ قَالَ لاَ إِلٰهَ إِلَّا اللهُ وَكَانَ فِي قَلْبِهِ مِنَ الخَيْرِ مَا يَزِنُ شَعِيرَةً ثُمَّ يَخْرُجُ مِنَ النَّارِ مَنْ قَالَ لاَ إِلٰهَ إِلَّا اللهُ وَكَانَ فِي قَلْبِهِ مِنَ الخَيْرِ مَا يَزِنُ بُرَّةً ثُمَّ يَخْرُجُ مِنَ النَّارِ مَنْ قَالَ لاَ إِلٰهَ إِلَّا اللهُ وَكَانَ فِي قَلْبِهِ مَا يَزِنُ مِنَ الخَيْرِ ذَرَّةً رَوَاهُ الْبُخَارِيُّ ؒ**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள் : லா இலாஹ இல்லல்லாஹ் என்று கூறி தனது உள்ளத்தில் ஒரு வாற்கோதுமை அளவு நன்மை உள்ளவரும் நரகத்திலிருந்து வெளியேறி விடுவார். பிறகு, லா இலாஹ இல்லல்லாஹ் என்று கூறி தனது உள்ளத்தில் ஒரு கோதுமை அளவு நன்மை உள்ளவரும் நரகத்திலிருந்து வெளியேறி விடுவார். பிறகு, லா இலாஹ இல்லல்லாஹ் என்று கூறி தனது உள்ளத்தில் சிறிய கருப்பு எறும்பின் அளவு நன்மை உள்ளவரும் நரகத்திலிருந்து வெளியேறி விடுவார்.[35]

அனஸ் ﵁ அவர்கள் அறிவிக்கின்ற மற்றொரு அறிவிப்பில் இந்த செய்திகளுடன் அறிவிப்பின் இறுதியில் இவ்வாறு இடம் பெற்றுள்ளது :

**فَيُقَالُ يَا مُحَمَّدُ ارْفَعْ رَأْسَكَ وَقُلْ يُسْمَعْ وَسَلْ تُعْطَهْ وَاشْفَعْ تُشَفَّعْ فَأَقُولُ يَا رَبِّ ائْذَنْ لِي فِيمَنْ قَالَ لاَ إِلٰهَ إِلَّا اللهُ فَيَقُولُ وَعِزَّتِي وَجَلاَلِي وَكِبْرِيَائِي وَعَظَمَتِي لَأُخْرِجَنَّ مِنْهَا مَنْ قَالَ لاَ إِلٰهَ إِلَّا اللهُ رَوَاهُ الْبُخَارِيُّ ؒ**

35. அறிவிப்பாளர் : அனஸ் ﵁, நூல் : புகாரி, எண் : 7410

முஹம்மதே! உங்கள் தலையை உயர்த்துங்கள்! நீங்கள் கூறுங்கள்! அது ஏற்றுக்கொள்ளப்படும். நீங்கள் கேளுங்கள்! அது உங்களுக்கு கொடுக்கப்படும். நீங்கள் சிபாரிசு செய்யுங்கள்! உங்கள் சிபாரிசு ஏற்றுக் கொள்ளப்படும் என்று கூறப்படும். அப்போது, நான் கூறுவேன் : என் இறைவா! லா இலாஹ இல்லல்லாஹ் என்று கூறிய அனைவர் விஷயத்திலும் எனக்கு நீ அனுமதி தருவாயாக! (நான் அவர்களுக்காக உன்னிடம் பரிந்துரை செய்ய வேண்டும்; அவர்கள் நரகத்திலிருந்து வெளியேற வேண்டும் என்று கூறுவேன்.) அதற்கு அவன் கூறுவான் : என் கண்ணியத்தின் மீதும் எனது கம்பீரத்தின் மீதும் எனது மகத்துவத்தின் மீதும் சத்தியமாக! நிச்சயமாக நான் லா இலாஹ இல்லல்லாஹ் கூறியவரை அதிலிருந்து வெளியேற்றுவேன்.[36]

**عَنْ أَبِي سَعِيدٍ الخُدْرِيِّ رَضِيَ اللهُ عَنْهُ قَالَ قُلْنَا يَا رَسُولَ اللهِ هَلْ نَرَىٰ رَبَّنَا يَوْمَ القِيَامَةِ؟ قَالَ هَلْ تُضَارُونَ فِي رُؤْيَةِ الشَّمْسِ وَالقَمَرِ إِذَا كَانَتْ صَحْوًا؟ قُلْنَا لاَ قَالَ فَإِنَّكُمْ لاَ تُضَارُونَ فِي رُؤْيَةِ رَبِّكُمْ يَوْمَئِذٍ إِلَّا كَمَا تُضَارُونَ فِي رُؤْيَتِهِمَا ثُمَّ قَالَ يُنَادِي مُنَادٍ لِيَذْهَبْ كُلُّ قَوْمٍ إِلَىٰ مَا كَانُوا يَعْبُدُونَ فَيَذْهَبُ أَصْحَابُ الصَّلِيبِ مَعَ صَلِيبِهِمْ وَأَصْحَابُ الأَوْثَانِ مَعَ أَوْثَانِهِمْ وَأَصْحَابُ كُلِّ آلِهَةٍ مَعَ آلِهَتِهِمْ حَتَّىٰ يَبْقَىٰ مَنْ كَانَ يَعْبُدُ اللهَ مِنْ بَرٍّ أَوْ فَاجِرٍ وَغُبَّرَاتٌ مِنْ أَهْلِ الكِتَابِ ثُمَّ يُؤْتَىٰ بِجَهَنَّمَ تُعْرَضُ كَأَنَّهَا سَرَابٌ فَيُقَالُ لِلْيَهُودِ مَا كُنْتُمْ تَعْبُدُونَ؟ قَالُوا كُنَّا نَعْبُدُ عُزَيْرَ ابْنَ اللهِ فَيُقَالُ كَذَبْتُمْ لَمْ يَكُنْ لِلّٰهِ صَاحِبَةٌ وَلاَ وَلَدٌ فَمَا تُرِيدُونَ؟ قَالُوا نُرِيدُ أَنْ تَسْقِيَنَا فَيُقَالُ اشْرَبُوا فَيَتَسَاقَطُونَ فِي جَهَنَّمَ ثُمَّ يُقَالُ لِلنَّصَارَىٰ مَا كُنْتُمْ تَعْبُدُونَ؟ فَيَقُولُونَ كُنَّا نَعْبُدُ**

36, அறிவிப்பாளர் : அனஸ் ﷺ, நூல் : புகாரி, எண் : 7510

المَسِيحَ ابْنَ اللهِ فَيُقَالُ كَذَبْتُمْ لَمْ يَكُنْ لِلهِ صَاحِبَةٌ وَلاَ وَلَدٌ فَمَا تُرِيدُونَ؟ فَيَقُولُونَ نُرِيدُ أَنْ تَسْقِيَنَا فَيُقَالُ اشْرَبُوا فَيَتَسَاقَطُونَ فِي جَهَنَّمَ حَتَّىٰ يَبْقَىٰ مَنْ كَانَ يَعْبُدُ اللهَ مِنْ بَرٍّ أَوْ فَاجِرٍ فَيُقَالُ لَهُمْ مَا يَحْبِسُكُمْ وَقَدْ ذَهَبَ النَّاسُ؟ فَيَقُولُونَ فَارَقْنَاهُمْ وَنَحْنُ أَحْوَجُ مِنَّا إِلَيْهِ اليَوْمَ وَإِنَّا سَمِعْنَا مُنَادِيًا يُنَادِي لِيَلْحَقْ كُلُّ قَوْمٍ بِمَا كَانُوا يَعْبُدُونَ وَإِنَّمَا نَنْتَظِرُ رَبَّنَا قَالَ فَيَأْتِيهِمُ الجَبَّارُ فِي صُورَةٍ غَيْرِ صُورَتِهِ الَّتِي رَأَوْهُ فِيهَا أَوَّلَ مَرَّةٍ فَيَقُولُ أَنَا رَبُّكُمْ فَيَقُولُونَ أَنْتَ رَبُّنَا فَلاَ يُكَلِّمُهُ إِلَّا الأَنْبِيَاءُ فَيَقُولُ هَلْ بَيْنَكُمْ وَبَيْنَهُ آيَةٌ تَعْرِفُونَهُ؟ فَيَقُولُونَ السَّاقُ فَيَكْشِفُ عَنْ سَاقِهِ فَيَسْجُدُ لَهُ كُلُّ مُؤْمِنٍ وَيَبْقَىٰ مَنْ كَانَ يَسْجُدُ لِلهِ رِيَاءً وَسُمْعَةً فَيَذْهَبُ كَيْمَا يَسْجُدَ فَيَعُودُ ظَهْرُهُ طَبَقًا وَاحِدًا ثُمَّ يُؤْتَىٰ بِالْجَسْرِ فَيُجْعَلُ بَيْنَ ظَهْرَيْ جَهَنَّمَ قُلْنَا يَا رَسُولَ اللهِ وَمَا الجَسْرُ؟ قَالَ مَدْحَضَةٌ مَزِلَّةٌ عَلَيْهِ خَطَاطِيفُ وَكَلاَلِيبُ وَحَسَكَةٌ مُفَلْطَحَةٌ لَهَا شَوْكَةٌ عُقَيْفَاءُ تَكُونُ بِنَجْدٍ يُقَالُ لَهَا السَّعْدَانُ المُؤْمِنُ عَلَيْهَا كَالطَّرْفِ وَكَالْبَرْقِ وَكَالرِّيحِ وَكَأَجَاوِيدِ الخَيْلِ وَالرِّكَابِ فَنَاجٍ مُسَلَّمٌ وَنَاجٍ مَخْدُوشٌ وَمَكْدُوسٌ فِي نَارِ جَهَنَّمَ حَتَّىٰ يَمُرَّ آخِرُهُمْ يُسْحَبُ سَحْبًا فَمَا أَنْتُمْ بِأَشَدَّ لِي مُنَاشَدَةً فِي الحَقِّ قَدْ تَبَيَّنَ لَكُمْ مِنَ المُؤْمِنِ يَوْمَئِذٍ لِلْجَبَّارِ وَإِذَا رَأَوْا أَنَّهُمْ قَدْ نَجَوْا فِي إِخْوَانِهِمْ يَقُولُونَ رَبَّنَا إِخْوَانُنَا كَانُوا يُصَلُّونَ مَعَنَا وَيَصُومُونَ مَعَنَا وَيَعْمَلُونَ مَعَنَا فَيَقُولُ اللهُ تَعَالَىٰ

اذْهَبُوا فَمَنْ وَجَدْتُمْ فِي قَلْبِهِ مِثْقَالَ دِينَارٍ مِنْ إِيمَانٍ فَأَخْرِجُوهُ وَيُحَرِّمُ اللهُ صُوَرَهُمْ عَلَى النَّارِ فَيَأْتُونَهُمْ وَبَعْضُهُمْ قَدْ غَابَ فِي النَّارِ إِلَىٰ قَدَمِهِ وَإِلَىٰ أَنْصَافِ سَاقَيْهِ فَيُخْرِجُونَ مَنْ عَرَفُوا ثُمَّ يَعُودُونَ فَيَقُولُ اذْهَبُوا فَمَنْ وَجَدْتُمْ فِي قَلْبِهِ مِثْقَالَ نِصْفِ دِينَارٍ فَأَخْرِجُوهُ فَيُخْرِجُونَ مَنْ عَرَفُوا ثُمَّ يَعُودُونَ فَيَقُولُ اذْهَبُوا فَمَنْ وَجَدْتُمْ فِي قَلْبِهِ مِثْقَالَ ذَرَّةٍ مِنْ إِيمَانٍ فَأَخْرِجُوهُ فَيُخْرِجُونَ مَنْ عَرَفُوا قَالَ أَبُو سَعِيدٍ فَإِنْ لَمْ تُصَدِّقُونِي فَاقْرَءُوا {إِنَّ اللهَ لاَ يَظْلِمُ مِثْقَالَ ذَرَّةٍ وَإِنْ تَكُ حَسَنَةً يُضَاعِفْهَا} [النساء: ٤٠] فَيَشْفَعُ النَّبِيُّونَ وَالمَلاَئِكَةُ وَالمُؤْمِنُونَ فَيَقُولُ الجَبَّارُ بَقِيَتْ شَفَاعَتِي فَيَقْبِضُ قَبْضَةً مِنَ النَّارِ فَيُخْرِجُ أَقْوَامًا قَدْ امْتُحِشُوا فَيُلْقَوْنَ فِي نَهَرٍ بِأَفْوَاهِ الجَنَّةِ يُقَالُ لَهُ مَاءُ الحَيَاةِ فَيَنْبُتُونَ فِي حَافَتَيْهِ كَمَا تَنْبُتُ الحِبَّةُ فِي حَمِيلِ السَّيْلِ قَدْ رَأَيْتُمُوهَا إِلَىٰ جَانِبِ الصَّخْرَةِ وَإِلَىٰ جَانِبِ الشَّجَرَةِ فَمَا كَانَ إِلَى الشَّمْسِ مِنْهَا كَانَ أَخْضَرَ وَمَا كَانَ مِنْهَا إِلَى الظِّلِّ كَانَ أَبْيَضَ فَيَخْرُجُونَ كَأَنَّهُمُ اللُّؤْلُؤُ فَيُجْعَلُ فِي رِقَابِهِمُ الخَوَاتِيمُ فَيَدْخُلُونَ الجَنَّةَ فَيَقُولُ أَهْلُ الجَنَّةِ هَؤُلاَءِ عُتَقَاءُ الرَّحْمَنِ أَدْخَلَهُمُ الجَنَّةَ بِغَيْرِ عَمَلٍ عَمِلُوهُ وَلاَ خَيْرٍ قَدَّمُوهُ فَيُقَالُ لَهُمْ لَكُمْ مَا رَأَيْتُمْ وَمِثْلَهُ مَعَهُ رَوَاهُ الْبُخَارِيُّ رحمه الله

அபூ ஸயீத் அல்குத்ரீ ரழியல்லாஹு அன்ஹு அறிவிக்கிறார்கள் : நாங்கள், ரஸூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே! மறுமை நாளில் எங்கள் இறைவனை நாங்கள் காண்போமா? என்று கேட்டோம். அதற்கு அவர்கள்,

'(மேகமூட்டமில்லாது) வானம் தெளிவாக இருக்கையில் சூரியனையும் சந்திரனையும் பார்க்க நீங்கள் (முண்டியடித்துக் கொண்டு) சிரமப்படுவீர்களா? என்று கேட்டார்கள். இல்லை என்று நாங்கள் பதிலளித்தோம். இவ்விரண்டையும் பார்க்க நீங்கள் சிரமப்படாததைப் போன்றே அந்த நாளில் உங்களுடைய இறைவனைக் காணவும் நீங்கள் சிரமப்பட மாட்டீர்கள் என்று கூறிவிட்டு (பின்வருமாறு) விளக்கினார்கள். (மறுமை நாளில்) அழைப்பாளர் ஒருவர், ஒவ்வொரு சமுதாயத்தாரும் தாம் வணங்கிக் கொண்டிருந்தவர்களைப் பின்தொடர்ந்து செல்லட்டும் என்று அழைப்புவிடுப்பார். அப்போது சிலுவை வணங்கிகள் தங்கள் சிலுவையுடனும், சிலை வணங்கிகள் தங்கள் சிலைகளுடனும், ஒவ்வொரு (பொய்த்) தெய்வ வழிபாட்டார்கள் தத்தம் தெய்வங்களுடன் செல்வார்கள். முடிவில் அல்லாஹ்வை வணங்கிக்கொண்டு நன்மைகளும் புரிந்து கொண்டிருந்த நல்லவர்கள், அல்லது (அல்லாஹ்வையும் வணங்கிக் கொண்டு பாவங்களும் புரிந்து வந்த) பாவிகள், மேலும் வேதக்காரர்களில் மிஞ்சியவர்கள் மட்டுமே எஞ்சியிருப்பர். பின்னர் நரகம் கொண்டுவரப்பட்டுக் கானலைப் போன்று அவர்களுக்குக் காட்டப்படும். அப்போது யூதர்களிடம், நீங்கள் எதை வணங்கிக் கொண்டிருந்தீர்கள்? என்று கேட்கப்படும் அதற்கு அவர்கள், நாங்கள் அல்லாஹ்வின் மகன் உஸைர் அவர்களை வணங்கிக் கொண்டிருந்தோம் என்று பதிலளிப்பார்கள். அப்போது அவர்களிடம், நீங்கள் பொய்யுரைக்கிறீர்கள். அல்லாஹ்வுக்கு மனைவியோ மக்களோ இருக்கவில்லை என்று சொல்லப்படும். பிறகு அவர்களிடம், இப்போது நீங்கள் என்ன விரும்புகிறீர்கள்? என்று கேட்கப்படும். அதற்கவர்கள், எங்களுக்கு (குடிப்பதற்கு நீர்) புகட்டுவாயாக! என்பார்கள். அப்போது (அவர்களிடம் கானலைப் போன்று நரகம் காட்டப்பட்டு அதில் சென்று தண்ணீர்), குடியுங்கள் என்று கூறப்படும். (அதைக் குடிக்க முனையும்போது) அவர்கள் நரகத்தில் விழுந்து விடுவார்கள். பின்னர் கிறிஸ்தவர்களிடம், நீங்கள் எதை வணங்கிக் கொண்டிருந்தீர்கள்? என்று கேட்கப்படும். அதற்கு அவர்கள், அல்லாஹ்வின் மகன் மஸீஹை (ஈஸாவை) நாங்கள் வணங்கிக் கொண்டிருந்தோம் என்று பதிலளிப்பார்கள். அப்போது அவர்களிடம், நீங்கள் பொய்யுரைக்கிறீர்கள்; அல்லாஹ்வுக்கு

மனைவியோ மக்களோ இருக்கவில்லை என்று கூறப்படும். பிறகு, நீங்கள் என்ன விரும்புகிறீர்கள்? என்று கேட்கப்படும். அதற்கு அவர்கள், நீ எங்களுக்கு (நீர்) புகட்டுவதையே நாங்கள் விரும்புகிறோம் என்று பதிலளிப்பார்கள். அப்போது அவர்களிடம் (கானலைப் போன்று காட்சி தரும் நரகத்தைக் காட்டி அதில் சென்று தண்ணீர்) குடியுங்கள்! என்று கூறப்படும். அப்போது நரகத்தில் அவர்களும் விழுந்து விடுவார்கள்.

இறுதியில் அல்லாஹ்வை வணங்கிக் (கொண்டு நன்மைகளும் புரிந்து) கொண்டிருந்த நல்லோர், அல்லது (அல்லாஹ்வையும் வணங்கிக் கொண்டு பாவங்களும் புரிந்து வந்த) தீயோர் மட்டும் எஞ்சியிருப்பர். அவர்களிடம் மக்கள் (அனைவரும் தத்தம் தெய்வங்களுக்குப் பின்னால்) சென்றார்களே! நீங்கள் மட்டும் ஏன் இங்கேயே இருக்கிறீர்கள்? என்று கேட்கப்படும். அதற்கு அவர்கள், (உலகத்தில்) நாங்கள் (வாழ்க்கையின் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்வதற்காக) இந்த மக்களிடம் அதிக அளவில் தேவையுள்ளவர்களாக இருந்தும் (அவர்கள் வணங்கியதை வணங்காமல்) அவர்களைப் பிரிந்திருந்தோம். (இப்போது மட்டும் அவர்கள் பின்னால் நாங்கள் செல்வோமா?) இங்கு ஓர் அழைப்பாளர், ஒவ்வொரு சமுதாயத்தாரும் (உலக வாழ்வில்) தாம் வணங்கிக் கொண்டிருந்தவர்களுடன் சேர்ந்து கொள்ளட்டும் என்று அழைக்க செவியுற்றோம். நாங்கள் (வணங்கிக் கொண்டிருந்த) எங்கள் இறைவனையே நாங்கள் (இத்தருணத்தில்) எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம் என்று கூறுவார்கள்.

அப்போது அடக்கி ஆளுகின்ற(வனான இறை)வன், அவனை அவர்கள் முதல் முறை பார்த்த உருவம் அல்லாத வேறு ஓர் உருவத்தில் அவர்களிடம் வருவான். இன்னும், நான்தான் உங்கள் இறைவன் என்று கூறுவான். அதற்கு நம்பிக்கையாளர்கள், நீயே எங்கள் இறைவன் என்று சொல்வார்கள். அவனிடம் நபிமார்களைத் தவிர வேறெவரும் பேச மாட்டார்கள். அவனை நீங்கள் அறிந்து கொள்ள உங்களுக்கும் அவனுக்குமிடையே ஏதேனும் ஓர் அடையாளம் உண்டா?' என்று அவன் கேட்பான். அதற்கு இறை நம்பிக்கையாளர்கள், சாக் -

கெண்டைக்கால் என்று கூறுவார்கள். உடனே அல்லாஹ் தனது கெண்டைக் காலை வெளிப்படுத்துவான். இறைநம்பிக்கையாளர்கள் யாவரும் அவனுக்கு சிரம்பணிவார்கள். முகஸ்துதிக்காகவும் பாராட்டுக்காகவும் அல்லாஹ்வுக்கு சிரம்பணிந்தவர்கள் மட்டுமே அப்போது எஞ்சியிருப்பார்கள்; அவர்கள் சிரம்பணியச் செய்ய முற்படுவார்கள். ஆனால், அவர்களின் முதுகு (குனிய முடியாதவாறு) ஒரே பலகையைப் போன்று மாறிவிடும். பிறகு பாலம் கொண்டு வரப்பட்டு, நரகத்தின் மேலே கொண்டுவைக்கப்படும். (இவ்வாறு நபி ﷺ அவர்கள் சொன்னபோது,) நாங்கள், ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களே! அது என்ன பாலம்? என்று கேட்டோம். நபி ﷺ அவர்கள், அது (கால்கள்) வழுக்குமிடம்; சறுக்குமிடம்; அதன் மீது இரும்புக் கொக்கிகளும் அகன்ற நீண்ட முற்களும் இருக்கும். அந்த முட்கள் வளைந்திருக்கும். நஜ்த் பகுதியில் முளைக்கும் ஸஃதான் என்று சொல்லப்படுகின்ற கருவேல மர முற்கள் போன்று இருக்கும் என்றார்கள். (தொடர்ந்து கூறினார்கள்:) இறைநம்பிக்கையாளர் அந்தப் பாலத்தை கண்சிமிட்டலைப் போன்றும், மின்னலைப் போன்றும், காற்றைப் போன்றும், பந்தயக் குதிரைகள் மற்றும் ஒட்டகங்களைப் போன்றும் (விரைவாகக்) கடந்து விடுவார். எந்தக் காயமுமின்றி தப்பிவிடுவோரும் உண்டு. காயத்துடன் தப்புவோரும் உண்டு. மூர்ச்சையாகி நரக நெருப்பில் விழுவோரும் உண்டு. இறுதியில் அவர்களில் கடைசி ஆள் கடுமையாக இழுத்துச் செல்லப்படுவார். பின்னர், தாம் தப்பித்துவிட்டோம் என்பதை இறைநம்பிக்கையாளர்கள் காணும்போது தம் சகோதரர்களுக்காக அடக்கி ஆளுகின்ற (தங்கள் இறை)வனிடம் அன்று அவர்கள் கடுமையாக மன்றாடுவார்கள். அந்த அளவிற்கு (இம்மையில்) உங்களுக்குத் தெளிவாகி விட்ட உரிமைக்காகக் கூட நீங்கள் என்னிடம் வலியுறுத்திக் கேட்டிருக்க மாட்டீர்கள். அப்போது அவர்கள், எங்கள் இறைவா! (இவர்கள்) எங்களுடன் தொழுது கொண்டிருந்தார்கள்; எங்களுடன் நோன்பு நோற்றார்கள்; எங்களுடன் (மற்ற) நல்லறங்கள் புரிந்து கொண்டிருந்தார்கள் (எனவே இவர்களை நீ காப்பாற்றுவாயாக) என்று வேண்டுவார்கள்.

அப்போது அல்லாஹு தஆலா, நீங்கள் சென்று, எவருடைய உள்ளத்தில் ஒரு பொற்காசு (தீனார்) அளவுக்கு ஈமானை காண்கின்றீர்களோ அவர்களை (நரகத்திலிருந்து) வெளியேற்றுங்கள் என்று கூறுவான். அவ்வாறே அவர்களும் (நரகவாசிகளிடம்) செல்வார்கள். அவர்களின் உருவங்களைக் கரிக்கக் கூடாதென நரகத்திற்கு அல்லாஹ் தடை விதித்துவிடுவான். அப்போது (அந்த நரகவாசிகளில்) சிலர் தம் பாதம் நரகத்திற்குள் மறையும் அளவிற்கு, (சிலர்) பாதி கால்கள் மறையும் அளவிற்கு நரகத்திற்குள் கிடப்பார்கள். உடனே அவர்கள் தாங்கள் அறிந்தவர்களை (நரகத்திலிருந்து) வெளியேற்றுவார்கள். பிறகு மீண்டும் (இறைவனிடம்) செல்வார்கள். மீண்டும் அவன் கூறுவான் : எவருடைய உள்ளத்தில் பாதி பொற்காசு அளவுக்கு இறைநம்பிக்கை உள்ளதெனக் காண்கிறீர்களோ அவர்களையும் வெளியேற்றுங்கள். அவ்வாறே அவர்கள் தாங்கள் அறிந்தவர்களை வெளியேற்றிவிட்டு மறுபடியும் (இறைவனிடம்) வருவார்கள். அப்போது அவன், எவருடைய உள்ளத்தில் சிறு கருப்பு எறும்பளவு ஈமான் இருக்க நீங்கள் கண்டீர்களோ அவர்களையும் (நரகத்திலிருந்து) வெளியேற்றுங்கள் என்று சொல்வான். அவ்வாறே அவர்கள் (வந்து) தாம் அறிந்தவர்களை (அதிலிருந்து) வெளியேற்றுவார்கள்.

இதன் அறிவிப்பாளரான அபூ ஸயீத் அல்குத்ரீ ؓ அவர்கள் கூறுகிறார்கள் :

(இதை) நீங்கள் நம்பாவிட்டால்,

﴿إِنَّ اللَّهَ لاَ يَظْلِمُ مِثْقَالَ ذَرَّةٍ وَإِنْ تَكُ حَسَنَةً يُضَاعِفْهَا﴾

பொருள் : நிச்சயமாக அல்லாஹ் எவருக்கும் அணுவளவும் அநீதி இழைக்கமாட்டான். அணுவளவு நன்மை செய்திருந்தாலும் அதை பன்மடங்காக்குவான். (குர்ஆன் 04:40 வது) வசனத்தை ஓதிக்கொள்ளுங்கள்.

فَيَشْفَعُ النَّبِيُّونَ وَالمَلاَئِكَةُ وَالمُؤْمِنُونَ فَيَقُولُ الجَبَّارُ بَقِيَتْ

شَفَاعَتِي فَيَقْبِضُ قَبْضَةً مِنَ النَّارِ فَيُخْرِجُ أَقْوَامًا قَدْ امْتُحِشُوا فَيُلْقَوْنَ فِي نَهَرٍ بِأَفْوَاهِ الجَنَّةِ يُقَالُ لَهُ مَاءُ الحَيَاةِ فَيَنْبُتُونَ فِي حَافَتَيْهِ كَمَا تَنْبُتُ الحِبَّةُ فِي حَمِيلِ السَّيْلِ قَدْ رَأَيْتُمُوهَا إِلَىٰ جَانِبِ الصَّخْرَةِ وَإِلَىٰ جَانِبِ الشَّجَرَةِ فَمَا كَانَ إِلَى الشَّمْسِ مِنْهَا كَانَ أَخْضَرَ وَمَا كَانَ مِنْهَا إِلَى الظِّلِّ كَانَ أَبْيَضَ فَيَخْرُجُونَ كَأَنَّهُمُ اللُّؤْلُؤُ فَيُجْعَلُ فِي رِقَابِهِمُ الخَوَاتِيمُ فَيَدْخُلُونَ الجَنَّةَ فَيَقُولُ أَهْلُ الجَنَّةِ هَؤُلاَءِ عُتَقَاءُ الرَّحْمَنِ أَدْخَلَهُمُ الجَنَّةَ بِغَيْرِ عَمَلٍ عَمِلُوهُ وَلاَ خَيْرٍ قَدَّمُوهُ فَيُقَالُ لَهُمْ لَكُمْ مَا رَأَيْتُمْ وَمِثْلَهُ مَعَهُ

இவ்வாறு நபிமார்கள், மலக்குகள், முஃமின்கள் ஆகியோர் (தத்தமது தகுதிக்கேற்ப) பரிந்துரை செய்வார்கள். அப்போது அடக்கி ஆளுகின்ற (இறை)வன் கூறுவான் : (இனி) எனது பரிந்துரை (மட்டுமே) எஞ்சியிருக்கிறது என்று கூறிவிட்டு, நரகத்திலிருந்து ஒரு கைப்பிடி அளவு மக்களை அள்ளியெடுத்து அவர்களை வெளியேற்றுவான். அவர்கள் கரிந்து போயிருப்பார்கள். எனவே, சொர்க்க வாசலிலுள்ள ஒரு நதியில் அவர்கள் போடப்படுவார்கள். அதற்கு ஜீவ நீர் (மாஉல் ஹயாத்) என்று பெயர். உடனே அவர்கள் சேற்று வெள்ளத்தில் விதைப் பயிர் நதியின் இரண்டு மருங்கிலும் முளைப்பதைப் போன்று முளைத்து (நிறம் மாறி) விடுவார்கள். பாறையில் ஓரத்திலும் மரத்தின் ஓரத்திலும் இந்தப் பயிரை நீங்கள் பார்த்திருப்பீர்கள். அதில் வெயில் பக்கமாக இருப்பது பச்சையாகவும், நிழல் பக்கமாக இருப்பது வெள்ளையாகவும் இருக்கும். ஆக, இவர்கள் (அந்த நதியிலிருந்து) வெளியேறும்போது முத்தைப் போன்று (புதுப் பொலிவுடன்) வெளியேறுவார்கள். அவர்களின் கழுத்தில் (நரகத்திலிருந்து விடுதலை பெற்றவர்கள் என்பதற்கான) முத்திரை பதிக்கப்படும். பிறகு அவர்கள் சொர்க்கத்தினுள் நுழைவார்கள். அப்போது சொர்க்கவாசிகள்

(இவர்களைப் பார்த்து), இவர்கள் உதகாவுர் ரஹ்மான் ரஹ்மானால் விடுதலை செய்யப்பட்டவர்கள்; இவர்கள் எந்த நற்செயலும் புரியாமல், எந்த நன்மையும் ஏற்கெனவே செய்திராமல் அவனே இவர்களைச் சொர்க்கத்தினுள் பிரவேசிக்கச் செய்தான் என்று கூறுவர். பிறகு (அவர்களிடம்) நீங்கள் காண்கிறீர்களே இதுவும் உங்களுக்கு உண்டு; இதைப் போன்று இன்னொரு மடங்கும் உங்களுக்கு உண்டு என்று (நற்செய்தி) சொல்லப்படும்.[37]

**عن أبي بَكْرَةَ ﵁ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ يُحْمَلُ النَّاسُ عَلَى الصِّرَاطِ يَوْمَ الْقِيَامَةِ فَتَقَادَعُ بِهِمْ جَنَبَتَا الصِّرَاطِ تَقَادُعَ الْفَرَاشِ فِي النَّارِ قَالَ فَيُنْجِي اللهُ بِرَحْمَتِهِ مَنْ يَشَاءُ قَالَ ثُمَّ يُؤْذَنُ لِلْمَلَائِكَةِ وَالنَّبِيِّينَ وَالشُّهَدَاءِ أَنْ يَشْفَعُوا فَيَشْفَعُونَ وَيُخْرِجُونَ وَيَشْفَعُونَ وَيُخْرِجُونَ وَيَشْفَعُونَ وَيُخْرِجُونَ وَزَادَ عَفَّانُ مَرَّةً فَقَالَ أَيْضًا وَيَشْفَعُونَ وَيُخْرِجُونَ مَنْ كَانَ فِي قَلْبِهِ مَا يَزِنُ ذَرَّةً مِنْ إِيمَانٍ رَوَاهُ أَحْمَدُ ﵀**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள் : மறுமை நாளில் மக்கள் பாலத்தின் மீது சுமத்தப்படுவார்கள். விட்டில் பூச்சிகள் நெருப்பில் விழுவதைப் போல் பாலத்தின் இரு பக்கங்களும் அவர்களை நரகத்தில் தள்ளும். நபி ﷺ அவர்கள் கூறினார்கள் : அல்லாஹ் தனது கருணையினால் தான் நாடியவர்களை பாதுகாப்பான். மேலும் நபி ﷺ அவர்கள் கூறினார்கள் : பிறகு, மலக்குகள், நபிமார்கள், ஷஹீதுகள் ஆகியோர் பரிந்துரை செய்ய அனுமதி வழங்கப்படும். அவர்கள் சிபாரிசு செய்வார்கள். (நரகத்திலிருந்து அல்லாஹ் நாடிய முஃமின்களை) வெளியேற்றுவார்கள். இன்னும் சிபாரிசு செய்வார்கள். (நரகத்திலிருந்து அல்லாஹ் நாடிய முஃமின்களை) வெளியேற்றுவார்கள். இன்னும் சிபாரிசு செய்வார்கள். (நரகத்திலிருந்து அல்லாஹ் நாடிய முஃமின்களை) வெளியேற்றுவார்கள். இதன் அறிவிப்பாளர்

---

37. அறிவிப்பாளர் : அபூ ஸயீத் ﵁, நூல்: புகாரி, எண் : 7439

அஃப்பான் என்பவர் இன்னொரு முறை (இந்த வாக்கியத்தை) அதிகப்படுத்தி கூறினார். அதாவது, இன்னும் சிபாரிசு செய்வார்கள். (நரகத்திலிருந்து) யாருடைய உள்ளத்தில் ஒரு எறும்பின் எடையளவு ஈமான் இருக்குமோ அவர்களை எல்லாம் வெளியேற்றுவார்கள்.[38]

இதுவரை கூறப்பட்ட ஹதீஸ்கள் மற்றும் விளக்க உரையிலிருந்து நாம் புரியவேண்டிய கருத்துக்களின் சுருக்கத்தைப் பார்ப்போம்.

**சுருக்கம் :**

1. குர்ஆனும் ஹதீஸும் மறுமையில் ஷஃபாஅத் உண்டு என்பதை உறுதி செய்கிறது.

2. பொதுவாக, மலக்குகள், நபிமார்கள், ஷஹீதுகள் சிபாரிசு செய்வார்கள் என்பது நேரடியாக கூறப்பட்டுள்ளது.

3. நபி ﷺ அவர்கள் விசேஷமாக சிபாரிசு செய்வார்கள். படைப்புகள் எல்லோரையும்விட நபி ﷺ அவர்களை அல்லாஹ் ஷஃபாஅத் விஷயத்தில் மிகவும் கண்ணியப்படுத்தி இருக்கின்றான்.

4. மறுமையில் மக்கள் நாம் நமக்காக அல்லாஹ்விடம் சிபாரிசு செய்ய யாராவது ஒருவரிடம் சென்று கூறுவோம் என்று கூறியது, அதற்காக அல்லாஹ்விடம் துஆ கேட்க கூறுவோம்; அவரின் துஆவை அல்லாஹ் ஏற்றுக்கொண்டு நம்மை இந்த கஷ்டத்திலிருந்து விடுவிப்பான் என்று பொருளாகும். ஆகவேதான், மக்கள் நபி ﷺ அவர்களிடம் வந்து கூறியவுடன், நபி ﷺ அவர்கள் அல்லாஹ்விடம் சென்று, சஜ்தாவில் விழுந்து, அவனைப் புகழ்ந்து, துஆ கேட்பார்கள். பிறகு, அல்லாஹ் அவர்களுக்கு அனுமதி அளிப்பான். நீங்கள் (துஆ) கேளுங்கள், நீங்கள் கேட்டது உங்களுக்கு கொடுக்கப்படும். நீங்கள் (உங்களுக்கு என்ன வேண்டும் என்று) சொல்லுங்கள். அது நிறைவேற்றப்படும். நீங்கள் சிபாரிசு செய்யுங்கள். உங்கள் சிபாரிசு ஏற்றுக் கொள்ளப்படும் என்று அல்லாஹ் அவர்களிடம் கூறுவான்.

---

38. அறிவிப்பாளர் : அபூ பக்ரா ؓ, நூல் : அஹ்மது, எண் : 20440

அதன் பின்னர்தான் நபி ﷺ அவர்கள் சிபாரிசு செய்வார்கள். ஆகவே, இதிலிருந்து அல்லாஹ்விடம் மட்டுமே நாம் சிபாரிசை ஆதரவு வைக்க வேண்டும் என்பதை தெளிவாக அறிய முடியும். ஆகவேதான் அல்லாஹ் கேள்வி கணக்கை ஆரம்பித்தவுடன் படைப்புகளில் யாரும் எந்த நபரிடமும் சென்று, எங்களை சொர்க்கத்தில் நுழைக்க சிபாரிசு செய்யுங்கள், அல்லது நரகத்திலிருந்து காப்பாற்ற சிபாரிசு செய்யுங்கள், அல்லது எங்களை சொர்க்கத்தில் சேர்த்துவிடுங்கள், அல்லது எங்களை நரக தண்டனையிலிருந்து காப்பாற்றுங்கள் என்று சொல்ல மாட்டார்கள். அப்படி சொல்லவும் முடியாது. மாறாக, படைப்புகள் எல்லோரும் அல்லாஹ்வின் அருளை மட்டுமே ஆதரவு வைத்து இருப்பார்கள். யாரும் யாரிடமும் தனிப்பட்ட முறையில் சென்று எங்களுக்கு சொர்க்கம் கிடைக்க, நரகத்திலிருந்து பாதுகாப்பு கிடைக்க அல்லாஹ்விடம் சிபாரிசு செய்யுங்கள் என்று கூற மாட்டார்கள். அப்படி கூறவும் முடியாது. இதை சிந்தித்து உணர வேண்டும்.

5. அல்லாஹ் அவனது முஃமினான அடியார்களை நரகத்திலிருந்து வெளியேற்றுவதற்கும் நல்லோரை கண்ணியப்படுத்துவதற்கும் அவன் ஏற்படுத்தி இருக்கின்ற விசேஷமான ஒன்றுதான் ஷஃபாஅத் என்பது. இது அல்லாஹ்வின் ஞானத்தின் அடிப்படையில் அமைந்த ஒரு வழிமுறையாகும்.

சிபாரிசு குறித்து இதுவரை நாம் படித்ததிலிருந்து பல வழிகேடுகளை நாம் அடையாளம் கண்டுக் கொள்ளலாம். அந்த வழிகேடுகளில் சிலவற்றை கீழே பார்ப்போம்.

## வழிகேடுகள் :

1. அல்லாஹ்வும் அவனது ரஸூலும் கூறியதை தனது சிற்றறிவின் புரிதலை வைத்து மறுப்பது.

2. அல்லாஹ்வையும் அவனது செயலையும் மனிதன் வகுத்த தர்க்க ஆதாரங்களில் வைத்து அளந்து பார்ப்பது. பிறகு அறிவு

ஏற்றுக்கொண்டதை ஏற்றுக் கொள்வது, அறிவு மறுப்பதை மறுத்து விடுவது.

3. உலகத்தை வைத்து மறுமையை முடிவு செய்வது. அல்லது மறுமையை வைத்து உலகத்தை முடிவு செய்வது.

4. அமல்கள் செய்யாமல் பிறர் தங்களை காப்பாற்றிவிடுவார் என்று நம்பி அவர்களை வணங்குவது, அவர்களிடம் பிரார்த்தனை செய்வது, அவர்கள் மீது நல்லாதரவு வைப்பது.

5. நான் உங்களுக்கு சிபாரிசு செய்வேன்; எனக்கு நீங்கள் உங்கள் செல்வத்தில் இவ்வளவு கொடுத்துவிடுங்கள்; நீங்கள் எந்த அமலும் செய்யத் தேவை இல்லை; நீங்கள் பாவம் செய்தாலும் அது உங்களை பாதிக்காது; நாங்கள் உங்களுக்காக சிபாரிசு செய்து உங்களை காப்பாற்றி விடுவோம் என்று கூறுபவர்கள் பொய்யர்கள், ஏமாற்றுக்காரர்கள். அவர்களை நம்புவது மாபெரும் வழிகேடாகும்.

6. மறுமை விஷயத்தில் குர்ஆனும் ஹதீஸும் கூறுவதை நம்பிக்கை கொள்ளாமல் அறிவு, தர்க்கம் முடிவு செய்வதை நம்பிக்கைக் கொள்வது.

7. அல்லாஹ் அவனது நல்லடியார்களுக்கு வழங்கிய சிறப்பு கண்ணியமாகிய ஷஃபாஅத்தை மறுப்பது.

8. ஷஃபாஅத்தை அல்லாஹ்வின் நீதிக்கு மாற்றமானது; எனவே ஷஃபாஅத் சம்பந்தமான ஹதீஸ்களை நிராகரிக்க வேண்டும் என்று கூறுவது.

9. மார்க்க விஷயங்களில் குர்ஆன், ஹதீஸுடைய வழி காட்டலை ஏற்றுக் கொள்ளாமல் அறிவை வைத்து நேர்வழியை முடிவு செய்வது, அறிவை வைத்து கொள்கையை முடிவு செய்வது.

10. மார்க்க ஆதாரங்களை விட அறிவுக்கு முதலிடம் கொடுத்து

அறிவு கூறுவதை வைத்துக் கொண்டு மார்க்க ஆதாரங்களில் குதர்க்கம், தர்க்கம் செய்வது.

இன்னும் பல வழிகேடுகள் உள்ளன. அல்லாஹ்வும் ரஸூலும் எதை இருக்கிறது என்று கூறி இருக்கிறார்களோ அதை இருக்கு என்று நம்பவேண்டும். மாறாக யாராவது அதை மறுத்தால் அவர் எவ்வளவுதான் பெரிய அறிவு பேசினாலும் கேட்பதற்கு எவ்வளவு அழகான தர்க்க வாதத்தை முன்வைத்தாலும் அவர் வழிகேடர்தான். அவர் ஷைத்தானின் சிநேகிதன்தான். அவர் நேர்வழியை தவற விட்டவர்தான். அவர் சந்தேக நோயில் சிக்கி, உள்ளம் கோணலான துர்பாக்கியவான் ஆவார்.

அல்லாஹ் நம்மை நேர்வழியில் நிலைத்திருக்க செய்வானாக! உள்ளங்களில் கோணல் ஏற்படுவதிலிருந்து பாதுகாப்பானாக! மறுமையின் சிறிய பெரிய இன்னல்களிலிருந்து பாதுகாப்பானாக! ஆமீன்.

--------------------

وَلَا تُكَفِّرَنَّ أَهْلَ الصَّلَاةِ وَإِنْ عَصَوْا

فَكُلُّهُمْ يَعْصِيْ وَذُو الْعَرْشِ يَفْصَحُ

**பொருள்:**

தொழுகை உடையோரை காஃபிர் என்று நீ திட்டமாக கூறிவிடாதே! அவர்கள் பாவங்கள் செய்தாலும் சரி! அவர்கள் எல்லோரும் பாவங்கள் செய்வார்கள்தான். ஆனால், அர்ஷின் சொந்தக்காரன் மன்னிப்பான்.

**கருத்து :**

தொழுகையை நிலை நிறுத்துகின்ற ஒருவர் பாவம் செய்துவிடுவதால் அவரை காஃபிர் - நிராகரிப்பாளராக ஆகிவிட்டார் என்று முடிவு செய்யக் கூடாது. மனிதர்கள் பாவம் செய்பவர்கள்தான். அல்லாஹ் பாவங்களை மன்னிப்பவனாக இருக்கின்றான். ஆகவே, ஒரு முஸ்லிமை தகுந்த ஆதாரமின்றி இஸ்லாமை விட்டு வெளியேற்றிவிடக் கூடாது.

**விளக்கம் :**

ஆசிரியர் அவர்கள் இங்கு அஹ்லுஸ் ஸுன்னா உடைய ஒரு முக்கியமான கொள்கையை விளக்குகிறார்கள். அதாவது, இஸ்லாமை ஏற்று ஐங்கால தொழுகையை நிறைவேற்றுகின்ற ஒருவர் பாவம் செய்துவிட்டார் என்ற காரணத்திற்காக அவரை நாம் காஃபிர் என்று கூறக்கூடாது.

ஷஹாதாவைக் கூறி, தொழுகையை நிலை நிறுத்தி வருபவர் நம்மை சேர்ந்தவர் ஆவார். ஒரு ஹதீஸில் வருகிறது : யார் நமது தொழுகையை நிறைவேற்றி, நாம் அறுத்த பிராணியை சாப்பிட்டு,

நமது கிப்லாவை முன்னோக்குவாரோ அவர் நம்மை சேர்ந்தவர் ஆவார் என்று. அவருடைய மற்ற காரியங்களின் விசாரணை அல்லாஹ்வை சேர்ந்ததாகும்.[39]

ஆகவே, பெரும் பாவங்கள் செய்வதால் ஈமானில் குறை ஏற்படுமே தவிர ஈமான் முற்றிலுமாக அவரை விட்டு வெளியேறி விடாது. அவர் முஃமினாகத்தான் இருப்பார். ஆனால், **ناقص الإيمان** நாகிஸூல் ஈமான் -குறைவான ஈமான் உள்ளவர் என்று கூறப்படும்.

நபி ﷺ அவர்களின் காலத்தில் பெரும்பாவங்கள் நிகழ்ந்தன. நபி ﷺ அவர்கள் அதற்கு தண்டனையை நிறைவேற்றினார்கள். ஆனால், ஒருவர் பெரும்பாவம் செய்த பின்னர் நீ காஃபிராக ஆகிவிட்டாய், நீ திரும்ப ஷஹாதா கூறி இஸ்லாமிற்குள் வா என்று கூறவில்லை.

சில சூழ்நிலையில் முஸ்லிம்கள் மூலம் பெரும்பாவம் நிகழ்கின்ற சூழ்நிலைகளை அல்லாஹ் கூறி, அதற்குரிய தீர்வையும் அல்லாஹ் கூறுகின்றான். ஆனால், அந்த இடங்களில் எங்கும் பெரும் பாவம் செய்த அவர்கள் இஸ்லாமை விட்டு வெளியேறி விட்டதாக அல்லாஹ் கூறவில்லை.

ஒருவர், குஃப்ர் -நிராகரிப்பை ஏற்படுத்துகின்ற செயலை செய்யாத வரை அவரை காஃபிர் என்று கூறக்கூடாது. தகுந்த காரணம் இல்லாமல் ஒருவரை காஃபிர் என்று கூறினால் கூறியவருக்கு அந்த வார்த்தை திரும்பி விடும்.

இத்தகைய கூற்று காரிஜிய்யா என்ற வழிகெட்ட கூட்டத்தின் கொள்கையாகும்.

பாவம் செய்வதால் ஒருவர் இஸ்லாமை விட்டு வெளியேறி விடமாட்டார் என்பதை உறுதி செய்கின்ற வசனங்களையும் ஹதீஸ்களையும் பார்ப்போம்.

﴿يَاأَيُّهَا الَّذِينَ آمَنُوا كُتِبَ عَلَيْكُمُ الْقِصَاصُ فِي الْقَتْلَى الْحُرُّ بِالْحُرِّ

39. அறிவிப்பாளர் : அனஸ் ؓ, நூல் : புகாரி, எண் : 378

وَالْعَبْدُ بِالْعَبْدِ وَالْأُنْثَىٰ بِالْأُنْثَىٰ فَمَنْ عُفِيَ لَهُ مِنْ أَخِيهِ شَيْءٌ فَاتِّبَاعٌ بِالْمَعْرُوفِ وَأَدَاءٌ إِلَيْهِ بِإِحْسَانٍ ذَٰلِكَ تَخْفِيفٌ مِنْ رَبِّكُمْ وَرَحْمَةٌ فَمَنِ اعْتَدَىٰ بَعْدَ ذَٰلِكَ فَلَهُ عَذَابٌ أَلِيمٌ۝﴾

பொருள் : நம்பிக்கையாளர்களே! கொலை செய்யப்பட்டவர்களுக்காக பழிவாங்குவது உங்கள்மீது கடமையாக்கப்பட்டுள்ளது. (ஆகவே, கொலைசெய்யப்பட்டவன்) சுதந்திரமானவனாயின் (அவனை கொலை செய்த) சுதந்திரமானவனையே, (கொலை செய்யப்பட்டவன்) அடிமையாயின் (அவனை கொலை செய்த அந்த) அடிமையையே, (கொலை செய்யப்பட்டவள்) பெண்ணாயின் (கொலை செய்த அந்தப்) பெண்ணையே நீங்கள் கொலை செய்துவிடுங்கள். (ஆயினும், பழிவாங்கும் விஷயத்தில்) ஒரு சிறிதேனும் அ(க்கொலையுண்ட) வனுடைய சகோதரரால் மன்னிக்கப்பட்டுவிட்டால், மிக்க கண்ணியமான முறையைப் பின்பற்றி (அவனைக் கொலை செய்யாது விட்டு) விடவேண்டும். (பழிவாங்குவதற்குப் பதிலாகக் கொலையாளி ஒரு தொகையைத் தருவதாக ஒப்புக் கொண்டிருந்தால், அந்த நஷ்டஈட்டைத்) தயக்கமின்றி நன்றியோடு அவன் செலுத்திவிட வேண்டும். இ(வ்வாறு நஷ்டஈட்டை அனுமதித்திருப்ப)து உங்கள் இறைவனுடைய சலுகையும், அருளுமாகும். இ(வ்வாறு நஷ்ட ஈட்டைப் பெற்றுக் கொண்ட)தற்குப் பின் எவரேனும் வரம்பு மீறி (நஷ்டஈடு கொடுத்த கொலையாளியைத் துன்புறுத்தி)னால் அவனுக்கு (மறுமையில்) மிக்க துன்புறுத்தும் வேதனையுண்டு.

(அல்குர்ஆன் 2 : 178)

﴿وَإِنْ طَائِفَتَانِ مِنَ الْمُؤْمِنِينَ اقْتَتَلُوا فَأَصْلِحُوا بَيْنَهُمَا فَإِنْ بَغَتْ إِحْدَاهُمَا عَلَى الْأُخْرَىٰ فَقَاتِلُوا الَّتِي تَبْغِي حَتَّىٰ تَفِيءَ إِلَىٰ أَمْرِ اللهِ فَإِنْ فَاءَتْ فَأَصْلِحُوا بَيْنَهُمَا بِالْعَدْلِ وَأَقْسِطُوا إِنَّ اللهَ يُحِبُّ الْمُقْسِطِينَ۝ إِنَّمَا الْمُؤْمِنُونَ إِخْوَةٌ فَأَصْلِحُوا بَيْنَ

﴿أَخَوَيْكُمْ وَاتَّقُوا اللّٰهَ لَعَلَّكُمْ تُرْحَمُونَ۝﴾

பொருள் : நம்பிக்கையாளர்களிலுள்ள இரு வகுப்பார் தங்களுக்குள் சச்சரவு செய்து கொண்டால், அவர்களை சமாதானப்படுத்தி விடுங்கள். அவர்களில் ஒரு வகுப்பார், மற்றொரு வகுப்பாரின் மீது வரம்பு மீறி அநியாயம் செய்தால், அநியாயம் செய்தவர்கள் அல்லாஹ்வுடைய கட்டளையின் பக்கம் வரும் வரை, அவர்களிடம் நீங்கள் போர் செய்யுங்கள். அவர்கள் (அல்லாஹ்வின் கட்டளையின் பக்கம்) திரும்பிவிட்டால், நியாயமான முறையில் அவ்விரு வகுப்பார்களுக்கிடையே சமாதானம் செய்து, நீதமாகத் தீர்ப்பளியுங்கள். நிச்சயமாக அல்லாஹ் நீதி செய்பவர்களை நேசிக்கிறான். நிச்சயமாக நம்பிக்கையாளர்கள் அனைவரும் சகோதரர்களே! ஆகவே, உங்கள் சகோதரர்களுக்கிடையில் ஒழுங்கை(யும் சமாதானத்தையும்) நிலை நிறுத்துங்கள். (இதில்) அல்லாஹ்வுக்குப் பயந்து நடங்கள். (இதன் காரணமாக) அவனுடைய அருளை நீங்கள் அடைவீர்கள்.

(அல்குர்ஆன் 49 : 9-10)

**عَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ أَيُّمَا رَجُلٍ قَالَ لِأَخِيهِ كَافِرٌ فَقَدْ بَاءَ بِهَا أَحَدُهُمَا**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள் : யார் ஒரு மனிதர் தனது சகோதரனைப் பார்த்து காஃபிர் என்று கூறுவாரோ அவர்களில் ஒருவர் அந்த வார்த்தையை ஏற்றுக் கொண்டவராக ஆகிவிடுவார்.[40]

**عَنْ ثَابِتِ بْنِ الضَّحَّاكِ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ وَمَنْ قَذَفَ مُؤْمِنًا بِكُفْرٍ فَهُوَ كَقَاتِلِهِ**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள் : யார் ஒருவர் ஒரு முஃமின் மீது

40. அறிவிப்பாளர் : இப்னு உமர் رضي الله عنه, நூல் : திர்மிதி, எண் : 2637, தரம் : ஸஹீஹ் -அல்பானி

குஃப்ர் -நிராகரிப்புடைய பழி சுமத்துவாரோ அவர் அவரை கொலை செய்தவரைப் போல் ஆவார்.[41]

இப்போது பாவங்களை குறித்து சில விளக்கத்தை பார்ப்போம்.

இஸ்லாமிய மார்க்கத்தில் பாவங்கள் பல வகைகளாக பிரிக்கப்பட்டுள்ளன.

1. சிறு பாவங்கள்.
2. பெரும் பாவங்கள்.
3. பித்அத் -அனாச்சாரங்கள்
4. குஃப்ர் -நிராகரிப்பு, அல்லது ஷிர்க் -இணைவைத்தல், அல்லது நிஃபாக் -நயவஞ்சகம், அல்லது இர்திதாத் -மதம் மாறுவதை ஏற்படுத்துகின்ற பாவங்கள்.

மேற்கூறப்பட்ட முதல் மூன்று வகை பாவங்களை செய்வதால் ஒருவர் இஸ்லாமை விட்டு வெளியேறி விடமாட்டார்.

எந்த செயல்களை நான்காவது வகையில் அறிஞர்கள் சேர்த்திருக்கின்றார்களோ அவற்றில் ஒன்றை ஒருவர், அறிந்த நிலையில்; வேண்டுமென்றே; சுய விருப்பத்தோடு; யாருடைய நிர்ப்பந்தமின்றி செய்தால் அது குஃப்ரை ஏற்படுத்தி விடும்.

குஃப்ரான செயலை செய்த நபரை காஃபிர் என்று முடிவு செய்வது, தீர்ப்புக் கூறுவது பெரிய அறிஞர்களின் வேலையாகும்.

நமது மூத்த மார்க்க அறிஞர்கள் இது குறித்து மிகுந்த பயத்தோடு இருந்திருக்கின்றார்கள்.

சிறு பாவம் என்றால், உதாரணத்திற்கு பெரும் பாவத்திற்கு முன்னோடியாக இருக்கின்ற செயல்களை கூறலாம். இச்சையுடன் அன்னியப் பெண்ணைப் பார்ப்பது, அவளுடன் பேசுவது போன்று.

41. அறிவிப்பாளர் : ஸாபித் இப்னு அழ்ழஹ்ஹாக் ﵁, நூல் : திர்மிதி, எண் : 2636, தரம் : ஸஹீஹ் -அல்பானி.

இது விபச்சாரம் என்ற பெரும் பாவத்திற்கு இழுத்துச் செல்லக் கூடியதாக இருக்கிறது.

பெரும் பாவம் என்பது எந்த குற்றத்திற்கு இம்மை, மறுமை இரண்டிலும் அல்லது மறுமையில் மட்டும் தண்டனை உண்டு என்று எச்சரிக்கப் பட்டுள்ளதோ, அல்லது அல்லாஹ்வின் கோபம் மற்றும் சாபத்தைக் கொண்டு எச்சரிக்கப்பட்டதோ அவை அனைத்தும் ஆகும். முதலாவது வகைக்கு உதாரணம் : விபச்சாரம் செய்வது, கொலை செய்வது, திருடுவது. இன்னும் இவைப் போல உள்ள குற்றங்கள். இரண்டாவது வகைக்கு உதாரணம் : உறவுகளை முறிப்பது, கோள் சொல்வது, புறம் பேசுவது இன்னும் இவைப் போன்ற பாவங்கள்.

சிறுபாவம், பெரும்பாவம் குறித்து இன்னும் பல விளக்கங்களை அறிஞர்கள் கூறி இருக்கின்றார்கள். பல இமாம்கள் பெரும்பாவங்களை விளக்கி தனி நூல்களை எழுதி இருக்கிறார்கள். கண்டிப்பாக அவற்றை படித்தறிய வேண்டும். பாவம் எது என்று அறியவில்லை என்றால் அதிலிருந்து நாம் எப்படி விலக முடியும்?

பித்அத் என்பது நபி ﷺ அவர்கள் செய்து காட்டாத, நபித்தோழர்கள் செய்து காட்டாத செயல்கள் ஆகும். மக்கள் அவற்றை நன்மையை நாடி அவை நன்மை என்று கருதி செய்வார்கள். இத்தகைய காரியங்களை பித்அத் என்று கூறப்படும். உதாரணமாக இன்று மக்களுக்கு மத்தியில் மார்க்கத்தின் பெயரால் பரவி இருக்கின்ற பல அமல்களை கூறலாம். கத்தம், பாத்திஹா செய்வது, மீலாது கொண்டாடுவது, அதானுக்கு முன் ஸலவாத் ஓதுவது, இன்னும் நாள்களை, நேரங்களை குறிப்பிட்டு ஒரு ஒரு அமல்களை செய்வது. இவை எல்லாம் பித்அத்துகளில் அடங்கும்.

குஃப்ரை ஏற்படுத்துகின்ற செயல்களை கொள்கை விளக்க பெரிய நூல்களில் படித்து அறியவும்.

சிறு பாவங்களை அல்லாஹ் தனது கருணையாலும் முஃமின்கள் செய்கின்ற நன்மைகளாலும் மன்னித்து விடுகிறான்.

பெரும் பாவங்களை பொறுத்தவரை அவற்றுக்காக நாம்

அல்லாஹ்விடம் தனியாக தவ்பா மன்னிப்பு கேட்க வேண்டும். இல்லை என்றால் அதற்கு மறுமையில் தண்டனை கிடைக்கும். அல்லாஹ் அவனது அருளால் மன்னித்தாலே தவிர.

**தவ்பாவிற்கு சில நிபந்தனைகள் உள்ளன.**

1. தான் செய்த பாவத்தை நினைத்து வருந்த வேண்டும்.
2. இனி செய்ய மாட்டேன் என்று உறுதி எடுக்க வேண்டும்.
3. அல்லாஹ்விடம் அதற்காக மன்னிப்பு கேட்க வேண்டும்.
4. அந்த பாவம் அடியார்களுடைய உரிமை சம்பந்தப்பட்டதாக இருந்தால் அவர்களிடமும் மன்னிப்பு கேட்க வேண்டும். அவர்களின் பொருள் சம்பந்தப்பட்டதாக இருந்தால் அதை அவர்களிடம் திருப்பிக் கொடுக்க வேண்டும்.

இவற்றின் மூலம்தான் பாவமன்னிப்பு தேடுதல் பூர்த்தியாகும்.

ஒருவர் அல்லாஹ்வின் கருணையை எப்போதும் ஆசை வைக்க வேண்டும். அவனது தண்டனையை பயப்பட வேண்டும். ஒருபோதும் நிராசை ஆகிவிடக்கூடாது. அல்லாஹ்வின் கருணையிலிருந்தும் மன்னிப்பிலிருந்தும் நிராசை ஆவது குஃப்ர் ஆகும்.

இனி, மேற்கூறப்பட்ட விஷயங்களுக்கான ஆதாரங்களைப் பார்ப்போம்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான் :

﴿إِنَّ اللَّهَ غَفُورٌ رَحِيمٌ﴾

பொருள் : நிச்சயமாக அல்லாஹ் மிகவும் மன்னிப்பவன், மிக்க கருணையுடையவன். (அல்குர்ஆன் 2 : 173)

﴿إِنَّهُ هُوَ الْغَفُورُ الرَّحِيمُ﴾

பொருள் : நிச்சயமாக அவன் மிக மன்னிப்பவன், மிக்க

கருணையுடையவன் ஆவான் என்று கூறினார்.

(அல்குர்ஆன் 12 : 98)

﴿نَبِّئْ عِبَادِي أَنِّي أَنَا الْغَفُورُ الرَّحِيمُ ○ وَأَنَّ عَذَابِي هُوَ الْعَذَابُ الْأَلِيمُ○﴾

பொருள் : (நபியே!) நீர் என் அடியார்களுக்கு அறிவிப்பீராக : நிச்சயமாக நான் மிக்க மன்னிப்பவன், மிகக் கருணையுடையவன் ஆவேன். இன்னும் நிச்சயமாக என் வேதனைதான் மிக்க கொடிய வேதனை. (அல்குர்ஆன் 15 : 49-50)

﴿يَغْفِرُ لِمَنْ يَشَاءُ وَيُعَذِّبُ مَنْ يَشَاءُ وَاللَّهُ غَفُورٌ رَحِيمٌ○﴾

பொருள் : அவன் விரும்பியவர்களை மன்னிப்பான்; அவன் விரும்பியவர்களைத் தண்டிப்பான். ஆனால், அல்லாஹ் மிக மன்னிப்பவன் மகா கருணையாளன் ஆவான்.

(அல்குர்ஆன் 3 : 129)

﴿وَالَّذِينَ إِذَا فَعَلُوا فَاحِشَةً أَوْ ظَلَمُوا أَنْفُسَهُمْ ذَكَرُوا اللَّهَ فَاسْتَغْفَرُوا لِذُنُوبِهِمْ وَمَنْ يَغْفِرُ الذُّنُوبَ إِلَّا اللَّهُ وَلَمْ يُصِرُّوا عَلَىٰ مَا فَعَلُوا وَهُمْ يَعْلَمُونَ ○ أُولَٰئِكَ جَزَاؤُهُمْ مَغْفِرَةٌ مِنْ رَبِّهِمْ وَجَنَّاتٌ تَجْرِي مِنْ تَحْتِهَا الْأَنْهَارُ خَالِدِينَ فِيهَا وَنِعْمَ أَجْرُ الْعَامِلِينَ○﴾

பொருள் : இன்னும், அவர்கள் ஒரு மானக்கேடான காரியத்தைச் செய்து விட்டாலும் அல்லது தங்களுக்குத் தாங்களே தீங்கிழைத்துக் கொண்டாலும் உடனே அல்லாஹ்வை நினைத்து (அவனிடமே) தங்கள் பாவமன்னிப்பைத் தேடுவார்கள். (அல்லாஹ்வும் அவர்களை மன்னித்து விடுவான்.) அல்லாஹ்வைத் தவிர (இவர்களின்) குற்றங்களை மன்னிப்பவன் யார்? அவர்கள் செய்த

(தவறான) காரியத்தை (தவறென்று) அவர்கள் அறிந்து கொண்டால் அதில் நிலைத்திருக்கவும் மாட்டார்கள். (உடனே அதில் இருந்து விலகி விடுவார்கள்.) இவர்களுக்குப் பிரதிபலன், அவர்களின் இறைவனுடைய மன்னிப்பும், நீரருவிகள் தொடர்ந்து ஓடிக் கொண்டிருக்கும் சொர்க்கங்களும் ஆகும். அவர்கள் அங்கு என்றென்றும் தங்கிவிடுவார்கள். நன்மை செய்தவர்களின் கூலியும் நன்றே! (அல்குர்ஆன் 3 : 135-136)

﴿إِنْ تَجْتَنِبُوا كَبَائِرَ مَا تُنْهَوْنَ عَنْهُ نُكَفِّرْ عَنْكُمْ سَيِّئَاتِكُمْ وَنُدْخِلْكُمْ مُدْخَلًا كَرِيمًا﴾

பொருள் : உங்களுக்கு விலக்கப்பட்ட பெரும் பாவமான காரியங்களில் இருந்து நீங்கள் விலகிக்கொண்டால், உங்கள் (மற்ற) சிறிய பாவங்களுக்கு (அதை) நாம் பரிகாரமாக்கி உங்களை (மிக்க) கண்ணியமான இடங்களிலும் நுழைவிப்போம்.

(அல்குர்ஆன் 4 : 31)

﴿وَالَّذِينَ يَجْتَنِبُونَ كَبَائِرَ الْإِثْمِ وَالْفَوَاحِشَ وَإِذَا مَا غَضِبُوا هُمْ يَغْفِرُونَ﴾

பொருள் : (அல்லாஹ்வை நம்பிய) அவர்கள் பெரும்பாவமான காரியங்களையும், மானக்கேடான விஷயங்களையும் விட்டு விலகி (இருப்பதுடன், பிறரின் தகாத செயல்களால்) கோபமடையும் சமயத்தில் (கோபமூட்டியவர்களை) மன்னித்து விடுவார்கள்.

(அல்குர்ஆன் 42 : 37)

﴿الَّذِينَ يَجْتَنِبُونَ كَبَائِرَ الْإِثْمِ وَالْفَوَاحِشَ إِلَّا اللَّمَمَ إِنَّ رَبَّكَ وَاسِعُ الْمَغْفِرَةِ﴾

பொருள் : அவர்கள் (ஏதும் தவறாக ஏற்பட்டுவிடும்)

அற்பமான பாவங்களைத் தவிர, மற்ற பெரும்பாவங்களிலிருந்தும், மானக்கேடான விஷயங்களில் இருந்தும் விலகியிருப்பார்கள். நிச்சயமாக உமது இறைவன் மன்னிப்பதில் மிக்க தாராளமானவன். (அல்குர்ஆன் 53 : 32)

﴿قُلْ يَاعِبَادِيَ الَّذِينَ أَسْرَفُوا عَلَىٰ أَنْفُسِهِمْ لَا تَقْنَطُوا مِنْ رَحْمَةِ اللَّهِ إِنَّ اللَّهَ يَغْفِرُ الذُّنُوبَ جَمِيعًا إِنَّهُ هُوَ الْغَفُورُ الرَّحِيمُ۝﴾

பொருள் : (நபியே!) கூறுவீராக : எனது அடியார்களே! (உங்களில்) எவரும் வரம்பு மீறி தமக்குத்தாமே தீங்கிழைத்துக் கொண்டபோதிலும், அல்லாஹ்வின் அருளைப் பற்றி நீங்கள் நம்பிக்கை இழந்துவிட வேண்டாம். (நீங்கள் பாவத்திலிருந்து விலகி, மனம் வருந்தி மன்னிப்புக் கோரினால்) நிச்சயமாக அல்லாஹ் (உங்கள்) பாவங்கள் அனைத்தையும் மன்னித்து விடுவான். ஏனென்றால், நிச்சயமாக அவன்தான் மிக்க மன்னிப்பவன், மகா கருணை உடையவன் ஆவான். (அல்குர்ஆன் 39 : 53)

﴿وَلَا تَيْأَسُوا مِنْ رَوْحِ اللَّهِ إِنَّهُ لَا يَيْأَسُ مِنْ رَوْحِ اللَّهِ إِلَّا الْقَوْمُ الْكَافِرُونَ۝﴾

பொருள் : அல்லாஹ்வின் அருளைப்பற்றி நீங்கள் நம்பிக்கை இழந்து விடாதீர்கள்; நிச்சயமாக (நன்றிகெட்ட) நம்பிக்கையற்றவர்களைத் தவிர (மற்றெவரும்) அல்லாஹ்வின் அருளில் நம்பிக்கை இழந்துவிட மாட்டார்கள். (அல்குர்ஆன் 12 : 87)

﴿وَأَقِمِ الصَّلَاةَ طَرَفَيِ النَّهَارِ وَزُلَفًا مِنَ اللَّيْلِ إِنَّ الْحَسَنَاتِ يُذْهِبْنَ السَّيِّئَاتِ ذَٰلِكَ ذِكْرَىٰ لِلذَّاكِرِينَ۝﴾

பொருள் : பகலில் இரு முனை(களாகிய காலை, மாலை)களிலும், இரவில் ஒரு பாகத்திலும், நீர் (தவறாது) தொழுது வருவீராக.

நிச்சயமாக நன்மைகள் பாவங்களைப் போக்கிவிடும். இறைவனைத் துதி செய்து புகழ்பவர்களுக்கு இது ஒரு நினைவூட்டுதலாகும்.

(அல்குர்ஆன் 11 : 114)

﴿يَاأَيُّهَا الَّذِينَ آمَنُوا تُوبُوا إِلَى اللهِ تَوْبَةً نَصُوحًا عَسَىٰ رَبُّكُمْ أَنْ يُكَفِّرَ عَنْكُمْ سَيِّئَاتِكُمْ وَيُدْخِلَكُمْ جَنَّاتٍ تَجْرِي مِنْ تَحْتِهَا الْأَنْهَارُ○﴾

பொருள் : நம்பிக்கையாளர்களே! நீங்கள் கலப்பற்ற மனதுடன் (பாவத்திலிருந்து விலகி) அல்லாஹ்வின் பக்கம் திரும்புங்கள். உங்கள் இறைவனோ அதை உங்கள் பாவங்களுக்குப் பரிகாரமாக்கி, (மன்னித்து) சொர்க்கங்களிலும் உங்களைப் புகுத்திவிடுவான். அதில் தொடர்ந்து நீரருவிகள் ஓடிக் கொண்டிருக்கும்.

(அல்குர்ஆன் 66 : 8)

﴿وَتُوبُوا إِلَى اللهِ جَمِيعًا أَيُّهَ الْمُؤْمِنُونَ لَعَلَّكُمْ تُفْلِحُونَ○﴾

பொருள் : நம்பிக்கையாளர்களே! (இதில் எதிலும் உங்களால் தவறு ஏற்பட்டு விட்டால்) நீங்கள் வெற்றிபெறும் பொருட்டு பாவமன்னிப்பைக் கோரி அல்லாஹ்வின் பக்கமே (உங்கள் மனதால்) திரும்புங்கள். (அல்குர்ஆன் 24 : 31)

﴿إِنَّ الَّذِينَ هُمْ مِنْ خَشْيَةِ رَبِّهِمْ مُشْفِقُونَ ○ وَالَّذِينَ هُمْ بِآيَاتِ رَبِّهِمْ يُؤْمِنُونَ ○ وَالَّذِينَ هُمْ بِرَبِّهِمْ لَا يُشْرِكُونَ ○ وَالَّذِينَ يُؤْتُونَ مَا آتَوْا وَقُلُوبُهُمْ وَجِلَةٌ أَنَّهُمْ إِلَىٰ رَبِّهِمْ رَاجِعُونَ ○ أُولَٰئِكَ يُسَارِعُونَ فِي الْخَيْرَاتِ وَهُمْ لَهَا سَابِقُونَ○﴾

பொருள் : நிச்சயமாக எவர்கள் தங்கள் இறைவனுக்குப் பயந்து நடுங்கிக் கொண்டிருக்கிறார்களோ அவர்களும், எவர்கள் தங்கள்

இறைவனின் வசனங்களை மெய்யாகவே நம்பிக்கைகொள்கிறார்களோ அவர்களும், எவர்கள் தங்கள் இறைவனுக்கு எவரையும் இணை ஆக்காமல் இருக்கின்றனரோ அவர்களும், எவர்கள் தங்களுக்குச் சாத்தியமான வரை தானம் கொடுப்பதுடன் அவர்களுடைய உள்ளங்கள் நிச்சயமாக தங்கள் இறைவனிடம் செல்வோம் என்று பயந்து கொண்டிருக்கின்றனவோ அவர்களும், ஆகிய இவர்கள்தான் நன்மையான காரியங்களில் விரைந்து செல்கிறவர்கள். மேலும், அவர்கள் அவற்றை செய்வதில் ஒருவரை ஒருவர் முந்திக் கொள்கின்றனர். (அல்குர்ஆன் 23 : 57-61)

﴿الَّذِينَ يَخْشَوْنَ رَبَّهُمْ بِالْغَيْبِ وَهُمْ مِنَ السَّاعَةِ مُشْفِقُونَ ○﴾

பொருள் : (இறையச்சமுடையவர்கள்) தங்கள் இறைவனை தங்கள் கண்ணால் பார்க்காவிடினும் அவனுக்குப் பயப்படுவார்கள். இன்னும், மறுமையைப் பற்றியும் அவர்கள் (எந்நேரமும் பயந்து) நடுங்கிக் கொண்டிருப்பார்கள். (அல்குர்ஆன் 21 : 49)

﴿وَالَّذِينَ يُصَدِّقُونَ بِيَوْمِ الدِّينِ ○ وَالَّذِينَ هُمْ مِنْ عَذَابِ رَبِّهِمْ مُشْفِقُونَ ○ إِنَّ عَذَابَ رَبِّهِمْ غَيْرُ مَأْمُونٍ ○﴾

பொருள் : கூலி கொடுக்கும் நாளையும் அவர்கள் உண்மை என்றே நம்புகின்றனர். (இவ்வாறிருந்தும்) அவர்கள் தங்கள் இறைவனின் வேதனைக்குப் பயந்து கொண்டே இருப்பார்கள். (ஏனென்றால்,) நிச்சயமாகத் தங்கள் இறைவனின் வேதனை அச்சமற்றிருக்கக் கூடியதல்ல. (அல்குர்ஆன் 70 : 26-28)

**உளூவின் சிறப்புகள் ஹதீஸ்**

عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ إِذَا تَوَضَّأَ الْعَبْدُ الْمُسْلِمُ أَوِ الْمُؤْمِنُ فَغَسَلَ وَجْهَهُ خَرَجَ مِنْ وَجْهِهِ كُلُّ خَطِيئَةٍ نَظَرَ إِلَيْهَا بِعَيْنَيْهِ مَعَ

الْمَاءِ أَوْ مَعَ آخِرِ قَطْرِ الْمَاءِ فَإِذَا غَسَلَ يَدَيْهِ خَرَجَ مِنْ يَدَيْهِ كُلُّ خَطِيئَةٍ كَانَ بَطَشَتْهَا يَدَاهُ مَعَ الْمَاءِ أَوْ مَعَ آخِرِ قَطْرِ الْمَاءِ فَإِذَا غَسَلَ رِجْلَيْهِ خَرَجَتْ كُلُّ خَطِيئَةٍ مَشَتْهَا رِجْلَاهُ مَعَ الْمَاءِ أَوْ مَعَ آخِرِ قَطْرِ الْمَاءِ حَتَّىٰ يَخْرُجَ نَقِيًّا مِنَ الذُّنُوبِ رَوَاهُ مُسْلِمٌ ﵀

அபூ ஹுரைரா ؓ அவர்கள் அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறியதாக அறிவிக்கின்றார்கள் : ஒரு முஸ்லிமான அல்லது முஃமினான அடியார் உளூ செய்யும்போது முகத்தைக் கழுவினால், கண்களால் பார்த்துச் செய்த பாவங்கள் அனைத்தும் (முகத்தைக் கழுவிய) நீருடன் அல்லது நீரின் கடைசித் துளியுடன் முகத்திலிருந்து வெளியேறி விடுகின்றன. அவர் கைகளைக் கழுவும்போது கைகளால் செய்திருந்த பாவங்கள் அனைத்தும் (கைகளைக் கழுவிய) நீருடன் அல்லது நீரின் கடைசித் துளியுடன் வெளியேறி விடுகின்றன. அவர் கால்களைக் கழுவும்போது, கால்களால் நடந்து செய்த பாவங்கள் அனைத்தும் (கால்களைக் கழுவிய) நீருடன் அல்லது நீரின் கடைசித் துளியுடன் வெளியேறி விடுகின்றன. இறுதியில், அவர் பாவங்களிலிருந்து தூய்மை அடைந்தவராக (அந்த இடத்திலிருந்து) செல்கிறார்.[42]

### தொழுகையின் சிறப்புகள் ஹதீஸ்

عَنْ عَبْدِ اللهِ ؓ قَالَ سَأَلْتُ النَّبِيَّ ﷺ أَيُّ العَمَلِ أَحَبُّ إِلَى اللهِ قَالَ الصَّلَاةُ عَلَىٰ وَقْتِهَا قَالَ ثُمَّ أَيٌّ قَالَ بِرُّ الوَالِدَيْنِ قَالَ ثُمَّ أَيٌّ قَالَ الجِهَادُ فِي سَبِيلِ اللهِ رَوَاهُ الْبُخَارِيُّ ﵀

அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் ؓ அறிவிக்கின்றார்கள்: அல்லாஹ்வுக்கு மிகவும் விருப்பமான செயல் எது? என்று நபி ﷺ

42. அறிவிப்பாளர் : அபூ ஹுரைரா ؓ நூல் : ஸஹீஹ் முஸ்லிம், எண் 412.

அவர்களிடம் நான் கேட்டபோது, தொழுகையை அதற்குரிய நேரத்தில் தொழுவதாகும் என்று பதில் கூறினார்கள். அதற்கு அடுத்து எது? என்றேன். பெற்றோருக்கு நன்மை செய்தல் என்றார்கள். அதற்கு அடுத்து எது? என்றேன். அல்லாஹ்வின் பாதையில் போர் புரிதல் என்றார்கள்.[43]

**عن أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ سَمِعْتُ النَّبِيَّ ﷺ يَقُولُ مَنْ حَجَّ لِلّٰهِ فَلَمْ يَرْفُثْ وَلَمْ يَفْسُقْ رَجَعَ كَيَوْمِ وَلَدَتْهُ أُمُّهُ رَوَاهُ الْبُخَارِيُّ ﵀**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள் : யார் அல்லாஹ்விற்காக ஹஜ் செய்து, (இஹ்ராமுடைய நிலையில் மனைவியுடன்) உறவு கொள்ளாமல், பாவம் செய்யாமல் இருந்தாரோ அவர் தனது தாய் அவரை பெற்றெடுத்த நாளில் இருந்ததைப் போன்று ஆகிவிடுவார்.[44]

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ كَانَ يَقُولُ الصَّلَوَاتُ الْخَمْسُ وَالْجُمْعَةُ إِلَى الْجُمْعَةِ وَرَمَضَانُ إِلَى رَمَضَانَ مُكَفِّرَاتٌ مَا بَيْنَهُنَّ إِذَا اجْتَنَبَ الْكَبَائِرَ رَوَاهُ مُسْلِمٌ ﵀**

ஐந்து நேரத் தொழுகைகள், ஜுமுஆ தொழுகை (அடுத்த) ஜுமுஆ தொழுகை வரை, ரமழான் (அடுத்த) ரமழான் வரை, இவை இவற்றுக்கு மத்தியில் உள்ளவற்றை (-பாவங்களை) போக்கி விடுகின்றன, பெரும் பாவங்களை விட்டு அவர் விலகிக் கொண்டால், என்று ரசூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்.[45]

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ مَنْ صَامَ رَمَضَانَ إِيمَانًا وَاحْتِسَابًا غُفِرَ لَهُ مَا تَقَدَّمَ مِنْ ذَنْبِهِ رَوَاهُ الْبُخَارِيُّ ﵀**

---

43. அறிவிப்பாளர் : அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் ﵁ நூல் : புகாரி, எண் : 527.
44. அறிவிப்பாளர் : அபூ ஹுரைரா ﵁, நூல் : புகாரி, எண் : 1521
45. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: முஸ்லிம், எண்: 233

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: யார் ரமழானில் இறை நம்பிக்கையுடனும் நன்மையின் ஆதரவுடனும் நோன்பிருப்பாரோ அவரின் முந்திய பாவங்கள் அவருக்கு மன்னிக்கப்பட்டு விடும்.[46]

**عَنْ أَبِي ذَرٍّ رَضِيَ اللهُ عَنْهُ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ يَقُولُ اللهُ عَزَّ وَجَلَّ مَنْ جَاءَ بِالْحَسَنَةِ فَلَهُ عَشْرُ أَمْثَالِهَا وَأَزِيدُ وَمَنْ جَاءَ بِالسَّيِّئَةِ فَجَزَاؤُهُ سَيِّئَةٌ مِثْلُهَا أَوْ أَغْفِرُ وَمَنْ تَقَرَّبَ مِنِّي شِبْرًا تَقَرَّبْتُ مِنْهُ ذِرَاعًا وَمَنْ تَقَرَّبَ مِنِّي ذِرَاعًا تَقَرَّبْتُ مِنْهُ بَاعًا وَمَنْ أَتَانِي يَمْشِي أَتَيْتُهُ هَرْوَلَةً وَمَنْ لَقِيَنِي بِقُرَابِ الْأَرْضِ خَطِيئَةً لَا يُشْرِكُ بِي شَيْئًا لَقِيتُهُ بِمِثْلِهَا مَغْفِرَةً رَوَاهُ مُسْلِمٌ رَحِمَهُ اللهُ**

கண்ணியத்திற்கும் கம்பீரத்திற்கும் உரிய அல்லாஹ் கூறுவதாக நபி ﷺ அவர்கள் கூறினார்கள் : யார் ஒரு நன்மையை செய்வாரோ அவருக்கு அது போன்ற பத்து நன்மைகள் உண்டு. யார் ஒரு பாவத்தை செய்வாரோ அவருடைய கூலி அது போன்ற ஒரு தீமைதான். அல்லது நான் (அவரை) மன்னித்து விடுவேன். யார் என்னிடம் ஒரு ஜான் நெருங்குவாரோ நான் அவருக்கு ஒரு முழம் நெருங்கி வருகிறேன். யார் என்னிடம் ஒரு முழம் நெருங்குவாரோ நான் அவருக்கு ஒரு கஜம் நெருங்கி வருகிறேன். யார் என்னிடம் நடந்து வருவாரோ நான் அவரிடம் ஓடி வருவேன். யார் எனக்கு இணைவைக்காத நிலையில் இந்த பூமி நிரம்ப பாவங்களை செய்தவராக என்னை சந்திப்பாரோ நான் அவரை இந்த பூமி நிரம்ப பாவமன்னிப்பைக் கொண்டு அவரை சந்திப்பேன்.[47]

**عَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللهُ عَنْهُمَا سَمِعْتُ رَسُولَ اللهِ ﷺ يَقُولُ إِنَّ اللهَ يُدْنِي الْمُؤْمِنَ**

---

46. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 38
47. அறிவிப்பாளர் : அபூ தர் رضي الله عنه, நூல் : முஸ்லிம், எண் : 2687

فَيَضَعُ عَلَيْهِ كَنَفَهُ وَيَسْتُرُهُ فَيَقُولُ أَتَعْرِفُ ذَنْبَ كَذَا أَتَعْرِفُ ذَنْبَ كَذَا فَيَقُولُ نَعَمْ أَيْ رَبِّ حَتَّىٰ إِذَا قَرَّرَهُ بِذُنُوبِهِ وَرَأَىٰ فِي نَفْسِهِ أَنَّهُ هَلَكَ قَالَ سَتَرْتُهَا عَلَيْكَ فِي الدُّنْيَا وَأَنَا أَغْفِرُهَا لَكَ الْيَوْمَ فَيُعْطَىٰ كِتَابَ حَسَنَاتِهِ وَأَمَّا الْكَافِرُ وَالْمُنَافِقُونَ فَيَقُولُ الأَشْهَادُ هٰؤُلَاءِ الَّذِينَ كَذَبُوا عَلَىٰ رَبِّهِمْ أَلاَ لَعْنَةُ اللَّهِ عَلَى الظَّالِمِينَ (هود: ١٨) رَوَاهُ الْبُخَارِيُّ ﵀

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறியதாக நான் செவியுற்றேன் : நிச்சயமாக அல்லாஹ் முஃமினை நெருக்கமாக்குவான். தனது ஆதரவை (-விசேஷமான கவனிப்பை) அவன் மீது வைப்பான். இன்னும் அவனை மறைத்து விடுவான். இன்னும், அவன் கூறுவான் : இன்ன பாவத்தை நீ அறிவாயா? இன்ன பாவத்தை நீ அறிவாயா? ஆம், என் இறைவா! என்று கூறுவான். இப்படியாக இறைவன் அவனை ஏற்றுக்கொள்ள வைப்பான். அந்த மனிதனோ தான் அழிந்துவிட்டதாக கருதிவிடுவான். அப்போது அல்லாஹ் கூறுவான், நான் உனக்கு அந்த பாவங்களை உலகத்தில் மறைத்துவிட்டேன். நான் உனக்கு இன்று அந்த பாவங்களை மன்னித்து விடுகிறேன். இந்த மனிதனின் நன்மையின் ஏடுகள் அவனுக்கு (வலது கரத்தில்) கொடுக்கப்படுவான். ஆனால், காஃபிரோ, முனாஃபிக்குகளோ -அவர்களைப் பற்றி சாட்சியாளர்கள் கூறுவார்கள் : இவர்கள்தான் தங்கள் இறைவன் மீது பொய் கூறியவர்கள். அறிந்து கொள்ளுங்கள்! அநியாயக்கார மக்கள் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டும். (அல்குர்ஆன் 11 : 18)[48]

عَنْ جُنْدُبٍ ﵁ أَنَّ رَسُولَ اللّٰهِ ﷺ حَدَّثَ أَنَّ رَجُلًا قَالَ وَاللّٰهِ لَا يَغْفِرُ اللّٰهُ لِفُلَانٍ وَإِنَّ اللّٰهَ تَعَالَىٰ قَالَ مَنْ ذَا الَّذِي يَتَأَلَّىٰ عَلَيَّ أَنْ لَا أَغْفِرَ

48. அறிவிப்பாளர் : இப்னு உமர் ﵄, நூல் : புகாரி, எண் : 2441

لِفُلَانٍ فَإِنِّي قَدْ غَفَرْتُ لِفُلَانٍ وَأَحْبَطْتُ عَمَلَكَ رَوَاهُ مُسْلِمٌ ﷺ

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள் : நிச்சயமாக ஒரு மனிதர், அல்லாஹ்வின் மீது சத்தியமாக இன்னவரை அல்லாஹ் மன்னிக்க மாட்டான் என்று கூறினார். அதற்கு நிச்சயமாக அல்லாஹு தஆலா கூறினான் : யார் என் மீது சத்தியம் செய்தார், நான் இன்னவரை மன்னிக்க மாட்டேன் என்று. நிச்சயமாக நான் இன்னவரை மன்னித்து விட்டேன். உனது அமலை அழித்து விட்டேன்.[49]

மேற்கூறப்பட்ட விளக்க உரையிலிருந்து நாம் விளங்க வேண்டிய கருத்துகளின் சுருக்கமாவது :

**சுருக்கம் :**

1. அல்லாஹ்வின் அதிகாரத்தில் யாரும் அவனுடைய அனுமதி இன்றி நுழைய முடியாது.
2. அல்லாஹ் அவனுடைய முஃமினான அடியார்கள் விஷயத்தில் மிக விசாலமான கருணை உள்ளவனாக இருக்கின்றான்.
3. அவன் நாடியவர்களை அவன் மன்னிப்பான். நாடியவர்களை அவன் தண்டிப்பான்.
4. இந்த உலகில் இருந்து ஈமானுடன் ஒருவர் சென்றுவிட்டால் அவருக்கு மறுமையில் அல்லாஹ்வின் மன்னிப்பு நிச்சயம் உண்டு. அவர் தனது பாவத்தால் நரகத்திற்கு சென்று விட்டாலும் அல்லாஹ் அவரை மன்னித்து தனது கருணையின் இல்லத்தில் அவரை நுழைப்பான்.
5. வெளிரங்கமான பாவத்தை காரணம் காட்டி ஒருவரை காஃபிர் என்று கூறிவிட முடியாது.
6. பாவம் செய்பவர்களை பாவத்திலிருந்து தடுக்க வேண்டும். அல்லாஹ்வின் பயத்தை அவர்களுக்கு உணர்த்த வேண்டும்.

49. அறிவிப்பாளர் : ஜுன்துப் ﷺ, நூல் : முஸ்லிம், எண் : 2621

நரகத்தை பற்றி எச்சரிக்கை செய்ய வேண்டும். ஆனால், அல்லாஹ் உன்னை மன்னிக்க மாட்டான் என்று கூறக்கூடாது.

7. ஒருவர் பாவம் செய்துவிட்டு மரணித்து விட்டாலும் அவரை நரக வாசி என்று கூறக்கூடாது. ஏனெனில், அவரிடம் இருக்கின்ற வேறு நன்மைகளால் அல்லாஹ் அவரை மன்னிக்கலாம். இஸ்ரவேலர்களில் விபச்சாரியாக இருந்த பெண், நாய்க்கு தண்ணீர் கொடுத்த காரணத்தால் அல்லாஹ் அவளை மன்னித்து சொர்க்கத்தில் சேர்த்து விட்டான்.

8. நல்லது செய்தாலும் அல்லாஹ்வின் மீது துணிவு கொண்டு விடக்கூடாது. பாவம் செய்தாலும் அல்லாஹ்வின் அருளில் இருந்து நிராசை அடைந்துவிடக் கூடாது.

9. நல்லது செய்கின்ற நிலையில் அல்லாஹ்வின் பயமும் இருக்க வேண்டும். நல்லவர்களின் அடையாளம் அவர்கள் அல்லாஹ்வை பயப்படுவார்கள்.

10. பாவம் செய்பவர்கள் அல்லாஹ்வின் அருளிலிருந்து நிராசை அடையாமல் இருப்பதுடன் தங்களது பாவம் குறித்து அதிகம் பயப்பட வேண்டும். தங்களது முடிவை குறித்து எச்சரிக்கையாக இருக்க வேண்டும். கெட்ட முடிவை குறித்து அச்சப்பட வேண்டும். தனது பாவத்தை நியாயப்படுத்தக் கூடாது. தனது பாவத்தை ஆகுமானதாக கருதிவிடக்கூடாது.

மேற்கூறப்பட்ட விளக்கங்களில் இருந்து நேர்வழி எது, வழிகேடு எது என்பதை நாம் அறிந்து கொள்ள முடியும். இந்த பாடத்தில் மக்கள் ஏற்படுத்திய வழிகேடுகளில் சிலவற்றை இங்கு குறிப்பிடுவோம்.

**வழிகேடுகள் :**

1. பெரும் பாவம் செய்வதால் ஒருவர் இஸ்லாமை விட்டு வெளியேறி விட்டார் என்று கூறுவது.

2. பாவம் செய்பவர்களை அல்லாஹ்வின் கருணையிலிருந்து நிராசை ஆக்குவது.

3. அல்லாஹ்வின் மன்னிப்பின் விஷயத்தில் மார்க்க அறிவில்லாமல் பேசுவது.

4. பாவம் செய்பவர் அல்லாஹ்வைப் பயப்படாமல், மறுமையை அஞ்சாமல் இருப்பது.

5. அல்லாஹ்வின் கருணையில் ஆதரவு இருக்கின்றது என்று கூறி பாவத்தில் மூழ்கி இருப்பது.

6. பாவம் செய்த முஃமினை அல்லாஹ்வை நிராகரித்த காஃபிருக்கு சமமாக ஆக்குவது.

7. பாவங்களின் தரங்களை அறியாமல் இருப்பது.

8. எல்லா பாவங்களையும் ஒரே தரத்தில் வைத்து முடிவு செய்வது.

9. அல்லாஹ்வின் விசாலமான கருணையை சுருக்கி விடுவது.

10. தக்ஃபீர் -ஒருவரை காஃபிர் என்று கூறுவதில் நிதானிக்காமல், அவசரம் காட்டுவது.

இன்னும் இதுபோன்ற பல வழிகேடுகளை இனம் கண்டு அவற்றிலிருந்து விலகி இருக்க வேண்டும்.

அல்லாஹ்வே எங்களை நேரிய கொள்கையில் உறுதிப்படுத்துவதுடன் உனது கருணையை ஆதரவு வைத்தவர்களாகவும் உனது தண்டனையை பயந்தவர்களாகவும் எங்களை ஆக்குவாயாக! ஆமீன்.

---------------------

وَلَا تَعْتَقِدْ رَأْيَ الْـخَوَارِجِ إِنَّهُ

مَقَالٌ لِـمَنْ يَهْوَاهُ يُرْدِي وَيَفْضَحُ

**பொருள் :**

காரிஜிய்யாக்களின் கருத்தை உண்மையென நம்பாதே! நிச்சயமாக யார் அந்த கருத்தை விரும்புவாரோ அது அவரை அழிவில் தள்ளி, இழிவுபடுத்தி விடும்.

**கருத்து :**

முஸ்லிம் மன்னர்களுக்கு எதிராக கிளர்ச்சி செய்வதும் பெரும் பாவம் செய்பவரை காஃபிர் என்று கூறுவதும் கவாரிஜ் உடைய முக்கிய கொள்கை ஆகும். இவர்களின் எந்த கொள்கையையும் கருத்தையும் நம்பிக்கை கொள்வது, இன்னும் செயல்படுத்துவது கூடாது. அது மிகப் பெரிய ஆபத்தையும் இம்மை மறுமையின் இழிவு இன்னும் கேவலத்திற்கு காரணமாக ஆகிவிடும்.

**விளக்கம் :**

இந்த கவிதையை நாம் விளங்குவதற்கு காரிஜிய்யா, கவாரிஜ், காரிஜி என்றால் யார்; அவர்களின் கொள்கைகள் என்ன என்பதை முதலில் விளங்க வேண்டும்.

**خارجي** காரிஜி என்ற பதத்தின் பன்மை **خوارج** கவாரிஜ் ஆகும். இது ஒரு கொள்கை சார்ந்த பிரிவாகும். உஸ்மான் ﵁ அவர்களின் ஆட்சி காலத்தில் இவர்கள் தோன்றினார்கள். பிறகு, அலீ ﵁ அவர்களின் ஆட்சிக் காலத்தில் அலீ ﵁ அவர்களை விட்டு பிரிந்து சென்றார்கள். முஸ்லிம்களின் ஜமாஅத்தை விட்டு இவர்கள் பிரிந்து சென்றதால் இவர்களை காரிஜி என்று அழைக்கப்படுகின்றது. இவர்களுக்கு

ஹரூரிய்யா என்றும் மாரிக்கா என்றும் ஷுரா என்றும் புகா என்றும் முஹக்கிமா என்றும் பெயர் கூறப்படும்.

இவர்கள் தங்களுக்கு அஹ்லுல் ஈமான் என்று பெயர் வைத்துக் கொண்டனர்.

இவர்களைப் பற்றி முன் அறிவிப்பை நபி ﷺ அவர்கள் செய்துள்ளார்கள். முதலில் அந்த அறிவிப்புகளை பார்த்து விட்டு இவர்களின் கொள்கைகளை பார்ப்போம்.

இமாம் முஸ்லிம் رحمه الله அவர்கள், **بَابُ ذِكْرِ الْخَوَارِجِ وَصِفَاتِهِمْ** கவாரிஜ் மற்றும் அவர்களின் தன்மைகளை விவரிப்பது என்று ஒரு பாடம் அமைத்திருக்கிறார்கள். அதில் பல ஹதீஸ்களை அவர்கள் பதிவு செய்துள்ளார்கள். அந்த ஹதீஸ்களில் சிலவற்றை வரிசையாக பார்ப்போம்.

ஹதீஸ் 1.

**عَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللهِ رضي الله عنه قَالَ أَتَى رَجُلٌ رَسُولَ اللهِ ﷺ بِالْجِعْرَانَةِ مُنْصَرَفَهُ مِنْ حُنَيْنٍ وَفِي ثَوْبِ بِلَالٍ فِضَّةٌ وَرَسُولُ اللهِ ﷺ يَقْبِضُ مِنْهَا يُعْطِي النَّاسَ فَقَالَ يَا مُحَمَّدُ اعْدِلْ قَالَ وَيْلَكَ وَمَنْ يَعْدِلُ إِذَا لَمْ أَكُنْ أَعْدِلُ لَقَدْ خِبْتَ وَخَسِرْتَ إِنْ لَمْ أَكُنْ أَعْدِلُ فَقَالَ عُمَرُ بْنُ الْخَطَّابِ رضي الله عنه دَعْنِي يَا رَسُولَ اللهِ فَأَقْتُلَ هٰذَا الْمُنَافِقَ فَقَالَ مَعَاذَ اللهِ أَنْ يَتَحَدَّثَ النَّاسُ أَنِّي أَقْتُلُ أَصْحَابِي إِنَّ هٰذَا وَأَصْحَابَهُ يَقْرَءُونَ الْقُرْآنَ لَا يُجَاوِزُ حَنَاجِرَهُمْ يَمْرُقُونَ مِنْهُ كَمَا يَمْرُقُ السَّهْمُ مِنَ الرَّمِيَّةِ رَوَاهُ مُسْلِمٌ رحمه الله**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் ஹுனைன் போரிலிருந்து திரும்பி வரும்போது ஜிஃரானாவில் இருக்கும்போது ஒரு மனிதர் வந்தார்.

பிலால் ﵁ உடைய ஆடையில் வெள்ளி இருந்தது. ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் அதிலிருந்து ஒரு ஒரு பிடியாக எடுத்து மக்களுக்கு கொடுத்துக் கொண்டு இருந்தார்கள். அந்த மனிதர், முஹம்மதே! நீதமாக நடந்துக் கொள்வீராக! என்று கூறினார். ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள், உனக்கு கேடு உண்டாகட்டும். நான் நீதமாக நடக்கவில்லை என்றால் வேறு யார் நீதமாக நடந்து கொள்வார். நான் நீதமாக நடக்க வில்லை என்றால் திட்டமாக நீ கைசேதமடைவாய், இன்னும் நஷ்டமடைவாய் என்று கூறினார்கள். உடனே உமர் இப்னுல் கத்தாப் ﵁ அவர்கள் ரஸூலுல்லாஹ்வே! என்னை விடுங்கள்! நான் இந்த நயவஞ்சகனை கொன்று விடுகிறேன் என்று கூறினார்கள். அதற்கு ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள் : அல்லாஹ் பாதுகாப்பானாக! நிச்சயமாக நான் எனது சகாக்களை கொல்கிறேன் என்று மக்கள் பேசுவார்கள். நிச்சயமாக இவரும் இவருடைய தோழர்கள் குர்ஆனை ஓதுவார்கள்; ஆனால், அது அவர்களின் தொண்டைக் குழிகளை தாண்டாது. வேட்டையிலிருந்து அம்பு வெளியேறுவதைப் போல் அவர்கள் குர்ஆனை விட்டு வெளியேறி விடுவார்கள்.[50]

**عَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ ﵁ قَالَ بَعَثَ عَلِيٌّ ﵁ وَهُوَ بِالْيَمَنِ بِذَهَبَةٍ فِي تُرْبَتِهَا إِلَى رَسُولِ اللهِ ﷺ فَقَسَمَهَا رَسُولُ اللهِ ﷺ بَيْنَ أَرْبَعَةِ نَفَرٍ الْأَقْرَعُ بْنُ حَابِسٍ الْحَنْظَلِيُّ وَعُيَيْنَةُ بْنُ بَدْرٍ الْفَزَارِيُّ وَعَلْقَمَةُ بْنُ عُلَاثَةَ الْعَامِرِيُّ ثُمَّ أَحَدُ بَنِي كِلَابٍ وَزَيْدُ الْخَيْرِ الطَّائِيُّ ثُمَّ أَحَدُ بَنِي نَبْهَانَ قَالَ: فَغَضِبَتْ قُرَيْشٌ فَقَالُوا أَتُعْطِي صَنَادِيدَ نَجْدٍ وَتَدَعُنَا فَقَالَ رَسُولُ اللهِ ﷺ إِنِّي إِنَّمَا فَعَلْتُ ذٰلِكَ لِأَتَأَلَّفَهُمْ فَجَاءَ رَجُلٌ كَثُّ اللِّحْيَةِ مُشْرِفُ الْوَجْنَتَيْنِ غَائِرُ الْعَيْنَيْنِ نَاتِئُ الْجَبِينِ مَحْلُوقُ الرَّأْسِ**

50. அறிவிப்பாளர் : ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் ﵁, நூல் : முஸ்லிம், எண் : 1063

فَقَالَ اتَّقِ اللّٰهَ يَا مُحَمَّدُ قَالَ فَقَالَ رَسُولُ اللّٰهِ ﷺ فَمَنْ يُطِعِ اللّٰهَ إِنْ عَصَيْتُهُ أَيَأْمَنُنِي عَلَىٰ أَهْلِ الْأَرْضِ وَلَا تَأْمَنُونِي قَالَ ثُمَّ أَدْبَرَ الرَّجُلُ فَاسْتَأْذَنَ رَجُلٌ مِنَ الْقَوْمِ فِي قَتْلِهِ يُرَوْنَ أَنَّهُ خَالِدُ بْنُ الْوَلِيدِ فَقَالَ رَسُولُ اللّٰهِ ﷺ إِنَّ مِنْ ضِئْضِئِ هٰذَا قَوْمًا يَقْرَءُونَ الْقُرْآنَ لَا يُجَاوِزُ حَنَاجِرَهُمْ يَقْتُلُونَ أَهْلَ الْإِسْلَامِ وَيَدَعُونَ أَهْلَ الْأَوْثَانِ يَمْرُقُونَ مِنَ الْإِسْلَامِ كَمَا يَمْرُقُ السَّهْمُ مِنَ الرَّمِيَّةِ لَئِنْ أَدْرَكْتُهُمْ لَأَقْتُلَنَّهُمْ قَتْلَ عَادٍ رَوَاهُ مُسْلِمٌ رَحِمَهُ اللّٰهُ

அபூசயீத் அல்குத்ரீ ரضي الله عنه அவர்கள் கூறியதாவது: அலீ ரضي الله عنه அவர்கள் யமன் நாட்டிலிருந்து மண் அகற்றப்பட்டிராத தங்கக்கட்டி ஒன்றை அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களுக்கு அனுப்பிவைத்தார்கள். அதை அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் நால்வரிடையே பங்கிட்டு விட்டார்கள் : அக்ரஉ இப்னு ஹாபிஸ் அல்ஹன்ழலீ ரضي الله عنه, உயைனா இப்னு பத்ர் அல்ஃபஸாரீ ரضي الله عنه, பனூ கிலாப் குலத்தாரில் ஒருவரான அல்கமா இப்னு உலாஸா அல்ஆமிரீ ரضي الله عنه மற்றும் பனூ நப்ஹான் குலத்தாரில் ஒருவரான ஸைத் அல்கைர் அத்தாயீ ரضي الله عنه ஆகியோரே அந்நால்வரும். இதைக் கண்ட குறைஷிகள் கோபமடைந்தனர். நஜ்த்வாசிகளின் தலைவர்களுக்குக் கொடுக்கிறீர்கள்; எங்களை விட்டுவிடுகிறீர்களே! என்று கேட்டனர். அதற்கு அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள், (புதிதாக இஸ்லாத்தைத் தழுவியுள்ள) அவர்களுடன் இணக்கத்தை ஏற்படுத்துவதற்காகவே நான் இவ்வாறு செய்தேன் என்று கூறினார்கள். அப்போது தாடி அடர்த்தியாக இருந்த, உயர்ந்த கன்னங்களை உடைய, (குழிவிழுந்த) பஞ்சடைந்த கண்களை உடைய, நெற்றி புடைத்திருந்த, தலைமுடி மழிக்கப்பட்டிருந்த மனிதர் ஒருவர் வந்து, முஹம்மதே! அல்லாஹ்விற்கு அஞ்சுவீராக! என்று கூறினார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள், நானே (அல்லாஹ்விற்கு)

மாறுசெய்தால் வேறு யார் அவனுக்குக் கீழ்ப்படிவார்? பூமியில் வசிப்பவர்கள் விஷயத்தில் அவ(ர்களைப் படைத்த இறைவ)ன் என்மீது நம்பிக்கை வைத்திருக்க, நீங்கள் என்மீது நம்பிக்கை வைக்கமாட்டீர்களா? என்று கேட்டார்கள். பின்னர் அந்த மனிதர் திரும்பிச் சென்றபோது, அங்கிருந்த மக்களில் ஒருவர் அவரைக் கொல்ல அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களிடம் அனுமதி கேட்டார். அனுமதி கேட்டவர் காலித் இப்னு அல்வலீத் ؓ அவர்கள் என்றே மக்கள் கருதுகின்றனர். பிறகு அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள், இ(வ்வாறு என்னிடம் பேசிய அ)ந்த மனிதரின் பரம்பரையிலிருந்து ஒரு சமுதாயத்தார் தோன்றுவர். அவர்கள் குர்ஆனை ஓதுவார்கள். ஆனால், அது அவர்களுடைய தொண்டைக் குழிகளைத் தாண்டிச் செல்லாது; இஸ்லாமியர்களைக் கொல்வார்கள்: சிலை வணக்கம் செய்பவர்களை விட்டுவிடுவார்கள். (வேட்டைக்காரனின்) அம்பு வேட்டையாடப்பட்ட பிராணியின் உடலிலிருந்து (மறுபக்கமாக) வெளியேறிவிடுவதைப் போன்று அவர்கள் இஸ்லாமிலிருந்து வெளியேறிவிடுவார்கள். நான் அவர்களை அடைந்தால் ஆத் கூட்டத்தார் அழிக்கப்பட்டதைப் போன்று அவர்களை நான் நிச்சயம் அழித்துவிடுவேன் என்று சொன்னார்கள்.[51]

**عن أَبِي سَعِيدٍ الْخُدْرِيَّ ؓ يَقُولُ بَعَثَ عَلِيُّ بْنُ أَبِي طَالِبٍ ؓ إِلَى رَسُولِ اللهِ ﷺ مِنَ الْيَمَنِ بِذَهَبَةٍ فِي أَدِيمٍ مَقْرُوظٍ لَمْ تُحَصَّلْ مِنْ تُرَابِهَا قَالَ: فَقَسَمَهَا بَيْنَ أَرْبَعَةِ نَفَرٍ بَيْنَ عُيَيْنَةَ بْنِ حِصْنٍ وَالْأَقْرَعِ بْنِ حَابِسٍ وَزَيْدِ الْخَيْلِ وَالرَّابِعُ إِمَّا عَلْقَمَةُ بْنُ عُلَاثَةَ وَإِمَّا عَامِرُ بْنُ الطُّفَيْلِ فَقَالَ رَجُلٌ مِنْ أَصْحَابِهِ كُنَّا نَحْنُ أَحَقَّ بِهٰذَا مِنْ هٰؤُلَاءِ قَالَ فَبَلَغَ ذٰلِكَ النَّبِيَّ ﷺ فَقَالَ أَلَا تَأْمَنُونِي وَأَنَا أَمِينُ مَنْ فِي السَّمَاءِ يَأْتِينِي خَبَرُ السَّمَاءِ صَبَاحًا وَمَسَاءً قَالَ فَقَامَ رَجُلٌ غَائِرُ الْعَيْنَيْنِ مُشْرِفُ**

51. அறிவிப்பாளர் : அபூ சயீது அல்குத்ரி ؓ, நூல் : முஸ்லிம், எண் : 1921

الْوَجْنَتَيْنِ نَاشِزُ الْجَبْهَةِ كَثُّ اللِّحْيَةِ مَحْلُوقُ الرَّأْسِ مُشَمَّرُ الْإِزَارِ فَقَالَ يَا رَسُولَ اللّٰهِ اتَّقِ اللّٰهَ فَقَالَ وَيْلَكَ أَوَلَسْتُ أَحَقَّ أَهْلِ الْأَرْضِ أَنْ يَتَّقِيَ اللّٰهَ قَالَ ثُمَّ وَلَّى الرَّجُلُ فَقَالَ خَالِدُ بْنُ الْوَلِيدِ يَا رَسُولَ اللّٰهِ أَلَا أَضْرِبُ عُنُقَهُ فَقَالَ لَا لَعَلَّهُ أَنْ يَكُونَ يُصَلِّي قَالَ خَالِدٌ وَكَمْ مِنْ مُصَلٍّ يَقُولُ بِلِسَانِهِ مَا لَيْسَ فِي قَلْبِهِ فَقَالَ رَسُولُ اللّٰهِ ﷺ إِنِّي لَمْ أُومَرْ أَنْ أَنْقُبَ عَنْ قُلُوبِ النَّاسِ وَلَا أَشُقَّ بُطُونَهُمْ قَالَ ثُمَّ نَظَرَ إِلَيْهِ وَهُوَ مُقَفٍّ فَقَالَ إِنَّهُ يَخْرُجُ مِنْ ضِئْضِئِ هٰذَا قَوْمٌ يَتْلُونَ كِتَابَ اللّٰهِ رَطْبًا لَا يُجَاوِزُ حَنَاجِرَهُمْ يَمْرُقُونَ مِنَ الدِّينِ كَمَا يَمْرُقُ السَّهْمُ مِنَ الرَّمِيَّةِ قَالَ أَظُنُّهُ قَالَ لَئِنْ أَدْرَكْتُهُمْ لَأَقْتُلَنَّهُمْ قَتْلَ ثَمُودَ رَوَاهُ مُسْلِمٌ رحمه الله

அலீ இப்னு அபீதாலிப் رضي الله عنه அவர்கள் கருவேல இலையால் பதனிடப்பட்ட தோல்பை ஒன்றில், மண் அகற்றப்பட்டிராத தங்கக்கட்டி ஒன்றை யமனிலிருந்து அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களுக்கு அனுப்பிவைத்தார்கள். அதை நபி ﷺ அவர்கள் நால்வரிடையே பங்கிட்டார்கள்: உயைனா இப்னு ஹிஸ்ன் رضي الله عنه, அக்ரஉ இப்னு ஹாபிஸ் رضي الله عنه, ஸைத் அல்கைல் رضي الله عنه. நான்காமவர் அல்கமா இப்னு உலாஸா رضي الله عنه; அல்லது ஆமிர் இப்னு அத்துஃபைல் رضي الله عنه. அப்போது நபித்தோழர்களில் ஒருவர், இதைப் பெறுவதற்கு இவர்களைவிடத் தகுதி வாய்ந்தவர்கள் நாம்தாம் என்று கூறினார். இந்த விஷயம் நபி رضي الله عنه அவர்களுக்கு எட்டியது. அப்போது அவர்கள், நான் வானத்திலுள்ளவனின் நம்பிக்கைக்குரியவனாயிருக்க, என்மீது நீங்கள் நம்பிக்கை வைக்கமாட்டீர்களா? காலையிலும் மாலையிலும் எனக்கு வானத்தின் செய்திகள் வந்தவண்ணமுள்ளன என்று சொன்னார்கள். அப்போது கண்கள் பஞ்சடைந்த, கன்னங்கள் உப்பிய, நெற்றி புடைத்த, அடர்த்தியான தாடி கொண்ட, தலைமுடி

மழிக்கப்பட்டிருந்த, கீழாடையை அதிகம் உயர்த்தி கட்டியிருந்த மனிதர் ஒருவர் எழுந்து, அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள் என்று கூறினார். உடனே நபி ﷺ அவர்கள், உமக்குக் கேடுதான். பூமியிலிருப்பவர்களில் அல்லாஹ்வை அஞ்சுவதற்கு மிகவும் அருகதை வாய்ந்தவன் நான் இல்லையா? என்று கேட்டார்கள். பிறகு அந்த மனிதர் திரும்பிச் சென்றார். அப்போது காலித் இப்னு அல்வலீத் رضي الله عنه அவர்கள், அல்லாஹ்வின் தூதரே! நான் அவருடைய தலையைக் கொய்து விடட்டுமா? என்று கேட்டார்கள். நபி ﷺ அவர்கள், (அவரைக் கொல்ல) வேண்டாம். அவர் தொழக்கூடியவராக இருக்கலாம் என்று சொன்னார்கள். அதற்கு காலித் رضي الله عنه அவர்கள், எத்தனையோ தொழுகையாளிகள் தமது இதயத்தில் இல்லாததை நாவில் மொழிகின்றார்கள் என்றார்கள். அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள், மக்களின் இதயங்களைத் துளையிட்டுப் பார்க்கவோ அவர்களின் வயிறுகளைக் கிழித்துப் பார்க்கவோ எனக்கு உத்தரவிடப்படவில்லை என்று கூறினார்கள். பின்னர் திரும்பிச் சென்றுகொண்டிருந்த அந்த மனிதரைப் பார்த்த அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள், இந்த மனிதரின் பரம்பரையிலிருந்து ஒரு சமுதாயத்தார் தோன்றுவர். அவர்கள் அல்லாஹ்வின் வேதத்தை இனிமையாக ஓதுவார்கள். ஆனால், அது அவர்களுடைய தொண்டைக் குழிகளைத் தாண்டிச் செல்லாது. (வேட்டைக்காரனின்) அம்பு வேட்டையாடப்பட்ட பிராணியின் உடலிலிருந்து (மறுபக்கமாக) வெளியேறி விடுவதைப் போன்று அவர்கள் மார்க்கத்திலிருந்து (சுவடே தெரியாமல்) வெளியேறிவிடுவார்கள் என்று கூறினார்கள். நான் அவர்க(ள் வாழும் நாட்க)ளை அடைந்தால் ஸமூத் கூட்டத்தார் அழிக்கப்பட்டதைப் போல அவர்களை நிச்சயம் அழித்துவிடுவேன் என்று கூறியதாகவும் நான் எண்ணுகிறேன்.[52]

**عَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ رضي الله عنه أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ تَمْرُقُ مَارِقَةٌ فِي فُرْقَةٍ مِنَ النَّاسِ فَيَلِي قَتْلَهُمْ أَوْلَى الطَّائِفَتَيْنِ بِالْحَقِّ رَوَاهُ مُسْلِمٌ رحمه الله**

52. அறிவிப்பாளர் : அபூ சயீது அல்குத்ரி رضي الله عنه, நூல் ; முஸ்லிம், எண் : 1922

மக்கள் பிரிந்திருக்கும் போது ஒரு கூட்டம் பிரிந்து செல்லும். பிரிந்த இரண்டு கூட்டத்தில் சத்தியத்திற்கு நெருக்கமான கூட்டம் அவர்களை கொல்லும் பொறுப்பை எடுப்பார்கள்.[53]

عن زَيْد بْن وَهْبٍ الْجُهَنِيُّ ﷺ أَنَّهُ كَانَ فِي الْجَيْشِ الَّذِينَ كَانُوا مَعَ عَلِيٍّ ﷺ الَّذِينَ سَارُوا إِلَى الْخَوَارِجِ فَقَالَ عَلِيٌّ ﷺ أَيُّهَا النَّاسُ إِنِّي سَمِعْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ يَخْرُجُ قَوْمٌ مِنْ أُمَّتِي يَقْرَءُونَ الْقُرْآنَ لَيْسَ قِرَاءَتُكُمْ إِلَىٰ قِرَاءَتِهِمْ بِشَيْءٍ وَلَا صَلَاتُكُمْ إِلَىٰ صَلَاتِهِمْ بِشَيْءٍ وَلَا صِيَامُكُمْ إِلَىٰ صِيَامِهِمْ بِشَيْءٍ يَقْرَءُونَ الْقُرْآنَ يَحْسِبُونَ أَنَّهُ لَهُمْ وَهُوَ عَلَيْهِمْ لَا تُجَاوِزُ صَلَاتُهُمْ تَرَاقِيَهُمْ يَمْرُقُونَ مِنَ الْإِسْلَامِ كَمَا يَمْرُقُ السَّهْمُ مِنَ الرَّمِيَّةِ لَوْ يَعْلَمُ الْجَيْشُ الَّذِينَ يُصِيبُونَهُمْ مَا قُضِيَ لَهُمْ عَلَىٰ لِسَانِ نَبِيِّهِمْ ﷺ لَاتَّكَلُوا عَنِ الْعَمَلِ وَآيَةُ ذَٰلِكَ أَنَّ فِيهِمْ رَجُلًا لَهُ عَضُدٌ وَلَيْسَ لَهُ ذِرَاعٌ عَلَىٰ رَأْسِ عَضُدِهِ مِثْلُ حَلَمَةِ الثَّدْيِ عَلَيْهِ شَعَرَاتٌ بِيضٌ فَتَذْهَبُونَ إِلَىٰ مُعَاوِيَةَ وَأَهْلِ الشَّامِ وَتَتْرُكُونَ هَٰؤُلَاءِ يَخْلُفُونَكُمْ فِي ذَرَارِيِّكُمْ وَأَمْوَالِكُمْ وَاللَّهِ إِنِّي لَأَرْجُو أَنْ يَكُونُوا هَٰؤُلَاءِ الْقَوْمَ فَإِنَّهُمْ قَدْ سَفَكُوا الدَّمَ الْحَرَامَ وَأَغَارُوا فِي سَرْحِ النَّاسِ فَسِيرُوا عَلَى اسْمِ اللَّهِ. قَالَ سَلَمَةُ بْنُ كُهَيْلٍ: فَنَزَّلَنِي زَيْدُ بْنُ وَهْبٍ مَنْزِلًا حَتَّىٰ قَالَ: مَرَرْنَا عَلَىٰ قَنْطَرَةٍ فَلَمَّا الْتَقَيْنَا وَعَلَى الْخَوَارِجِ يَوْمَئِذٍ عَبْدُ اللَّهِ بْنُ وَهْبٍ الرَّاسِبِيُّ فَقَالَ: لَهُمْ أَلْقُوا الرِّمَاحَ وَسُلُّوا سُيُوفَكُمْ

53. அறிவிப்பாளர் : அபூ சயீது அல்குத்ரி ﷺ, நூல் ; முஸ்லிம், எண் : 1064

مِنْ جُفُونِهَا فَإِنِّي أَخَافُ أَنْ يُنَاشِدُوكُمْ كَمَا نَاشَدُوكُمْ يَوْمَ حَرُورَاءَ فَرَجَعُوا فَوَحَّشُوا بِرِمَاحِهِمْ وَسَلُّوا السُّيُوفَ وَشَجَرَهُمُ النَّاسُ بِرِمَاحِهِمْ قَالَ: وَقُتِلَ بَعْضُهُمْ عَلَىٰ بَعْضٍ وَمَا أُصِيبَ مِنَ النَّاسِ يَوْمَئِذٍ إِلَّا رَجُلَانِ فَقَالَ عَلِيٌّ ﷺ: الْتَمِسُوا فِيهِمُ الْمُخْدَجَ فَالْتَمَسُوهُ فَلَمْ يَجِدُوهُ فَقَامَ عَلِيٌّ ﷺ بِنَفْسِهِ حَتَّىٰ أَتَىٰ نَاسًا قَدْ قُتِلَ بَعْضُهُمْ عَلَىٰ بَعْضٍ قَالَ: أَخِّرُوهُمْ فَوَجَدُوهُ مِمَّا يَلِي الْأَرْضَ فَكَبَّرَ ثُمَّ قَالَ: صَدَقَ اللهُ وَبَلَّغَ رَسُولُهُ قَالَ: فَقَامَ إِلَيْهِ عَبِيدَةُ السَّلْمَانِيُّ فَقَالَ: يَا أَمِيرَ الْمُؤْمِنِينَ أَللَّهَ الَّذِي لَا إِلَٰهَ إِلَّا هُوَ لَسَمِعْتَ هَٰذَا الْحَدِيثَ مِنْ رَسُولِ اللهِ ﷺ؟ فَقَالَ: إِي وَاللهِ الَّذِي لَا إِلَٰهَ إِلَّا هُوَ حَتَّى اسْتَحْلَفَهُ ثَلَاثًا وَهُوَ يَحْلِفُ لَهُ رَوَاهُ مُسْلِمٌ ﷺ

ஸைத் இப்னு வஹ்ப் அல்ஜுஹனீ ﷺ அவர்கள் கூறியதாவது : (நஹ்ரவான் நகரத்தைச் சேர்ந்த) காரிஜிய்யாக்களை நோக்கிச் சென்ற அலீ ﷺ அவர்களின் படையில் நானும் இருந்தேன். (செல்லும் வழியில்) அலீ ﷺ அவர்கள் கூறினார்கள் : மக்களே! அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள், என் சமுதாயத்திலிருந்து ஒரு கூட்டத்தார் தோன்றுவார்கள். அவர்கள் குர்ஆனை ஓதுவார்கள். அவர்களின் ஓதுதலுடன் உங்களின் ஓதுதலை ஒப்பிடும்போது உங்களின் ஓதுதல் ஒன்றுமேயில்லை; அவர்களது தொழுகையுடன் உங்களது தொழுகையை ஒப்பிடும்போது உங்களது தொழுகை ஒன்றுமேயில்லை; அவர்களது நோன்புடன் உங்களது நோன்பை ஒப்பிடும்போது உங்களது நோன்பு ஒன்றுமேயில்லை. (அந்த அளவிற்கு அவர்களுடைய வணக்க வழிபாடுகள் அதிகமாயிருக்கும்.) தங்களுக்குச் சாதகமான ஆதாரம் என்று எண்ணிக்கொண்டு அவர்கள் குர்ஆனை ஓதுவார்கள். ஆனால், அது அவர்களுக்கு எதிரான ஆதாரமாகவே இருக்கும். அவர்களது தொழுகை(யில்

அவர்கள் குர்ஆனை ஓதுவது), அவர்களது கழுத்தெலும்பைத் தாண்டிச்செல்லாது. வேட்டைப் பிராணியைவிட்டு (அதன் உடலைத் துளைக்கின்ற) அம்பு (உடலின் மறுபக்கம்) வெளிப்பட்டுச் சென்றுவிடுவதைப் போன்று இஸ்லாமிலிருந்து அவர்கள் (சுவடே தெரியாமல்) வெளியேறிச் சென்றுவிடுவார்கள் என்று கூறியதை நான் கேட்டுள்ளேன். அவர்களை வீழ்த்தும் படையினர், அதற்காகத் தமக்கு வழங்கப்படவுள்ள நற்பலன் குறித்துத் தங்களது நபியின் நாவினால் அறிவிக்கப்பட்டுள்ளதை அறிவார்களாயின், அதையே நம்பிக்கைகொண்டு நற்செயல் புரியாமல் இருந்துவிடுவார்கள். அவர்களிடையே கை புஜம் மட்டுமே உள்ள ஒரு மனிதன் அவர்களுக்கு அடையாளம் ஆவான். முழங்கைக்குக் கீழே அவனுக்குக் கையிருக்காது. அவனது கை புஜத்தின் மீது மார்புக் காம்பைப் போன்று ஒரு கட்டியிருக்கும். அதன் மீது வெள்ளை முடிகள் முளைத்திருக்கும். நீங்கள் சந்ததிகளையும் செல்வங்களையும் கவனிக்கும் பிரதிநிதிகளாக இவர்களை விட்டுவிட்டு, முஆவியா ﵁ அவர்களிடமும் ஷாம்வாசிகளிடமும் (ஸிஃப்பீன் போருக்காகச்) சென்று விடுவீர்கள். (இந்த காரிஜிய்யாக்களோ உங்கள் குழந்தை குட்டிகளைத் துன்புறுத்துவார்கள். உங்கள் சொத்துக்களைச் சூறையாடுவார்கள்.) அல்லாஹ்வின் மீதாணையாக! (அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் வர்ணித்த) அந்த(காரிஜிய்யா)க் கூட்டத்தார் இவர்களாகத்தான் இருப்பார்கள் என்று நான் நம்புகிறேன். ஏனெனில், இவர்கள் அல்லாஹ் புனிதப்படுத்தியுள்ள உயிர்களைக் கொலை செய்துள்ளார்கள்; மக்களுடைய கால்நடைகளைக் கொள்ளையடித்துள்ளார்கள். எனவே, அல்லாஹ்வின் திருப்பெயர் கூறி, அவர்களை நோக்கிச் செல்லுங்கள் (அவர்களை வெல்லுங்கள்) என்று சொன்னார்கள்.

இதன் அறிவிப்பாளரான சலமா இப்னு குஹைல் ﵀ அவர்கள் கூறினார்கள்:

(அந்தப் பயணத்தில்) ஸைத் இப்னு வஹ்ப் ﵀ அவர்கள் (காரிஜிய்யாக்கள்) முகாமிட்டிருந்த ஒவ்வொரு தளங்களையும்

எனக்குக் காட்டினார்கள். இறுதியாக நாங்கள் (அத் தப்ரஜான் எனும்) ஒரு பாலத்தைக் கடந்துசென்றோம். (கலகக்காரர்களான காரிஜிய்யாக்களை) நாங்கள் சந்தித்தபோது, காரிஜிய்யாக்களின் அன்றைய தளபதியாக அப்துல்லாஹ் இப்னு வஹ்ப் அர்ராசிபீ என்பவன் இருந்தான். அவன் காரிஜிய்யாக்களிடம், ஹரூரா போரின்போது இவர்கள் அல்லாஹ்வின் பெயரால் ஆணையிட்டு உங்களிடம் (சமாதான ஒப்பந்தக்) கோரிக்கையை முன்வைத்ததைப் போன்று இப்போதும் கோரிக்கை வைத்துவிடுவார்களோ என்று நான் அஞ்சுகிறேன். (அதற்கு இடமளித்து விடாமல்) ஈட்டியை எறியுங்கள்; வாட்களை உறைகளிலிருந்து உருவி(த் தயாராக வைத்து)க் கொள்ளுங்கள் என்று கூறினான். உடனே அவர்கள் திரும்பிச்சென்று தூரத்தில் நின்று கொண்டு தங்களுடைய ஈட்டிகளை வீசினர்; தங்களுடைய வாட்களை உருவி(யவாறு மக்களிடையே புகுந்த)னர். அலீ ﵁ அவர்களுடைய படையிலிருந்த மக்களும் அவர்கள்மீது தங்களுடைய ஈட்டிகளைப் பாய்ச்சினர். அவர்கள் ஒருவர் பின் ஒருவராகக் கொல்லப்பட்டனர். அன்றைய தினம் அலீ ﵁ அவர்களின் அணியிலிருந்த) மக்களில் இருவர் மட்டுமே கொல்லப்பட்டனர்.

பிறகு (எங்களிடம்) அலீ ﵁ அவர்கள், "அவர்களிடையே ஊனமான கையுடைய அந்த மனிதனைத் தேடிப்பாருங்கள்" என்று கூறினார்கள். மக்கள் தேடிப்பார்த்தபோது அவன் தென்படவில்லை. எனவே, அலீ ﵁ அவர்களே எழுந்து சென்று, ஒருவர்மீது ஒருவராக அவர்கள் கொல்லப்பட்டுக் கிடந்த பகுதிக்கு வந்து "உடல்களை நகர்த்துங்கள்" என்று கூறினார்கள். அவனது உடல் தரைப் பகுதியின் அடியில் கிடப்பதைக் கண்டார்கள். அப்போது அலீ ﵁ அவர்கள் "தக்பீர்" (அல்லாஹ் மிகப்பெரியவன் என்று) கூறினார்கள். பிறகு அல்லாஹ் உண்மையே சொன்னான்; அவனுடைய தூதர் (அவனது செய்தியை) எடுத்துரைத்து விட்டார்கள் என்று சொன்னார்கள்.

அப்போது அலீ ﵁ அவர்களிடம் அபீதா அஸ்ஸல்மானீ ﵀ அவர்கள் வந்து, அமீருல் முஃமினீன் அவர்களே! எவனைத்

தவிர வேறு இறைவன் இல்லையோ அவன்மீது சத்தியமாக! (காரிஜிய்யாக்கள் குறித்த) இந்த ஹதீஸை நீங்கள் அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களிடமிருந்து செவியுற்றீர்களா? என்று கேட்டார்கள். அதற்கு அலீ ؓ அவர்கள், "ஆம்; எவனைத் தவிர வேறு இறைவன் இல்லையோ அவன்மீது சத்தியமாக!" என்று பதிலளித்தார்கள். இவ்வாறு மூன்று முறை சத்தியம் செய்யுமாறு அலீ ؓ அவர்களிடம் அபீதா ؒ அவர்கள் கோரினார்கள். அலீ ؓ அவர்களும் அவ்வாறே சத்தியம் செய்தார்கள்.[54]

இத்துடன் இவர்கள் குறித்த ஹதீஸ்களை போதுமாக்கிக் கொண்டு இவர்களின் கொள்கையில் சிலவற்றை கூறுவோம்:

1. பெரும் பாவம் செய்தவர்கள் இஸ்லாமை விட்டு வெளியேறி காஃபிர் -நிராகரிப்பாளர் ஆகிவிடுவார்கள்.

2. பெரும் பாவம் செய்தவர்கள் நரகத்தில் நிரந்தரமாக தங்கி விடுவார்கள்.

3. உஸ்மான், அலீ, தல்ஹா, ஸுபைர், ஆயிஷா, அம்ர் இப்னு அல்ஆஸ், அபூ மூஸா, ؓ ஆகியோரை காஃபிர் என்று கூறுதல்.

4. ஆட்சியாளர் பாவம் செய்து விட்டால், அநியாயம் செய்துவிட்டால் அவருக்கு எதிராக கலகம், கிளர்ச்சி செய்ய வேண்டும்.

5. அல்லாஹ்வின் தன்மைகளை மறுப்பது.

இன்னும் இது போன்ற பல வழிகேடான கொள்கைகள் இவர்களிடம் இருக்கின்றன.

இவர்கள் தங்களுக்குள் சில விஷயங்களில் வேறுபட்டு தங்களுக்குள் இருபதுக்கும் மேற்பட்ட பிரிவுகளாக இருக்கின்றனர்.

---

54. நூல் : முஸ்லிம், எண் : 1934

இஸ்லாமிய மார்க்கத்தில் இஸ்லாமுக்கும் முஸ்லிம்களுக்கும் மிகப் பெரிய பாதிப்பை உண்டாக்கிய இரு வழிகெட்ட கூட்டங்களில் இது ஒரு கூட்டமாகும். மற்றொன்று ஷீஆ என்ற பிரிவினர் ஆகும். இந்த இரு கூட்டங்களால் உம்மத்திற்கு ஏற்பட்ட பாதிப்பை விளக்குவது என்றால் அதற்கு ஒரு தனி நூலே தேவைப்படும்.

மூன்றாம் கலீஃபா, நபி ﷺ அவர்களின் மருமகனார், குர்ஆனை ஒருங்கிணைத்த தோழர், இஸ்லாமிய மார்க்கத்திற்காக தனது செல்வத்தை அள்ளிக் கொடுத்த வள்ளல் உஸ்மான் துன் நூரைன் இந்த வழிகெட்ட கூட்டத்தால் படுகொலை செய்யப்பட்டார். பிறகு, நான்காம் கலீஃபா, சொர்க்கத் தலைவியின் கணவனார், சொர்க்க வாலிபர்களின் தலைவர்களின் தகப்பனார், அஞ்சா நெஞ்சம் கொண்ட வீரர், அல்லாஹ்வும் அவனது ரஸூலும் நேசிக்கின்ற தோழர் இந்த கல் நெஞ்சம் படைத்த கூட்டத்தால் படுகொலை செய்யப் பட்டார்கள்.

கூட்டங்களில் மிக மோசமான கூட்டம் இந்த காரிஜிய்யா கூட்டம். இவர்களின் கொள்கை மிக ஆபத்தானது. நபி ﷺ அவர்களை பார்த்து நீங்கள் நீதமாக நடந்து கொள்ளவில்லை, அல்லாஹ்வை பயந்து கொள்ளுங்கள் என்று கூறியவன் எத்தகைய வழிகேடனாக இருந்திருப்பான்!? அவன் உருவாக்கிய கூட்டம்தான் இந்த கூட்டம்.

அவ்வப்போது இந்த கூட்டம் இந்த உலகில் தோன்றிக் கொண்டே இருக்கும். அல்லாஹ் இவர்களின் தீங்கிலிருந்து நம்மை பாதுகாப்பானாக! ஆமீன்.

ஹதீஸ்களில் இருந்தும் மேற்கூறப்பட்ட விளக்க உரையிலிருந்தும் நாம் அறிந்து கொள்ள வேண்டிய கருத்துக்களின் சுருக்கம் :

**சுருக்கம் :**

1. அல்லாஹ்வின் தூதரை எதிர்ப்பது, அவர்கள் மீது ஆட்சேபனை செய்வது, அவர்களின் செயலில் குறை காணுவது மாபெரும் வழிகேடாகும். அதை செய்பவர் தன்னைத்தானே பெரிய நீதவானாக, நேர்மையாளனாக எண்ணிக் கொண்டாலும் சரி.

2. இன்று உருவாகி இருக்கின்ற பல வழிகெட்ட கூட்டங்கள், முன் சென்ற வழிகெட்ட கூட்டங்களிடமிருந்து தங்கள் கொள்கையை குடிக்கின்றனர். பிறகு, அதை உம்மத்திற்கு மத்தியில் கக்குகின்றனர்.

3. ஸஹீஹான ஹதீஸ்கள் மீது ஆட்சேபனை செய்வது, மற்றும் நபித்தோழர்கள் உடைய செயல்களில் குறை காணுவது காரிஜிய்யாக்களின் குணமாகும். அவர்கள் தங்கள் செயலுக்கு என்ன நியாயம் கற்பித்தாலும் அது தெளிவான வழிகேடாகும்.

4. ஒருவர் மிக உள்ளச்சத்தோடு தொழுது, சரியாக குர்ஆனை ஓதி, வணக்க வழிபாடுகளில் தன்னை முழுமையாக அர்ப்பணித்துக் கொண்டாலும் அவரிடம் ரஸூலுல்லாஹ்விற்கு முழுமையாக கீழ்ப்படிதல் இல்லை என்றால் அவர் பெரும் வழிகேட்டில் இருக்கின்றார். அவரின் நன்மைகளை அல்லாஹ் ஏற்றுக் கொள்ள மாட்டான்.

5. ஒருவரிடம் அமல்கள் குறைவாக இருந்தாலும் அவரிடம் நபிக்கு கீழ்ப்படிதல், கட்டுப்படுதல், பணிந்து நடத்தல் இருந்தால் அவர் அல்லாஹ்வின் அன்பையும் மன்னிப்பையும் பெறுவார்.

6. ஸஹாபாக்களை ஒரு கூட்டம் எதிர்த்தால், அவர்களை குறை பேசினால், அவர்களை விட தங்களை உயர்வாக கருதினால் அந்தக் கூட்டம் காரிஜியாக்களின் வழித்தோன்றல்கள் ஆவார்கள்.

7. மார்க்கத்தில் முதலாவதாக அல்லாஹ்விற்கும் தூதருக்கும் முழுமையாக கீழ்ப்படிதல் மிக அவசியமாகும். கீழ்ப்படிதல் இல்லாமல் சில அமல்களை மட்டும் செய்வது போதாது.

8. ஸஹாபாக்கள், வழிகெட்ட கூட்டத்திடமிருந்து வேறுபடுவது இந்த கீழ்ப்படிதல் என்ற தன்மையைக் கொண்டுதான். வழிகெட்ட கூட்டத்திடம் ஸஹாபாக்களை விட அதிகமாக அமல்கள் இருக்கும் என்று நபி ﷺ அவர்கள் சுட்டிக்காட்டினார்கள்.

9. ஆட்சியாளரை எதிர்ப்பதும், அவர்களுக்கு எதிராக கிளர்ச்சி செய்வதும், அவர்களை கொல்வதை ஆகுமானதாக கருதுவதும் வழிகேட்டின் மிக முக்கியமான அடையாளம் ஆகும்.

10. அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களின் கூற்று ஒரு போதும் பொய்யாகாது.

11. அவர்களின் முன்னறிவிப்புகள் அனைத்தும் உண்மையே.

12. ஸஹாபாக்களுக்கு நபி ﷺ அவர்களின் கூற்றுகள் மீது முழுமையாக நம்பிக்கையும் பற்றுதலும் இருந்தது.

13. வழிகெட்ட கூட்டத்தை எதிர்ப்பதும் ஆட்சியாளருக்கு கீழ்ப்படிவதும் நேர்வழி பெற்ற நல்லோரின் அடையாளமாகும்.

14. சத்தியக் கொள்கையின் அடையாளம் மிகத் தெளிவாக இருக்கும். அதாவது, நபி ﷺ அவர்களுக்கு கீழ்ப்படிதல், ஆட்சியாளருக்கு கட்டுப்படுதல்.

15. நபி ﷺ அவர்களின் காலத்தில் இஸ்லாமை ஏற்ற எல்லோரும் ஸஹாபாவாக ஆகிவிட முடியாது. மாறாக, அவர்களை சந்தித்து, பிறகு இஸ்லாமை விட்டு விலகாமல், ஸஹாபாக்களின் ஜமாஆவை விட்டு விலகாமல், முஸ்லிமான நிலையில் அவர்கள் இறந்திருக்க வேண்டும். ஆகவேதான் ஜகாத் கொடுக்க மறுத்தவர்களையும், நபி ﷺ அவர்களுக்கு பின்னர் மதம் மாறியவர்களையும், காரிஜிய்யா கூட்டத்தின் தலைவனையும் அவனுடன் சேர்ந்தவர்களையும் ஸஹாபாபாக்கள் என்று அழைக்கப்படாது.

16. அவ்வாறே, ஸஹாபாக்களை சந்தித்து, அவர்களின் காலத்தில் வாழ்ந்த எல்லோரும் தாபியீன்கள் ஆகிவிட முடியாது. மாறாக யார் ஸஹாபாக்களை விட்டுப் பிரியாமல், அவர்களுடன் நேர்வழியில் ஒன்றோடு இருந்தார்களோ அவர்கள்தான் தாபியீன்கள் ஆவார்கள்.

இன்னும் இதுபோன்ற பல உண்மைகளை நாம் மேற்கண்ட

ஆதாரங்களையும் விளக்கங்களையும் ஆய்வு செய்யும்போது புரிந்து கொள்ளலாம்.

இந்த பாடத்தில் நாம் விளங்கவேண்டிய வழிகேடுகளை முன்கூட்டிய காரிஜிய்யாக்களின் கொள்கை என்ற தலைப்பில் பார்த்து விட்டோம்.

அல்லாஹு தஆலா நம் அனைவரையும் நேர்வழியில் நிலைத்திருக்க வைப்பானாக! வழிகேட்டிலிருந்தும் வழிகேடர்களிலிருந்தும் பாதுகாப்பானாக! அல்லாஹ்விற்கும் அவனது தூதருக்கும் முற்றிலும் பணிந்த, கட்டுப்பட்ட, கீழ்ப்படிந்த முஃமின்களில் நம்மை ஆக்கி வைப்பானாக! ஆமீன்.

---------------------

وَلَا تَكُ مُرْجِيًّا لَعُوْبًا بِدِيْنِهِ

أَلَا إِنَّمَا الْـمُرْجِيُّ بِالدِّيْنِ يَمْزَحُ

**பொருள் :**

தனது மார்க்கத்தில் விளையாடுகின்ற முர்ஜியாக நீ இருக்காதே! அறிந்துகொள்! நிச்சயமாக முர்ஜி, மார்க்கத்தை பரிகாசம் செய்கின்றான்.

**கருத்து :**

அமல்கள் ஈமானில் சேராது என்ற கொள்கையை உடையவர் முர்ஜியாக்கள் என்று அழைக்கப்படுவார்கள். இவர்கள் உண்மையில் மார்க்கத்தை பின்பற்றுவது இல்லை. இவர்களின் கருத்துகள் மார்க்கத்தை கேலி செய்வதாகத்தான் இருக்கும்.

**விளக்கம் :**

முர்ஜியாக்கள் என்பவர்கள் யார், இர்ஜா என்றால் என்ன என்பதன் விளக்கம் பின்னால் வர இருக்கின்றது. யார் அஹ்லுஸ் ஸுன்னா உடைய கொள்கைக்கு முரண்பட்டு செல்கிறார்களோ அவர்கள் உண்மையில் இஸ்லாமை பின்பற்றவில்லை. மாறாக, அவர்கள் தங்கள் மன இச்சயை மட்டுமே பின்பற்றுகிறார்கள். மார்க்க ஆதாரங்களில் தங்கள் மனதுக்கு விருப்பமானதை ஏற்று, தங்கள் கொள்கைக்கு முரணாக இருப்பதற்கு தவறான வியாக்கியானம் கூறுகின்றனர். ஆகவே, இவர்கள் மார்க்கத்தை விளையாட்டாக எடுத்துக்கொண்டனர். இன்னும், மார்க்க ஆதாரங்களில் கல்வி அறிவின்றி பேசி உண்மைக்கு முரணான விளக்கங்களைக் கூறி, மார்க்கத்தை ஒரு கேலிப் பொருளாக ஆக்கிவிட்டனர். அவர்களின் செயல்களில் இருந்து அல்லாஹ் நம்மை பாதுகாப்பானாக! ஆமீன்.

--------------------

وَقُلْ إِنَّمَا الْاِيْمَانُ قَوْلٌ وَنِيَّةٌ

وَفِعْلٌ عَلَىٰ قَوْلِ النَّبِيِّ مُصَرَّحُ

**பொருள் :**

இன்னும் கூறு! நிச்சயமாக ஈமான் என்பது சொல்லும் நம்பிக்கையும் செயலும் ஆகும். இவ்வாறுதான் நபியின் கூற்றின் வாயிலாக தெளிவுப்படுத்தப்பட்டுள்ளது.

**கருத்து :**

நமது கொள்கை என்னவென்றால் நிச்சயமாக ஈமான் என்பது சொல், செயல், நம்பிக்கை ஆகிய மூன்றும் சேர்ந்ததாகும். இந்த கருத்தைத்தான் ஹதீஸ்கள் தெளிவு படுத்துகின்றன.

**விளக்கம் :**

அஹ்லுஸ் ஸுன்னா உடைய கொள்கை என்னவென்றால் ஈமான் என்ற சொல்லுக்குள் சொல், செயல், நம்பிக்கை மூன்று அடங்கும் என்பதாகும். அதாவது, தூய திரு கலிமாவை உள்ளத்தால் நம்பிக்கை கொண்டு, வாயால் மொழிந்து, அந்த திரு கலிமாவினால் நம்மீது கடமையாக ஆகின்ற சட்டங்களை நாம் நமது உறுப்புகளால் செயல்படுத்த வேண்டும். இதுதான் உண்மையான கொள்கையாகும். குர்ஆனுடைய பல நூறு வசனங்களும் ஆயிரக்கணக்கான நபிமொழிகளும் நபித்தோழர்களின் எண்ணற்ற கூற்றுகளும் இந்த கருத்தைதான் உறுதி செய்கின்றன. இதுதான் நடுநிலையான, நேர்வழியான கொள்கையாகும். இது குறித்த மேலதிக விளக்கங்கள் அடுத்த கவிதையின் விளக்க உரையில் வர இருக்கின்றது இன் ஷா அல்லாஹ்.

--------------------

وَيَنْقُصُ طَوْرًا بِالْـمَعَاصِي وَتَارَةً

بِطَاعَتِهِ يَنْمِي وَفِي الْوَزْنِ يَرْجَحُ

**பொருள் :**

பாவங்களால் அது சில சமயம் குறைந்துவிடுகிறது. சில சமயம் நன்மைகளால் அது வளருகின்றது. (மறுமையில்) தராசில் அது எடைக் கூடியதாக இருக்கும்.

**கருத்து :**

நமது ஈமான் நாம் நன்மைகள் செய்யும்போது உயர்ந்து கொண்டே போகிறது. ஒருவர் பாவம் செய்யும்போது அவரின் ஈமான் குறைந்து கொண்டே போகிறது. நன்மைகள் செய்பவரின் ஈமான் மறுமையில் எடைக் கூடியதாக இருக்கும்.

**விளக்கம் :**

தொடர்ந்து ஆசிரியர் அவர்கள் வழிகெட்ட கூட்டங்களையும் அவர்களின் வழிகேடுகளையும் இங்கு எச்சரிக்கின்றார்கள். அத்துடன் நேர்வழி பெற்ற அஹ்லுஸ் ஸுன்னா உடைய கொள்கையையும் விவரிக்கிறார்கள்.

வழிகெட்ட கூட்டங்களில் ஒன்றுதான் முர்ஜியா என்ற கூட்டம். இவர்களின் கொள்கைக்கு இர்ஜா என்று கூறப்படும்.

இவர்களைப் பற்றி கொஞ்சம் விரிவாக பார்ப்போம்.

**الإرجاء في اللغة التأخير وفي الاصطلاح تأخير العمل وإخراجه عن حقيقة الإيمان قال ابن كثير في بيان سبب تسمية المرجئة بهذا**

**الاسم: قيل مرجئة لأنهم قدموا القول وأرجؤا العمل أي أخروه وهم أقسام وفرق متعددة مختلفة في تحديد معنى الإيمان عدّها الأشعري في المقالات اثني عشر فرقة وأشهرهم فرقتان**

இர்ஜா என்றால் அரபி அகராதியில் தாமதப்படுத்துதல், ஒரு காரியத்தை தள்ளிப்போடுதல் என்று பொருளாகும். மார்க்க வழக்கில் இர்ஜா என்றால் ஈமானின் உண்மை நிலையிலிருந்து அமலை பிற்படுத்துவதும் அமலை ஈமானின் அடிப்படையிலிருந்து வெளியேற்றுவதும் ஆகும். இவர்கள் பன்னிரண்டு பிரிவினர்களாக இருந்தாலும் இரண்டு பிரிவினர் இவர்களில் பிரபலமானவர்கள் ஆவார்கள்.

ஒரு பிரிவினருக்கு முர்ஜிஅதுல் ஃபுகஹா என்று கூறப்படும். இவர்களின் கொள்கையாவது, ஈமான் என்பது நாவால் மொழிந்து ஏற்றுக்கொள்வதும்; உள்ளத்தால் உண்மை என்று நம்புவதும்; ஈமானில் கூடுதல், குறைதல் ஏற்படாது என்று கூறுவதும்; அது ஒரே நிலையில் இருக்கும்; நாம் செய்யக் கூடிய நல்லமல்கள் ஈமானின் நற்பலன்கள் என்று கூறுவதும் ஆகும்.

இரண்டாவது வகை முர்ஜிஅதுல் முதகல்லிமீன். இவர்கள் ஜஹ்மிய்யா என்று அறியப்படுகின்றனர். இன்னும் அஷ்அரி, மாதிரீதிய்யா ஆகியோரும் கொள்கையில் இவர்களைப் பின்பற்றுகின்றனர்.

இந்த இரண்டு வகையான கூற்றும் முன் சென்ற ஸலஃபுகளின் கூற்றுக்கு மாற்றமானதாகும்.

ஃபுழைல் இப்னு இயாழ் ﵀ கூறுகிறார் : முர்ஜிஆக்கள் கூறுகிறார்கள், ஈமான் என்பது சொல் மட்டும்தான். அமல் இல்லை என்று. ஜஹ்மிய்யாக்கள் கூறுகிறார்கள், ஈமான் என்பது உள்ளத்தால் அறிவது மட்டும்தான். சொல்லும் இல்லை, அமலும் இல்லை என்று. அஹ்லுஸ் ஸுன்னா கூறுவதாவது : ஈமான் என்பது உள்ளத்தால்

அறிவதும், சொல்வதும் அமல் செய்வதும் ஆகும்.

(தஹ்தீபுல் ஆசார் -தபரி)

இமாம் அஹ்மது ﵀ கூறுகிறார்கள் : ஜஹ்மிய்யாக்கள் கூற்றாவது : ஒருவர் தனது ரப்பை உள்ளத்தில் அறிந்தால் போதும். அவர் தனது உடல் உறுப்புகளால் அமல் ஏதும் செய்யவில்லை என்றாலும் சரி. பிறகு, இமாம் அஹ்மது கூறுகிறார்கள் : இது முழுக்க குஃப்ர் - நிராகரிப்பான கூற்றாகும். இப்லீஸ் தனது ரப்பை அறிந்திருந்தான். அவன் என் இறைவா என்று அழைத்து அல்லாஹ்விடம் நீ என்னை வழிகெடுத்து விட்டாய் என்று கூறினான்.

முர்ஜிஅத்துல் ஃபுகஹா உடைய வழிமுறையை குறிப்பாக ஹனஃபி மத்ஹபை சேர்ந்தவர்களும் பொதுவாக மற்ற மத்ஹப்வாதிகளும் பின்பற்றுகின்றனர். இன்னும் தங்களை அஹ்லுஸ் ஸுன்னா என்று கூறிக் கொண்டு, கொள்கை விஷயத்தில் அஷ்அரிய்யா, மாதிரீதிய்யா கொள்கைகளில் இருப்பவர்களும் அதைப் பின்பற்றுகின்றனர்.

முர்ஜிஅத்துல் முதகல்லிமீன் உடைய வழிமுறையை சேர்ந்தவர்களை ஜஹ்மிய்யா என்று கூறப்படுகிறது. இந்த கொள்கையின் ஸ்தாபகர் ஜஹ்ம் இப்னு ஸஃப்வான் என்பவனாகும். இவன் கல்வியையும் கற்கவில்லை. அறிஞர்களின் சகவாசமும் இவனுக்கு இல்லை. இவன் பழகியதெல்லாம் அல்ஜஅது இப்னு திர்ஹம் போன்ற வழிகெட்ட கொள்கை உடையவர்களிடம்தான். ஜஅது திர்ஹம் என்பவன் இஸ்லாமிற்கு எதிரான கருத்துக்களை கூறி வந்ததுடன் அல்லாஹ்வின் தன்மைகளை மறுத்து வந்தான். இவன் பெரும் முட்டாளாக இருந்ததுடன் தர்க்கம் செய்பவனாகவும் இருந்தான். இவனை காலித் இப்னு அப்தில்லாஹ் அல்கஸ்ரி என்ற ஆளுநர் கொன்றார். ஜஹ்ம் இப்னு ஸஃப்வானை சலம் இப்னு அஹ்வஸ் என்ற கவர்னர் கொன்றார்.

இவனுடைய கொள்கையை முஃதஸிலா கொள்கை சேர்ந்த பிஷ்ர் அல்முரீஸி என்பவரும் அபுல் ஹசன் அல்அஷ்அரி என்பவரும் பின்பற்றினார்கள். யாரெல்லாம் அமலை ஈமானில் சேர்க்கவில்லையோ அவர்கள் எல்லோரும் இர்ஜா என்ற கொள்கையை சேர்ந்தவர்கள்தான்.

அபுல் ஹஸன் அல் அஷ்அரி அவர்கள் தங்களின் இறுதி காலத்தில் தமது பழைய நிலைப்பாட்டிலிருந்து தவ்பா செய்துவிட்டார். இன்னும் அஹ்லுல் ஹதீஸ் என்ற உண்மையான அஹ்லுஸ் ஸுன்னாவுடைய கொள்கைதான் எனது கொள்கை என்று மகாலாதுல் இஸ்லாமிய்யீன் என்ற தமது நூலில் குறிப்பிடுகிறார்கள்.

இந்த கொள்கையை நமது முன்சென்ற அஹ்லுஸ் ஸுன்னா அனைவரும் கடுமையாக மறுத்து இருக்கின்றார்கள். முர்ஜிஅத்துல் ஃபுகஹாவை விட முர்ஜிஅத்துல் முதகல்லிமீன் உடைய கொள்கைகள் மிக மோசமானவை ஆகும்.

இப்ராஹீம் நகயி ﷽ கூறுகிறார் : இர்ஜா கொள்கை ஒரு பித்அத் ஆகும். புதிதாக உருவான இந்த கொள்கையை விட்டு நான் உங்களை எச்சரிக்கின்றேன்.

ஸஈது இப்னு ஜுபைர் ﷽ கூறுகிறார் : முர்ஜியாக்கள் ஸாபியீன் என்ற வழிகெட்ட கூட்டத்தைப் போன்றுதான்.

இமாம் ஸுஹ்ரி ﷽ கூறுகிறார் : முஸ்லிம்களுக்கு மிக ஆபத்தான கேடு விளைவிக்கக்கூடிய ஒரு புதிய கொள்கை இதை விட வேறு இல்லை.

இன்னும் பல இமாம்கள் இந்த முர்ஜியாக்களின் கொள்கையை மறுத்து விளக்கம் அளித்துள்ளார்கள். நமது முன்சென்ற ஸஹாபாக்களும் தாபிஈன்களும் ஈமானில் அமலையும் சேர்த்துதான் பார்த்தார்கள். அமலை ஈமானிலிருந்து அவர்கள் பிரிக்கவில்லை.

குர்ஆனுடைய பல வசனங்களும் பல நூறு நபிமொழிகளும் அமலை ஈமானுடன் சேர்த்தே கூறுகின்றன. அவை அனைத்திலும் ஈமானுடன் அமல் சேர்த்தே கூறப்பட்டுள்ளது.

அல்லாஹு தஆலா கூறுகின்றான் :

﴿وَمَا أُمِرُوا إِلَّا لِيَعْبُدُوا اللَّهَ مُخْلِصِينَ لَهُ الدِّينَ حُنَفَاءَ وَيُقِيمُوا

﴿الصَّلَاةَ وَيُؤْتُوا الزَّكَاةَ وَذَٰلِكَ دِينُ الْقَيِّمَةِ○﴾

பொருள் : (எனினும், அவர்கள்) இறைவனுடைய கலப்பற்ற மார்க்கத்தையே பின்பற்றி, மற்ற மார்க்கங்களைப் புறக்கணித்து, அல்லாஹ் ஒருவனையே வணங்கி, தொழுகையையும் கடைப்பிடித்து, ஜகாத்தும் கொடுத்து வருமாறே தவிர, (வேறெதுவும் இத்தூதர் மூலம்) அவர்களுக்கு ஏவப்படவில்லை. (இது, அவர்களுடைய வேதத்திலும் ஏவப்பட்ட விஷயம்தான்.) இதுதான் நிலையான சட்டங்களுடைய மார்க்கம். (அல்குர்ஆன் 98 : 5)

﴿وَمَنْ يَعْمَلْ مِنَ الصَّالِحَاتِ مِنْ ذَكَرٍ أَوْ أُنْثَىٰ وَهُوَ مُؤْمِنٌ فَأُولَٰئِكَ يَدْخُلُونَ الْجَنَّةَ وَلَا يُظْلَمُونَ نَقِيرًا○﴾

பொருள் : ஆகவே, ஆணாயினும் பெண்ணாயினும் எவர்கள் மெய்யாகவே நம்பிக்கை கொண்டு நற்செயல்களைச் செய்கிறார்களோ அவர்கள்தான் சொர்க்கம் செல்வார்கள். அவர்கள் அற்ப அளவும் அநீதி இழைக்கப்பட மாட்டார்கள். (அல்குர்ஆன் 4 : 124)

﴿وَمَنْ يَعْمَلْ مِنَ الصَّالِحَاتِ وَهُوَ مُؤْمِنٌ فَلَا يَخَافُ ظُلْمًا وَلَا هَضْمًا○﴾

பொருள் : எவர் நம்பிக்கை கொண்டவராக இருந்து நற்செயல்களைச் செய்கிறாரோ அவர், (தன் நற்கூலி) அழிந்து விடுமென்றோ குறைந்து விடுமென்றோ பயப்படமாட்டார். (அல்குர்ஆன் 20 : 112)

﴿وَالْعَصْرِ ○ إِنَّ الْإِنْسَانَ لَفِي خُسْرٍ ○ إِلَّا الَّذِينَ آمَنُوا وَعَمِلُوا الصَّالِحَاتِ وَتَوَاصَوْا بِالْحَقِّ وَتَوَاصَوْا بِالصَّبْرِ○﴾

பொருள் : காலத்தின் மீது சத்தியமாக! (தன் ஆயுளை வீணில் செலவு செய்து) நிச்சயமாக மனிதன் நஷ்டமடைந்து விட்டான்.

ஆயினும், எவர்கள் நம்பிக்கை கொண்டு, நற்செயல்களையும் செய்து, சத்தியத்தை ஒருவருக்கொருவர் உபதேசம் செய்து (பாவங்களை விடுவதிலும் நன்மைகளைச் செய்வதிலும் ஏற்படும் சிரமங்களைச்) சகித்துக் கொள்ளுமாறும் ஒருவருக்கொருவர் உபதேசம் செய்து வந்தார்களோ, அவர்களைத் தவிர (இவர்கள் நஷ்டமடையவில்லை). (அல்குர்ஆன் 103 : 1-3)

﴿وَإِذَا مَا أُنْزِلَتْ سُورَةٌ فَمِنْهُمْ مَنْ يَقُولُ أَيُّكُمْ زَادَتْهُ هَذِهِ إِيمَانًا
فَأَمَّا الَّذِينَ آمَنُوا فَزَادَتْهُمْ إِيمَانًا وَهُمْ يَسْتَبْشِرُونَ○﴾

பொருள் : ஒரு (புதிய) அத்தியாயம் அருளப்பட்டால் "உங்களில் யாருடைய நம்பிக்கையை இது அதிகப்படுத்தியது?" என்று கேட்கக்கூடியவர்களும் அவர்களில் பலர் இருக்கின்றனர். மெய்யாகவே எவர்கள் நம்பிக்கைக் கொண்டிருக்கிறார்களோ அவர்களுடைய நம்பிக்கையை (இது) அதிகப்படுத்தியே விட்டது. இதைப் பற்றி அவர்கள் மகிழ்ச்சியடைகின்றனர். (அல்குர்ஆன் 9 : 124.)

﴿وَالَّذِينَ اهْتَدَوْا زَادَهُمْ هُدًى وَآتَاهُمْ تَقْوَاهُمْ○﴾

பொருள் : எவர்கள் நேரான வழியில் செல்கிறார்களோ (அவர்கள் இந்த வேதத்தை கவனத்துடன், பின்பற்றும் எண்ணத்துடன் செவியுறுவதன் காரணமாக) அவர்களுடைய நேர்வழியை (மேலும்) அதிகப்படுத்தி இறையச்சத்தையும் அவர்களுக்கு (அல்லாஹ்) அளிக்கிறான். (அல்குர்ஆன் 47 : 17)

﴿وَيَزِيدُ اللَّهُ الَّذِينَ اهْتَدَوْا هُدًى وَالْبَاقِيَاتُ الصَّالِحَاتُ خَيْرٌ عِنْدَ
رَبِّكَ ثَوَابًا وَخَيْرٌ مَرَدًّا○﴾

பொருள் : நேர்வழி பெற்றவர்களுக்கு அல்லாஹ் மென்மேலும் நேர்வழியை அதிகரித்து வழங்குகிறான். நிலையாக இருக்கக்கூடிய

நற்செயல்கள்தான் உமது இறைவனிடத்தில் நற்கூலியை அடைவதற்கு சிறந்ததாகவும், நல்ல முடிவை தருவதற்கு சிறந்ததாகவும் இருக்கின்றன.

(அல்குர்ஆன் 19 : 76)

இன்னும் இது போன்ற பல ஆதாரங்கள் உள்ளன.

நமது சிறப்பிற்குரிய முன்னோர் அனைவரும் தங்கள் ஈமானுடைய விஷயத்தில் பயந்து கொண்டு இருந்தனர். யாரும் தனது ஈமான், ஜிப்ரீலுடைய ஈமானைப் போன்று என்று கூறியது இல்லை. இந்த முர்ஜியாக்கள், ஒரு பெரும் பாவியின் ஈமானும் மலக்குகளின் ஈமானும் ஒன்றுதான்; ஈமான் என்பது உள்ளத்தால் நம்புவது மட்டுமே; அதில் எல்லோரும் ஒரே சமம்தான் என்று கூறுகின்றனர். இவ்வாறு நமது ஸஹாபாக்கள் அல்லது தாபியீன்கள் கூறவில்லை. இமாம் புகாரி ﵀ அவர்கள் தங்களது நூலில் கிதாபுல் ஈமான் என்ற அத்தியாயத்தில் அவர்களுக்கு மறுப்பாக பல ஹதீஸ்களையும் சான்றோர் கூற்றுகளையும் பதிவு செய்துள்ளார்கள்.

**குறிப்பாக ஈமான் உடைய விஷயத்தில் அஹ்லுஸ் ஸுன்னா வல் ஜமாஆ உடைய கொள்கையாவது :**

1. ஈமான் என்பது உள்ளத்தால் நம்புவதுடன் வாயால் மொழிய வேண்டும். உறுப்புகளால் அமல் செய்ய வேண்டும்.

2. ஈமான் என்பது உள்ளத்தால் அல்லாஹ்வை ரப்பு என்று அறிவது மட்டும் என்ற கூற்று தவறாகும்.

3. அல்லது உள்ளத்தால் ஏற்றுக்கொண்டு, நாவால் கூறினால் போதும், அமல் தேவை இல்லை என்று கூறுவதும் வழிகேடாகும்.

4. ஈமான் என்பது ஒரே நிலையில் இருக்கக்கூடியது இல்லை. அமல்கள் செய்ய செய்ய அது உயர்ந்து கொண்டே, அதிகமாகி கொண்டே இருக்கும். பாவங்களால் அந்த ஈமானில் குறைவு ஏற்பட்டுக் கொண்டே இருக்கும்.

5. அமல்களுடன் கூடிய ஈமானுக்கு மறுமையின் தராசில் கூடுதல் கனம் இருக்கும்.

6. தொழுகையை விடுவதையும் ஹலாலை ஹராமாக்குவதையும் ஹராமை ஹலால் ஆக்குவதையும் ஸஹாபாக்கள் குஃப்ர் - நிராகரிப்பாக கருதினார்கள். ஈமானில் அமல் சேராது என்று இருந்திருந்தால் இவ்வாறு அவர்கள் கருதி இருக்க மாட்டார்கள்.

மேற்கூறப்பட்ட கொள்கைக்கு மாற்றமான எல்லாக் கூற்றுகளும் வழிகேடுகள் ஆகும். குர்ஆனுக்கும் ஹதீஸுக்கும் மாற்றமானவை ஆகும். இவர்களின் வழிகெட்ட கொள்கையை விரிவாக அறிய கொள்கையின் பெரிய நூல்களை படிக்கவும்.

அல்லாஹு தஆலா நம் அனைவரையும் நேர்வழி பெற்ற உண்மையான அஹ்லுஸ் ஸுன்னாவில் ஆக்கிவைப்பானாக! ஆமீன். அமலாலும் கொள்கையாலும் வழி கெட்ட அனைத்து கூட்டங்களில் இருந்து அல்லாஹ் நம் அனைவரையும் பாதுகாப்பானாக! ஆமீன்.

--------------------

وَدَعْ عَنْكَ آرَاءَ الرِّجَالِ وَقَوْلِهِمْ

فَقَوْلُ رَسُوْلِ اللّٰهِ أَزْكَىٰ وَأَشْرَحُ

**பொருள் :**

மனிதர்களின் சுய கருத்துகளையும் அவர்களின் சுய கூற்றுகளையும் உன்னை விட்டும் தூரமாக விட்டுவிடு! ரஸூலுல்லாஹ் ﷺ உடைய கூற்று மிக பரிசுத்தமானதும் (மிக உயர்ந்ததும் மனதுக்கு) மிக விளக்கமானதும் ஆகும்.

**கருத்து :**

மார்க்க விஷயங்களில் நபி ﷺ அவர்களின் ஹதீஸை புறக்கணித்து விட்டு மனிதர்களின் கருத்துக்கு முக்கியத்துவம் கொடுக்கக் கூடாது. யார் ஒருவர் மார்க்கத்தில் எவ்வளவுதான் மதிக்கத் தக்கவராக இருந்தாலும் அவரின் கூற்று நபி ﷺ அவர்களின் கூற்றுக்கு மேலாக அல்லது நிகராக ஆக முடியாது.

**விளக்கம் :**

இந்த கவிதையை ஆசிரியர் அவர்கள் தனது கவிதை தொகுப்புக்கான முடிவுரையாக ஆக்கி இருக்கின்றார்கள். இது வரை பல வழிகாட்டலை நமக்கு வழங்கிய அவர்கள் இறுதியாக நமக்கு ஓர் அறிவுரையை முன் வைக்கிறார்கள். அந்த அறிவுரை என்பது முற்றிலும் குர்ஆனும் ஸுன்னாவும் நமக்கு வலியுறுத்திய அறிவுரை ஆகும். கவிதை தொகுப்பின் ஆரம்பத்தில் மிக விளக்கமாக நாம் அதை குறிப்பிட்டோம். அதாவது நாம் நேர்வழியை பின்பற்ற வேண்டும். நேர்வழி என்பது அல்லாஹ்விடம் இருந்து வரக்கூடியதாகும். அல்லாஹ்விடம் இருந்து நமக்கு இரண்டு விஷயங்கள் வந்து

இருக்கின்றன. ஒன்று அல்லாஹ்வின் கலாமாகிய அல்லாஹ்வின் வேத நூல். இரண்டாவது அதை நமக்கு புரிய வைத்து நம்மை சரியாக வழி நடத்துவதற்காக அவன் அனுப்பிய தூதர் அவர்கள் ஆவார்கள். ஆகவே, குர்ஆனையும் ஸுன்னாவையும் நாம் உறுதியாக பற்றிப் பிடித்து நடக்க வேண்டும். அவற்றில் இல்லாத அனாச்சாரங்களை நாம் மார்க்கத்தில் புகுத்தக் கூடாது.

இந்தக் கவிதையில், மனிதர்கள் எதனால் வழிகெடுகிறார்கள்? மார்க்கத்தில் மக்கள் வழி தவறுவதற்கு என்ன காரணம்? நேர்வழி தெளிவாக இருந்தும் மக்கள் வழிகேட்டில் விழுவது ஏன்? என்ற பல கேள்விகளுக்கு இந்தக் கவிதையில் பதில் உள்ளது.

ஆம், அதுதான் மக்கள் குர்ஆன், ஸுன்னாவை விட்டுவிட்டு அவர் சொன்னார், இவர் சொன்னார் என்று மனிதர்களின் கருத்தை மார்க்கத்தில் முன்னிறுத்தி மார்க்கத்தை புரிய முயற்சிப்பது. மக்கள் எதுவரை மனிதர்களின் கருத்தை விட்டுவிட்டு அல்லாஹ் மற்றும் அவனுடைய ரஸூல் ﷺ அவர்களின் கூற்றுக்கு வர மாட்டார்களோ அவர்கள் நேர்வழியை அடைய முடியாது.

ஆரம்பத்தில் நாமெல்லாம் வழிகேட்டில் இருந்தோம். அல்லாஹ் யார் என்று அறியாமல் இருந்தோம். நம்மை படைத்த இறைவனை எப்படி வணங்க வேண்டும் என்று அறியாமல் இருந்தோம். எது ரப்புக்கு பிடிக்கும், எது ரப்புக்கு பிடிக்காது என்று அறியாமல் இருந்தோம். எதை உண்ண வேண்டும், எதை தவிர்க்க வேண்டும் என்பதைக் கூட அறியாதவர்களாக இருந்தோம். அல்லாஹ் நம்மை அவனது வேதத்தின் மூலமும் இறுதி நபி முஹம்மது ﷺ அவர்கள் மூலமாகவும் நேர்வழிக்கு கொண்டு வந்தான். நாம் அறியாத எல்லாவற்றையும் நமக்கு மிக அழகாக கற்பித்து கொடுத்தான். நம்மை இணைவைத்தல் என்ற அசிங்கத்திலிருந்து பரிசுத்தப்படுத்தினான். மடமை, அறியாமை என்ற இருளிலிருந்து கல்வி, ஞானம், அறிவு என்ற ஒளிக்கு அவன் நம்மை கொண்டு வந்தான்.

குர்ஆனும் நபியும் இல்லை என்றால் நாம் எந்த வழிகேட்டில், என்ன கேடுகெட்ட நிலையில் இருந்திருப்போமோ!

ஆகவேதான் குர்ஆனை அல்லாஹ் கொடுத்ததும் நபி ﷺ அவர்களை அனுப்பியதும் அல்லாஹ் நமக்கு செய்த மாபெரும் அருள் என்று கூறுகிறான்.

﴾الرَّحْمٰنُ ○ عَلَّمَ الْقُرْآنَ○﴿

பொருள் : அவன்தான் ரஹ்மான் (-மகா கருணையும் அருளும் உடையவன்). அவன் குர்ஆனை (நமக்கு இறக்கி, நபியின் மூலம் அதை) நமக்கு கற்பித்தான். (அல்குர்ஆன் 55 : 1-2)

﴾إِنَّ هٰذَا الْقُرْآنَ يَهْدِي لِلَّتِي هِيَ أَقْوَمُ﴿

பொருள் : நிச்சயமாக இந்த குர்ஆன் மிக சரியான, நீதமான பாதைக்கு வழிகாட்டுகிறது. (அல்குர்ஆன் 17 : 9)

﴾وَلَقَدْ صَرَّفْنَا فِي هٰذَا الْقُرْآنِ لِيَذَّكَّرُوا﴿

பொருள் : திட்டவட்டமாக இந்த குர்ஆனில் பல விளக்கங்களை (மக்களுக்காக) நாம் விவரித்தோம், அவர்கள் நல்லுபதேசம் பெறுவதற்காக. (அல்குர்ஆன் 17 : 41)

﴾وَنُنَزِّلُ مِنَ الْقُرْآنِ مَا هُوَ شِفَاءٌ وَرَحْمَةٌ لِلْمُؤْمِنِينَ وَلَا يَزِيدُ
الظَّالِمِينَ إِلَّا خَسَارًا○﴿

பொருள் : நம்பிக்கை கொண்டவர்களுக்கு அருளாகவும் நோய் நிவாரணியாகவும் உள்ளவற்றையே இந்தத் திரு குர்ஆனில் நாம் இறக்கியிருக்கிறோம். எனினும், அநியாயக்காரர்களுக்கோ (இது) நஷ்டத்தையே தவிர (வேறு எதையும்) அதிகரிப்பதில்லை.

(அல்குர்ஆன் 17 : 82)

﴿وَلَقَدْ صَرَّفْنَا فِي هٰذَا الْقُرْآنِ لِلنَّاسِ مِنْ كُلِّ مَثَلٍ﴾

பொருள் : மனிதர்களுக்கு இந்த குர்ஆனில் ஒவ்வோர் உதாரணத்தையும் விவரித்திருக்கிறோம். (அல்குர்ஆன் 18 : 54)

﴿وَلَقَدْ يَسَّرْنَا الْقُرْآنَ لِلذِّكْرِ فَهَلْ مِنْ مُدَّكِرٍ○﴾

பொருள் : (மனிதர்கள்) நல்லுணர்ச்சி பெறுவதற்காக இந்த குர்ஆனை எளிதாக்கி வைத்திருக்கிறோம். (இதன் மூலம்) நல்லுணர்ச்சி பெறுபவர்கள் உண்டா? (அல்குர்ஆன் 54 : 17)

﴿لَقَدْ مَنَّ اللَّهُ عَلَى الْمُؤْمِنِينَ إِذْ بَعَثَ فِيهِمْ رَسُولًا مِنْ أَنْفُسِهِمْ يَتْلُو عَلَيْهِمْ آيَاتِهِ وَيُزَكِّيهِمْ وَيُعَلِّمُهُمُ الْكِتَابَ وَالْحِكْمَةَ وَإِنْ كَانُوا مِنْ قَبْلُ لَفِي ضَلَالٍ مُبِينٍ○﴾

பொருள் : அல்லாஹ், நம்பிக்கையாளர்களின் மீது மெய்யாகவே அருள் புரிந்திருக்கிறான். அவர்களுக்காக ஒரு தூதரை (அதுவும்) அவர்களில் இருந்தே அனுப்பினான். அவர் அவர்களுக்கு அல்லாஹ்வுடைய வசனங்களை ஓதிக் காண்பித்து, அவர்களை பரிசுத்தமாக்கியும் வைக்கிறார். மேலும், அவர்களுக்கு வேதத்தையும், ஞானத்தையும் கற்றுக் கொடுக்கிறார். நிச்சயமாக அவர்கள் இதற்கு முன் பகிரங்கமான வழிகேட்டில்தான் இருந்தனர்.
(அல்குர்ஆன் 3 : 164)

அல்லாஹ் உடைய தீனில் மனிதன் தனது அறிவை நல்ல வழியில் செலவு செய்ய வேண்டும். மார்க்கத்தை புரிவதற்கும் அதை செயல்படுத்துவதற்கும் அறிவை பயன்படுத்த வேண்டும். அதற்கு மாற்றமாக, அல்லாஹ்வின் மார்க்கத்தில் குதர்க்கம் செய்வதற்கோ; மார்க்க கருத்துக்களை திரிப்பதற்கோ; மார்க்க வழிகாட்டலுக்கு மாற்றமான சிந்தனைகளை மார்க்கத்தில் புகுத்துவதற்கோ மனிதன் தனது அறிவை பயன்படுத்தக் கூடாது.

குர்ஆன் இறக்கப்பட்ட காலத்தில், நபி ﷺ அவர்கள் அனுப்பப்பட்ட காலத்தில் உண்மை முஃமின்களாக வாழ்ந்த நல்லோர் நமக்கு முன்மாதிரியாக இருக்கின்றார்கள். காலங்கள் பல்லாயிரம் கடந்தாலும் மார்க்கம் நமக்கு அவர்களின் செயல் முறையோடு வைத்துப் பார்க்கும் போது மிகத்தெளிவாக இருக்கின்றது.

ஆகவே, எந்த கருத்துக்கள் நபித்தோழர்களிடமிருந்து வரவில்லையோ அந்த கருத்துக்கள் ஒருபோதும் குர்ஆனுக்கும் ஸுன்னாவுக்கும் விளக்கமாக அமைய முடியாது. அவை மார்க்கத்தில் கொள்கையாக அமைவதற்கு அறவே தகுதி அற்றவை ஆகும்.

இங்கு ஆசிரியர் அவர்கள் இரண்டு விஷயங்களை கூறுவதாக நாம் எடுத்துக் கொள்ளலாம்.

1. கொள்கை சார்ந்த விஷயங்கள்.

2. அமல் சார்ந்த ஃபிக்ஹ் சட்ட விஷயங்கள்.

இந்த இரண்டு விஷயங்களிலும் நாம் குர்ஆனையும் ஸுன்னாவையும் முற்படுத்துவதோடு விளக்கம் தேவைப்படும்போது முதலாவதாக ஸஹாபாக்களின் விளக்கத்திற்கு முன்னுரிமை கொடுக்க வேண்டும்.

எந்த தனி மனிதனின் சிந்தனையும் மார்க்க ஆதாரமாக ஆகாது. மார்க்க ஆதாரத்தை மறுப்பதற்கு மனித அறிவைப் பயன்படுத்துவது இப்லீஸுடைய குணமாகும். ஆதமுக்கு எல்லோரும் சஜ்தா செய்யும்படி அல்லாஹ் கட்டளை இட்டபோது, என்னைவிட தாழ்ந்த ஒருவருக்கு நான் சஜ்தா செய்ய மாட்டேன் என்று தனது அறிவை வைத்து இப்லீஸ் அல்லாஹ்விடம் வாதாடினான். இப்படித்தான் நபியை மறுக்க குறைஷிகள் தங்கள் அறிவை வைத்து வாதாடினார்கள்.

குறைஷிகளின் செயலைப் பற்றி அல்லாஹு தஆலா கூறுகின்றான் :

﴿وَكَانَ الْإِنْسَانُ أَكْثَرَ شَيْءٍ جَدَلًا﴾

பொருள் : மனிதர்களுக்கு இந்த குர்ஆனில் ஒவ்வோர் உதாரணத்தையும் விவரித்திருக்கிறோம். எனினும், மனிதன்தான் அதிகமாக (வீண்) தர்க்கம் செய்பவனாக இருக்கிறான்.

(அல்குர்ஆன் 18 : 54.)

﴿بَلْ هُمْ قَوْمٌ خَصِمُونَ﴾

பொருள் : இன்னும், இவர்கள் வீண் தர்க்கம் செய்யும் மக்கள்தான்.

(அல்குர்ஆன் 43 : 58)

நபி ﷺ அவர்களின் வழிகாட்டல் நமக்கு முன்னால் வரும்போது அது ஸஹீஹாக இருந்தால் உடனே அதற்கு நாம் கீழ்ப்படிந்து விட வேண்டும். இதுதான் நமது குணமாக, பண்பாக இருக்க வேண்டும்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான் :

﴿وَمَا أَرْسَلْنَا مِنْ رَسُولٍ إِلَّا لِيُطَاعَ بِإِذْنِ اللّٰهِ﴾

பொருள் : அல்லாஹ்வுடைய அனுமதிகொண்டு (மக்கள்) அவருக்கு கீழ்ப்படிந்து நடக்க வேண்டும் என்பதற்காகவே தவிர வேறு எதற்காகவும் நாம் எந்த தூதரையும் அனுப்பவில்லை.

(அல்குர்ஆன் 4 : 64)

இது போன்ற பல வசனங்களை முந்திய பாடங்களில் நாம் பார்த்து இருக்கின்றோம்.

ஹதீஸை ஒருவர் முன் கூறும்போது, அவர் எனது ஆசிரியர் இப்படித்தான் கூறினார், எனது இமாம் இதை ஏற்க வில்லை, எனது மத்ஹபில் சட்டம் இப்படி இல்லை என்று கூறி அந்த ஹதீஸை மறுத்தால் இது மிக ஆபத்தான நிலைப்பாடாகும். ஏனெனில், நமக்கு இடப்பட்ட கட்டளை நபியை பின்பற்ற வேண்டும் என்பதுதான். எப்போது அறிஞர்களின் கூற்று நபியின் கூற்றுக்கு மாற்றமாக இருக்குமோ அப்போது அறிஞர்களின் கூற்றை விட்டுவிட்டு நாம் நபியின் கூற்றின் பக்கம் வந்துவிட வேண்டும்.

அல்லாஹு தஆலா கூறுகிறான் :

﴿قُلْ إِنْ كُنْتُمْ تُحِبُّونَ اللَّهَ فَاتَّبِعُونِي يُحْبِبْكُمُ اللَّهُ وَيَغْفِرْ لَكُمْ ذُنُوبَكُمْ وَاللَّهُ غَفُورٌ رَحِيمٌ ○ قُلْ أَطِيعُوا اللَّهَ وَالرَّسُولَ فَإِنْ تَوَلَّوْا فَإِنَّ اللَّهَ لَا يُحِبُّ الْكَافِرِينَ○﴾

பொருள் : (நபியே! மனிதர்களை நோக்கி) கூறுவீராக : நீங்கள் மெய்யாகவே அல்லாஹ்வை நேசிப்பவர்களாக இருந்தால் என்னைப் பின்பற்றுங்கள். உங்களை அல்லாஹ் நேசிப்பான். உங்கள் பாவங்களையும் அவன் மன்னித்து விடுவான். அல்லாஹ் மிக அதிகம் மன்னிப்பவன், பெரும் கருணையாளன் ஆவான். (நபியே! மேலும்,) கூறுவீராக : அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் நீங்கள் கீழ்ப்படியுங்கள். நீங்கள் புறக்கணித்தால் நிச்சயமாக அல்லாஹ் நிராகரிப்பவர்களை நேசிப்பதில்லை. (அல்குர்ஆன் 3 : 31-32)

﴿وَأَطِيعُوا اللَّهَ وَأَطِيعُوا الرَّسُولَ وَاحْذَرُوا فَإِنْ تَوَلَّيْتُمْ فَاعْلَمُوا أَنَّمَا عَلَىٰ رَسُولِنَا الْبَلَاغُ الْمُبِينُ○﴾

பொருள் : அல்லாஹ்வுக்கு கட்டுப்படுங்கள்; (அல்லாஹ்வுடைய) தூதருக்கும் கட்டுப்படுங்கள். (அவர்களுக்கு மாறு செய்யாது) எச்சரிக்கையாக இருங்கள். (இதை) நீங்கள் புறக்கணித்து விட்டால் (நம் கட்டளைகளை, உங்களுக்குத்) தெளிவாக எடுத்துரைப்பது மட்டுமே நம் தூதர்மீது கடமையாகும் என்பதை நிச்சயமாக நீங்கள் அறிந்து கொள்ளுங்கள். (அல்குர்ஆன் 5 : 92)

ஹதீஸை புறக்கணித்து விட்டு மனிதர்களின் அபிப்பிராயங்களின் பக்கம் செல்வதை குறித்து நமது சான்றோர் பலர் கூறி இருக்கின்ற எச்சரிக்கைகள் சிலவற்றை பார்ப்போம்.

عَنْ عُمَرَ بْنِ الْخَطَّابِ رضي الله عنه قَالَ إِيَّاكُمْ وَأَصْحَابَ الرَّأْيِ فَإِنَّهُمْ أَعْدَاءَ

السُّنَنِ أَعْيَتْهُمُ الْأَحَادِيثُ أَنْ يَحْفَظُوهَا فَقَالُوا بِالرَّأْيِ فَضَلُّوا وَأَضَلُّوا رَوَاهُ الدَّارَ قُطْنِيُّ رحمه الله

உமர் இப்னுல் கத்தாப் ரضي الله عنه கூறுகிறார்கள் : சுய கருத்துக்களை கூறுபவர்களை விட்டும் நான் உங்களை எச்சரிக்கின்றேன். நிச்சயமாக அவர்கள் ஸுன்னாக்களுக்கு எதிரிகள் ஆவார்கள். அவர்களால் ஹதீஸ்களை மனனம் செய்ய முடியாமல் அவர்கள் பலவீனப்பட்டு விட்டார்கள். ஆகவே, சுய அபிப்ராயத்தை (மார்க்கத்தில்) கூறி, தாமும் வழிகெட்டு, (மக்களையும்) வழிகெடுத்தார்கள்.[55]

عَنْ عَلِيٍّ رضي الله عنه قَالَ لَوْ كَانَ الدِّينُ بِالرَّأْيِ لَكَانَ أَسْفَلُ الْخُفِّ أَوْلَىٰ بِالْمَسْحِ مِنْ أَعْلَاهُ وَقَدْ رَأَيْتُ رَسُولَ اللَّهِ ﷺ يَمْسَحُ عَلَىٰ ظَاهِرِ خُفَّيْهِ رَوَاهُ أَبُوْ دَاوُدَ رحمه الله

அலீ ரضي الله عنه அவர்கள் கூறுகிறார்கள் : மார்க்கம் அறிவைக் கொண்டு (சுய அபிப்ராயத்தைக் கொண்டு) இருந்தால் காலுறையின் கீழ்ப்பகுதி அதன் மேல் பகுதியை விட மஸ்ஹ் செய்வதற்கு மிக ஏற்றமாக இருந்திருக்கும். ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் தனது இரு காலுறையின் மேல் பகுதியில் மஸ்ஹ் செய்ததை திட்டமாக நான் பார்த்தேன்.[56]

இமாம் அவ்ஸாயி رحمه الله கூறுகிறார்கள் :

عَلَيْكَ بِآثَارِ مَنْ سَلَفَ وَإِنْ رَفَضَكَ النَّاسُ وَإِيَّاكَ وَرَأْيَ الرِّجَالِ وَإِنْ زَخْرَفُوهُ بِالْقَوْلِ فَإِنَّ الْأَمْرَ يَنْجَلِي وَأَنْتَ مِنْهُ عَلَىٰ طَرِيقٍ مُسْتَقِيمٍ رَوَاهُ الْبَيْهَقِيُّ رحمه الله

---

55. நூல் : சுனன் தாரகுதனி, எண் : 4280

56. நூல் : அபூ தாவூத், எண் : 162.

முன் சென்றோரின் (-நபி மற்றும் ஸஹாபாக்களின்) ஹதீஸ்களை நீ உறுதியாக பின்பற்று. மக்கள் உன்னை தூக்கி எறிந்தாலும் சரி. மனிதர்களின் அபிப்ராயத்தை விட்டும் உன்னை நான் எச்சரிக்கின்றேன். அவர்கள் அதை தங்கள் சொல்லால் உனக்கு அலங்கரித்தாலும் சரி. ஏனெனில், நிச்சயமாக ஒரு நாள் இந்த விஷயம் தெளிவடையும். அப்போது, நீ அதில் நேரான பாதையில் இருப்பாய். (அதாவது, ஒருநாள் உண்மை புரியவரும். மரணத்திற்கு பின்னர் உண்மை வெளிப்பட்டு விடும். நீ ஹதீஸை பின்பற்றி, மனிதர்களின் அபிப்ராயங்களை விட்டு விலகியவனாக இருந்திருந்தால், நீ நேர்வழியில்தான் இருந்தாய் என்பது அப்போது உனக்கு உறுதியாகி விடும்.)[57]

காற்றை வைத்து நாம் மிகப் பெரிய காரியத்தை செய்யலாம், அது ஒன்றுக்குள் அடைப்பட்டிருக்கும்போது. அப்படித்தான் அறிவு குர்ஆனுக்கும் ஸுன்னாவிற்கும் உள்ளாக அடைப்பட்டிருந்தால் மிகப் பெரிய கல்விகளை கொடுக்கும். இல்லை என்றால் வழிகேட்டைத்தான் கொடுக்கும்.

**عَنْ عَامِرٍ الشَّعَبِيِّ ﵀ إِنَّمَا هَلَكْتُمْ حِينَ تَرَكْتُمُ الْآثَارَ وَأَخَذْتُمْ فِي الْمَقَايِيسِ**

ஆமிர் ஷஅபி ﵀ கூறினார்கள் :நீங்கள் அழிந்ததெல்லாம் நபிமொழிகளை விட்டுவிட்டு அனுமானங்களை பின்பற்ற ஆரம்பித்த போதுதான்.[58]

**عَنْ عَامِرٍ الشَّعَبِيِّ ﵀ قَالَ سَمِعْتُ الْأَوْزَاعِيَّ ﵀ يَقُولُ إِذَا بَلَغَكَ عَنْ رَسُولِ اللَّهِ ﷺ فَإِيَّاكَ يَا عَامِرُ أَنْ تَقُولَ بِغَيْرِهِ فَإِنَّ رَسُولَ اللَّهِ ﷺ كَانَ مُبَلِّغًا عَنِ اللَّهِ تَبَارَكَ وَتَعَالَى رَوَاهُ الْبَيْهَقِيُّ ﵀**

57. நூல் : அல்மத்கல் இலா அஸ்ஸுனன் அல்குப்ரா - பைஹக்கி, எண் : 233

58. நூல் : அல்மத்கல் இலா அஸ்ஸுனன் அல்குப்ரா -பைஹக்கி, எண் : 228

அவ்ஸாயி ﵀ அவர்கள் ஆமிர் ஷஅபியை நோக்கி கூறினார்கள் : ஆமிரே! ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களின் புறத்திலிருந்து உனக்கு ஹதீஸ் கிடைத்தால் அது அல்லாத வேறு ஒன்றை நீ உனது கூற்றாக கூறுவதை விட்டு உன்னை நான் எச்சரிக்கின்றேன். ஏனெனில், நிச்சயமாக ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் அல்லாஹு தபாரக வதஆலாவின் புறத்திலிருந்து நமக்கு மார்க்கத்தை எடுத்துரைப்பவர்களாக இருந்தார்கள். (அதாவது, அவர்கள் எதை கூறினாலும் அது அல்லாஹ்வின் புறத்திலிருந்து வந்ததாகும்.)[59]

عَنْ عُثْمَانَ بْنِ عُمَرَ ﵀ جَاءَ رَجُلٌ إِلَى مَالِكٍ ﵀ فَسَأَلَهُ عَنْ مَسْأَلَةٍ فَقَالَ لَهُ قَالَ رَسُولُ اللَّهِ ﷺ كَذَا وَكَذَا فَقَالَ الرَّجُلُ أَرَأَيْتَ فَقَالَ مَالِكٌ ﴿فَلْيَحْذَرِ الَّذِينَ يُخَالِفُونَ عَنْ أَمْرِهِ أَنْ تُصِيبَهُمْ فِتْنَةٌ أَوْ يُصِيبَهُمْ عَذَابٌ أَلِيمٌ۝﴾ رَوَاهُ الْبَيْهَقِيُّ ﵀

ஒருவர் இமாம் மாலிக் ﵀ அவர்களிடம் வந்து ஒரு சட்டத்தைப் பற்றி கேள்வி கேட்டார். அதற்கு இமாம் மாலிக் ﵀ அவர்கள் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் இவ்வாறு, இவ்வாறு கூறினார்கள் என்று அவருக்கு கூறினார்கள். அதற்கு அவர் கேட்டார், நீங்கள் கருதுவது என்ன என்று? அதற்கு இமாம் ﵀ மாலிக் அவர்கள் இந்த வசனத்தை ஓதிக் காண்பித்தார்கள்.

﴿فَلْيَحْذَرِ الَّذِينَ يُخَالِفُونَ عَنْ أَمْرِهِ أَنْ تُصِيبَهُمْ فِتْنَةٌ أَوْ يُصِيبَهُمْ عَذَابٌ أَلِيمٌ۝﴾

பொருள் : ஆகவே, எவர்கள் (தூதராகிய) அவருடைய கட்டளைக்கு மாறுசெய்கிறார்களோ அவர்கள் தங்களுக்கு ஒரு ஆபத்தோ அல்லது துன்புறுத்தும் வேதனையோ வந்தடையும் என்பதைப் பற்றிப் பயந்து கொண்டிருக்கவும். (அல்குர்ஆன் 24 : 63)[60]

59. நூல் : அல்மத்கல் இலா அஸ்ஸுனன் அல்குப்ரா -பைஹக்கி, எண் : 234

60. அறிவிப்பாளர் : உஸ்மான் இப்னு உமர் ﵀, நூல் : அல்மத்கல் இலா அஸ்ஸுனன்

عن إسْحَاقَ بْنِ عِيسَىٰ رَحِمَهُ اللهُ قَالَ سَمِعْتُ مَالِكَ بْنَ أَنَسٍ رَحِمَهُ اللهُ يُعِيبُ الْجِدَالَ فِي الدِّينِ وَيَقُولُ كُلَّمَا جَاءَنَا رَجُلٌ أَجْدَلُ مِنْ رَجُلٍ أَرَدْنَا أَنْ نَرُدَّ مَا جَاءَ بِهِ جِبْرِيلُ عَلَيْهِ السَّلَامُ إِلَى النَّبِيِّ ﷺ رَوَاهُ الْبَيْهَقِيُّ رَحِمَهُ اللهُ

மார்க்க விஷயத்தில் (சுய அபிப்ராயங்களைக் கொண்டு) தர்க்கம் செய்வதைப் பற்றி மாலிக் இப்னு அனஸ் ﵁ அவர்கள் அதிகம் குறை கூறுவதை நான் செவியுற்று இருக்கின்றேன். மேலும் அவர்கள் கூறுவார்கள் : தர்க்கம் செய்கின்ற ஒருவரைவிட இன்னும் அதிகம் தர்க்கம் செய்கின்ற ஒருவர் நம்மிடம் வரும்போது அவரின் பேச்சை நாம் ஏற்றுக்கொண்டால் அதற்கு பொருள் ஜிப்ரீல் ﵇. அவர்கள் நபி ﷺ அவர்களிடம் கொண்டுவந்ததை நாம் மறுக்கிறோம் என்பதாகும்.[61]

عَنْ عَبْدَانَ يَقُولُ سَمِعْتُ عَبْدَ اللهِ هُوَ ابْنُ الْمُبَارَكِ رَحِمَهُ اللهُ يَقُولُ لِيَكُنِ الَّذِي تَعْتَمِدُ عَلَيْهِ الْأَثَرُ وَخُذْ مِنَ الرَّأْيِ مَا يُفَسِّرُ لَكَ الْحَدِيثَ رَوَاهُ الْبَيْهَقِيُّ رَحِمَهُ اللهُ

அப்துல்லாஹ் இப்னுல் முபாரக் ﵀ கூறுவதை நான் செவியுற்றேன் : நீ சார்ந்து இருப்பது ஹதீஸாக மட்டும் இருக்கட்டும். ஹதீஸுக்கு விளக்கம் தருகின்ற அளவுக்கு மட்டும் அறிவை (மனிதர்கள் கூறும் கருத்துக்களை, அபிப்ராயங்களை) நீ எடுத்து(ப் பயன்படுத்தி)க் கொள்![62]

ஹதீஸை புறக்கணித்து விட்டு மனிதர்களின் அபிப்ராயங்களுக்கு பின்னால் செல்வதைப் பற்றி நமது சான்றோர் மிக அதிகம் எச்சரிக்கை செய்து இருக்கின்றார்கள்.

---

அல்குப்ரா -பைஹக்கி, எண் : 236

61. அறிவிப்பாளர் : இஸ்ஹாக் இப்னு ஈஸா ﵀, நூல் : அல்மத்கல் இலா அஸ்ஸுனன் அல்குப்ரா -பைஹக்கி, எண் : 238

62. அறிவிப்பாளர் : அப்தான், நூல் : அல்மத்கல் இலா அஸ்ஸுனன் அல்குப்ரா -பைஹக்கி, எண் : 240

நான்கு இமாம்கள் அபூ ஹனீஃபா, மாலிக் இப்னு அனஸ், முஹம்மது இப்னு இத்ரீஸ் ஷாஃபியி, அஹ்மது இப்னு ஹன்பல் ஆகியோர் இது பற்றி கடுமையாக எச்சரித்துள்ளனர். அவற்றை எல்லாம் இங்கே கூறுவது நூலை பெரிதாக்கிவிடும் என்ற அச்சத்தால் விட்டுவிடுகிறோம்.

ஆசிரியர் அவர்கள் கவிதையின் இரண்டாம் பகுதியில் கூறுவது மிக முக்கியமான ஒன்றாகும். அதாவது நபி ﷺ அவர்களின் பேச்சை கேட்டு, அதைக் கொண்டு திருப்தி அடைந்து அதன் படி நமது மார்க்கத்தை அமைத்துக் கொள்வதுதான் நமக்கு மிக மிக நிம்மதியும் மனதுக்கு விளக்கத்தையும் தரக்கூடியதாகும். நபி ﷺ அவர்களின் கூற்று அல்லாஹ்வின் வஹ்யு ஆகும். மன இச்சை, உலகாசை போன்ற அனைத்திலிருந்தும் நபி ﷺ அவர்கள் உடைய ஹதீஸ் நீங்கி மிக பரிசுத்தமாக இருக்கும். பொதுவாக மனிதர்களிடம் இருக்கின்ற அனைத்து கெட்ட குணங்களில் இருந்து நபி ﷺ அவர்களை அல்லாஹு தஆலா பரிசுத்தப் படுத்தி இருக்கின்றான். அவர்களின் கூற்றில் ஏதும் தவறு இருந்தால் அல்லாஹு தஆலா உடனடியாக அதை அவர்களுக்கு வஹ்யு மூலம் திருத்திக் கொடுத்துவிடுவான். கண் தெரியாத ஸஹாபியின் விஷயத்தில் திருத்தியதைப் போன்று, தேனை ஹராமாக்கி கொண்டபோது திருத்தியது போன்று. ஸைனப் رضي الله عنها அவர்கள் விஷயத்தில் நபி ﷺ அவர்களின் முடிவை திருத்தியதைப் போன்று, பத்ர் போரின் கைதிகள் விஷயத்தில் நபி ﷺ அவர்களின் முடிவை திருத்தியது போன்று, தபூக் போரில் கலந்து கொள்ளாமல் இருக்க அனுமதி கேட்டவர்களுக்கு அனுமதி கொடுத்ததை திருத்தியது போன்று. இப்படி அநேக உதாரணங்களை நாம் கூறிக் கொண்டே போகலாம்.

ஆகவே, ஒரு விஷயம் நமக்கு ஸஹீஹான ஹதீஸில் வந்து விட்டால் அதை அமல்படுத்துவதற்குத்தான் நாம் முயற்சிக்க வேண்டும். அதை ஏற்று மனம் திருப்தி அடைய வேண்டும். நபியின் ஒவ்வொரு கூற்றையும் நாம் ஏற்கும்போது நமக்கு ஈமானில் பலமும் அதிகரிப்பும் ஏற்படுகிறது. உள்ளம் அல்லாஹ்வின் மார்க்கத்தில்

உறுதிபெற்று சந்தேக நோயிலிருந்து விடுபடுகிறது. ஈமானில் வளர்ச்சி ஏற்படுகிறது. ஹதீஸை மறுக்கும்போது, அல்லது தட்டிக் கழிக்கும்போது மனதில் ஒருவிதமான நயவஞ்சகம், சந்தேக நோய் வளர்ந்து கொண்டே போகிறது. நம்பிக்கைக்கு பதிலாக நிராகரிப்பும் நேர்வழிக்கு பதிலாக வழிகேடும் மார்க்கத்தில் உறுதியாக இருப்பதற்கு பதிலாக தடுமாற்றமும் ஏற்பட்டுக் கொண்டே போகும். இறுதியாக ஹதீஸை விட மனிதர்களின் கருத்துக்கள் அழகாகவும் ஆழமாகவும் சிறப்பாகவும் தோன்ற ஆரம்பிக்கும். நபி ﷺ அவர்களின் ஹதீஸை விட மனித கருத்துக்களை பெரிதுப்படுத்துவதை விட வேறு என்ன வழிகேடு இருக்க முடியும். அல்லாஹ் பாதுகாப்பானாக! ஆமீன்.

ஆசிரியர் அவர்களின் இந்த கவிதை மற்றும் அதன் விளக்க உரையிலிருந்து நாம் அறிந்துகொள்ள வேண்டிய கருத்துக்களின் சுருக்கத்தை இப்போது பார்ப்போம்,

**சுருக்கம் :**

1. குர்ஆனுக்கு பிறகு நபி ﷺ அவர்களின் ஹதீஸை விட மார்க்கத்தில் யாருடைய அபிப்ராயமும் பெரிது அல்ல.

2. மார்க்கத்தில் இறுதி முடிவு ஹதீஸைக் கொண்டுதான்.

3. குர்ஆனில் இப்படி இருக்கின்றது என்று யாரும் ஹதீஸை மறுக்க முடியாது. காரணம் குர்ஆனை நமக்கு கற்பித்தவர்கள் நபி ﷺ அவர்கள்தான். ஆகவே அவர்கள் எதைக் கூறினார்களோ அதுதான் குர்ஆனுக்கு சரியான புரிதலாக இருக்கும். அவர்கள் குர்ஆனுக்கு மாற்றமாக பேச மாட்டார்கள்.

4. குர்ஆனுக்கு சரியான விளக்கம்தான் ஹதீஸ். ஆகவே ஹதீஸை யார் தட்டிக் கழிக்கிறாரோ அவர் குர்ஆனை தட்டிக் கழிக்கிறார்.

5. நபி ﷺ அவர்களின் ஹதீஸை விட மனிதர்களின் அபிப்ராயங்களுக்கு மார்க்கத்தில் முன்னுரிமை கொடுப்பது மிக ஆபத்தான நிலையாகும்.

6. நபியின் வருகையையும் ரஸூல் உடைய உண்மை நிலையையும்

அறிந்தவர் யாரும் ஹதீஸை எந்த நிலையிலும் மறுக்க மாட்டார், அதற்கு மாற்றமான கருத்தை ஏற்க மாட்டார், ஹதீஸில் குதர்க்கம், தர்க்கம் செய்ய மாட்டார்.

7. ஹதீஸில் சந்தேகப்படுவது மிகப் பெரிய மனக்குழப்பத்தையும் மன நோயையும் உண்டாக்கி விடும்.

8. நேர்வழியின் அடையாளம் ஒருவர் ஹதீஸுக்கு முற்றிலும் கட்டுப்பட்டவராக, அதை ஏற்றுக்கொண்டவராக இருப்பதுதான்.

9. ஹதீஸில் இருக்கின்ற தத்துவங்கள், கருத்தாழங்கள், அழகிய சிந்தனைகள், அற்புதமான அறிவியல்கள், உண்மையான நேரிய வழிகாட்டல்கள் ஒருபோதும் மனிதர்களின் கருத்துகளில் இருக்க முடியாது. அதுவும் அவை ஹதீஸுக்கு மாற்றமாக இருக்கும்போது.

10. மனிதர்களின் கருத்துக்கு முக்கியத்துவம் கொடுத்து ஹதீஸில் விளையாடுவது நபி ﷺ அவர்களை அவமதிப்பதும், அவர்களை நபியாக அல்லாஹ் அனுப்பிய விஷயத்தில் அல்லாஹ்வின் அறிவை சந்தேகப்படுவதும் ஆகும்.

11. நபி ﷺ அவர்களின் காலத்தில் மார்க்கத்தில் இரு கூட்டங்கள் இருந்தார்கள். ஒரு கூட்டம் அபூ பக்ரும் அவர்களின் வழியில் இருந்த முஃமின்கள் என்ற நபித்தோழர்கள். இன்னொரு கூட்டம் அப்துல்லாஹ் இப்னு உபை இப்னு சலூல் என்ற நயவஞ்சகனும் அவனது வழியில் வந்த முனாஃபிக்குகள்.

12. முஃமின்களை அல்லாஹ் பொருந்திக் கொண்டு அவர்களுக்கு சொர்க்கத்தை வாக்களித்தான். முனாஃபிக்குகளை அல்லாஹ் சபித்து, அவர்கள் மீது கோபம் கொண்டு அவர்களுக்கு நரகத்தை உறுதி செய்தான்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான் :

﴿لَٰكِنِ الرَّسُولُ وَالَّذِينَ آمَنُوا مَعَهُ جَاهَدُوا بِأَمْوَالِهِمْ وَأَنْفُسِهِمْ

وَأُولَٰئِكَ لَهُمُ الْخَيْرَاتُ وَأُولَٰئِكَ هُمُ الْمُفْلِحُونَ ○ أَعَدَّ اللَّهُ لَهُمْ جَنَّاتٍ
تَجْرِي مِنْ تَحْتِهَا الْأَنْهَارُ خَالِدِينَ فِيهَا ذَٰلِكَ الْفَوْزُ الْعَظِيمُ○﴾

பொருள் : எனினும் (அல்லாஹ்வுடைய) தூதரும், அவருடனுள்ள நம்பிக்கையாளர்களும் தங்கள் பொருள்களையும் உயிர்களையும் தியாகம் செய்து போர் புரிவார்கள். (இம்மை, மறுமையின்) நன்மைகள் அனைத்தும் இவர்களுக்குத்தான் உரியன. நிச்சயமாக இவர்கள்தான் வெற்றியாளர்கள். அல்லாஹ், அவர்களுக்காக சொர்க்கங்களை தயார் செய்துவைத்திருக்கிறான் அவற்றில் நீரருவிகள் தொடர்ந்து ஓடிக்கொண்டேயிருக்கும். அவற்றில் அவர்கள் (என்றென்றும்) தங்கிவிடுவார்கள். இதுவே மாபெரும் பாக்கியமாகும்.

(அல்குர்ஆன் 9 : 88-89)

﴿إِنَّ الْمُنَافِقِينَ فِي الدَّرْكِ الْأَسْفَلِ مِنَ النَّارِ وَلَنْ تَجِدَ لَهُمْ نَصِيرًا○﴾

பொருள் : நிச்சயமாக இந்நயவஞ்சகர்கள் நரகத்திலும் கீழ்ப்பாகத்தில்தான் இருப்பார்கள். (அங்கு) அவர்களுக்கு உதவி செய்யும் எவரையும் நீர் காணமாட்டீர். (அல்குர்ஆன் 4 : 145)

﴿أَلَمْ تَرَ إِلَى الَّذِينَ نُهُوا عَنِ النَّجْوَىٰ ثُمَّ يَعُودُونَ لِمَا نُهُوا عَنْهُ
وَيَتَنَاجَوْنَ بِالْإِثْمِ وَالْعُدْوَانِ وَمَعْصِيَتِ الرَّسُولِ وَإِذَا جَاءُوكَ حَيَّوْكَ
بِمَا لَمْ يُحَيِّكَ بِهِ اللَّهُ وَيَقُولُونَ فِي أَنْفُسِهِمْ لَوْلَا يُعَذِّبُنَا اللَّهُ بِمَا نَقُولُ
حَسْبُهُمْ جَهَنَّمُ يَصْلَوْنَهَا فَبِئْسَ الْمَصِيرُ○﴾

பொருள் : (நபியே!) ரகசியமே கூடாதென்று தடுக்கப்பட்டிருந்தும், தடுக்கப்பட்டதை நோக்கியே செல்லும் அவர்களை நீர் கவனித்தீரா? பாவத்திற்கும், வரம்பு மீறுவதற்கும், (நம்) தூதருக்கு மாறு செய்வதற்குமே, அவர்கள் ரகசியமாகச் சதி ஆலோசனை செய்கின்றனர். பின்னர் அவர்கள் உங்களிடம் வந்தாலோ, அல்லாஹ் உங்களுக்குக் கூறாத

வார்த்தையைக் (கொண்டு, அதாவது: "அஸ்ஸலாமு அலைக்க' உம்மீது சாந்தியும், சமாதானமும் உண்டாவதாக! என்று கூறுவதற்குப் பதிலாக, "அஸ்ஸாமு அலைக்க' உமக்கு மரணம் உண்டாவதாக! என்று) கூறிவிட்டு, அவர்கள் தங்களுக்குள் (இவர் உண்மையான தூதராக இருந்தால் "பரிகாசமாக) நாம் கூறியதைப் பற்றி, அல்லாஹ் நம்மை வேதனை செய்யமாட்டானா?" என்றும் கூறுகின்றனர். நரகமே அவர்களுக்குப் போதுமானதாகும். அதில் அவர்கள் நுழைந்தே தீருவார்கள். அது செல்லுமிடங்களில் மகா கெட்டது.

(அல்குர்ஆன் 58 : 8)

பிற்காலத்தில் வந்திருக்கின்ற நாம் நமக்கு கிடைத்த ஸஹீஹான ஹதீஸ்களை முற்றிலும் முழுமையாக ஏற்று மனதிருப்தி அடைந்தால் அல்லாஹு தஆலா அவனது அருளால் நம்மை ஸஹாபாக்களின் கூட்டத்தோடு சேர்த்து வைப்பான். யார் ஒருவர் ஸஹீஹான ஹதீஸ்களில் சந்தேகப்பட்டு அவற்றை மறுப்பாரோ, அல்லது அவற்றை ஏற்றுக் கொள்வதில் தாமதிப்பாரோ அவர் முனாஃபிக்குகளுடைய கூட்டத்தில் தான் சேர்ந்துவிடுவதை பயந்து கொள்ளட்டும்.

இதுவரை நாம் கூறியதில் இருந்து இந்த பாடத்தில் மனிதர்கள் எப்படி வழி கெட்டார்கள் என்பதை நேரிய அறிவுள்ளவர்கள் புரிந்து கொள்வார்கள்.

வழிகேடர்களின் சில வழிகேடுகளை இங்கு குறிப்பிடுவதை மிக அவசியமாக கருதுகிறோம். கல்வியின் ஆரம்ப நிலையில் உள்ள மாணவர்களுக்கு அது பலனுள்ளதாக இருக்கும்.

## வழிகேடுகள் :

1. பின்பற்றுவதில் குர்ஆன் மற்றும் ஹதீஸுக்கு மத்தியில் தரம் பிரிப்பது.

2. மார்க்கத்தை குருட்டுத்தனமாக பின்பற்றக் கூடாது, அறிவோடு பின்பற்ற வேண்டும் என்று கூறி, பிறகு ஹதீஸை மறுக்க, அதற்கு

மாற்றுப் பொருள் கூற வழியை உண்டாக்குவது.

3. ஹதீஸ்களில் சந்தேகம் ஏற்படுத்துவது.

4. ஹதீஸ்களை விட அறிவுக்கு முதலிடம் கொடுப்பது.

5. ரஸூல் அவர்களை விட பிற்காலத்தில் வந்தவர்களின் கருத்துக்களை உயர்வாக பேசுவது.

6. ஹதீஸ்களை புறக்கணித்துவிட்டு மனிதர்களின் அபிப்ராயங்களுக்கு பின்னால் செல்வது.

7. பிற மனிதர்களின் கருத்துக்களை ஏற்கும்போது மனதில் ஏற்படுகின்ற திருப்தி ஹதீஸ்களை ஏற்கும்போது மனதில் ஏற்படாமல் இருப்பது.

8. ஹதீஸை ஆதாரமாக கூறும்போது, இதற்கு எங்கள் இமாம் இப்படி விளக்கம் கூறினார், எங்கள் தலைவர் இப்படி இதற்கு பொருள் கூறினார் என்று கூறி ஹதீஸின் நேரடியான பொருளை மறுப்பது அல்லது மாற்றுவது.

9. ஹதீஸின் பொருளும் கருத்தும் தெளிவாக இருக்கும்போது அதை மறுப்பதற்காக மனிதர்களின் அறிவையும் கருத்துகளையும் தேடி அலைவது.

10. ஹதீஸ் அல்லாத ஒன்றில் சத்தியத்தை தேடுவது.

11. வஹ்யை மட்டும் பின்பற்றுவோம் என்று கூறிவிட்டு ஓதப்படாத வஹ்யாகிய ஹதீஸை நம்புவதிலும் ஏற்றுக் கொள்வதிலும் தாமதம் காட்டுவது, தடுமாறுவது, குழப்பம் செய்வது.

12. ஹதீஸ் வஹ்யு என்பதில் சந்தேகப்படுவது.

13. ஹதீஸைப் படிப்பதை விட பிற மனிதர்களின் கருத்துக்களை முதலில் படிப்பது.

14. ஹதீஸை நேரடியாக படித்தால், அதை அப்படியே ஏற்றுக் கொண்டால் வழிகேடு ஏற்பட்டு விடும் என்று கூறுவது, பரப்புவது.

15. ஹதீஸ்களை பாதுகாக்காமல் மனிதர்களின் கருத்துக்களை பாதுகாக்க முயற்சிப்பது.

16. மனிதர்களின் கருத்துக்காக ஹதீஸை வளைப்பது, மாற்றுவது, மாற்றுப் பொருள் கூறுவது, திரிப்பது.

17. எதோ ஒரு காரணத்திற்காகத்தான் எனது இமாம் இந்த ஹதீஸுக்கு மாற்றமாக தீர்ப்பு கூறி இருப்பார், எனக்கு கிடைத்த இந்த ஹதீஸ் அவருக்கு கிடைத்திருக்காதா? ஹதீஸுக்கு மாற்றமாக கூறக்கூடாது என்று எனது இமாமுக்கு தெரியாதா என்றெல்லாம் காரணம் கூறி ஹதீஸை ஒதுக்கிவிட்டு, மனிதர்களின் கருத்தை எடுத்து, அதன் படி தீர்ப்பு கூறுவது.

18. ஹதீஸை மட்டும் முழுமையாக பின்பற்றி நடப்பவர்களை அறிவியல் தெரியாதவர்கள், கல்விஞானம் அற்றவர்கள் என்று வசைப் பாடுவது.

19. ஹதீஸுக்கு சுய விளக்கம் கொடுப்பதையும் அதற்கு மாற்றுப் பொருள் கூறுவதையும் தவறாக கருதாமல் இருப்பது.

20. إيمان ஈமான் (நம்பிக்கை), إطاعة இதாஅத் (கட்டுப்படுதல்), انقياد இன்கியாத் (பணிந்துவிடுதல்), قبول கபூல் (ஏற்றுக் கொள்ளுதல்) ஆகிய மனப்பான்மையில் இல்லாமல் சந்தேகத்துடன், மாற்றுக் கருத்துடன், ஹதீஸை அணுகுவது.

அல்லாஹு தஆலா நம் அனைவரையும் அவனுக்கும் அவனது தூதர் அவர்களுக்கும் முற்றிலும் கட்டுப்பட்ட நல்லோரில் ஆக்குவானாக! சந்தேக நோயிலிருந்தும் நபி ﷺ அவர்களுக்கு முரண்படுவதிலிருந்தும் நம்மை பாதுகாப்பானாக! ஆமீன்.

---------------------

وَلَا تَكُ مِنْ قَوْمٍ تَلَهَّوْا بِدِيْنِهِمْ

فَتَطْعَنَ فِي أَهْلِ الْـحَدِيْثِ وَتَقْدَحُ

**பொருள் :**

தங்களது மார்க்கத்துடன் விளையாடிய மக்களில் நீ ஆகிவிடாதே! ஹதீஸ் அறிஞர்களைப் பற்றி நீ குறைகூறி, பழிக்காதே!

**கருத்து :**

மார்க்கத்தை பின்பற்றுவதில் மிக கவனமாக இருக்க வேண்டும். மார்க்கத்தின் எந்த ஒரு சட்டத்தையும் விளையாட்டாக, இலேசாக எடுக்க கூடாது. ஹதீஸ்கள்தான் மார்க்கமாகும். எந்த ஒரு ஸஹீஹான ஹதீஸையும் தவறாக விமர்சனம் செய்யக் கூடாது. ஹதீஸ் அறிவிப்பதில் நம்பத் தகுந்த அறிவிப்பாளர்களை குறைக் கூறுவது, அவர்களை தரம் தாழ்த்திப் பேசுவது கூடாது.

**விளக்கம் :**

இந்தக் கவிதையில் இரண்டு சட்டங்கள் கூறப்பட்டுள்ளன.

1. மார்க்கத்தை விளையாட்டாக எடுத்துக் கொள்ளக் கூடாது.

2. ஹதீஸ் கலை அறிஞர்களை விமர்சனம் செய்வது, அவர்களை குறை பேசுவது கூடாது.

இந்த இரண்டு சட்டங்களை முறையாக விளக்குவோம்.

முதல் சட்டத்தின் விளக்கம் :

அல்லாஹ் மகா ஞானவான், அனைத்தையும் அறிந்த கல்வியாளன், அவன் மிக்க கண்ணியமானவன். அவன் எதையும் விளையாட்டாக

செய்ய மாட்டான். அவனது ஒவ்வொரு செயலும் ஞானம் மற்றும் மதி நுட்பத்துடன் கூடியதாகும். அல்லாஹ்வின் செயல்களில் எதுவும் வீணானதும் விளையாட்டானதும் இல்லை. அனைத்தும் உண்மையே. அப்படித்தான் அல்லாஹ்வுடைய மார்க்கம். அல்லாஹ்வுடைய தீனில் நமக்கு கூறப்பட்ட அனைத்தும் நாம் அதை எடுத்து நடப்பதற்கும், பின்பற்றுவதற்கும் ஆகும். அல்லாஹ் உடைய மார்க்க சட்டங்கள், வழிகாட்டல்கள், ஒழுக்கங்கள், ஏவல், விலக்கல்கள் இப்படி அனைத்தும் ஒரு உயர்வான குறிக்கோளுடன் நமக்கு கொடுக்கப்பட்டவை ஆகும்.

ஆகவே, மார்க்கத்தை நாம் மிகவும் கண்ணியமாக, மரியாதையாக, அன்போடும் பயத்தோடும் அணுக வேண்டும். மார்க்கத்தின் எந்த ஒரு சட்டத்தையும் நாம் விளையாட்டாக, தமாஷாக, கேலி கிண்டலாக எடுத்துக் கொள்ளக் கூடாது.

அல்லாஹ்வின் மார்க்கம் என்பது அல்லாஹ்வின் வேதம் அல்குர்ஆனும் நபி ﷺ அவர்களும் அவர்களின் ஹதீஸும் ஆகும். யார் அல்லாஹ்வின் மார்க்க சட்டம் ஒன்றை விளையாட்டாக, கேலியாக எடுத்துக் கொண்டாரோ அவர் அல்லாஹ்வையும் அவனது குர்ஆனையும் அவனது நபியையும் நபி ﷺ அவர்களின் ஹதீஸையும் பரிகாசம் செய்தவர், கேலி செய்தவர் ஆவார். இது மிக ஆபத்தான காரியமாகும்.

அல்லாஹு தஆலா இது பற்றி பல வசனங்களில் எச்சரிக்கின்றான்.

﴿قُلْ أَبِاللَّهِ وَآيَاتِهِ وَرَسُولِهِ كُنْتُمْ تَسْتَهْزِئُونَ۝﴾

பொருள் : அதற்கு (நபியே! அவர்களை நோக்கி), அல்லாஹ்வையும், அவனது வசனங்களையும், அவனது தூதரையுமா நீங்கள் பரிகசிக்கிறீர்கள்? என்று நீர் கேட்பீராக. (அல்குர்ஆன் 9 : 65)

﴿وَلَا تَتَّخِذُوا آيَاتِ اللَّهِ هُزُوًا۝﴾

பொருள் : ஆகவே, அல்லாஹ்வுடைய வசனங்(களில் கூறப்பட்டுள்ள சட்டங்)களைப் பரிகாசமாக எடுத்துக் கொள்ளாதீர்கள்.

(அல்குர்ஆன் 2 231)

﴿وَإِذَا نَادَيْتُمْ إِلَى الصَّلَاةِ اتَّخَذُوهَا هُزُوًا
وَلَعِبًا ذَٰلِكَ بِأَنَّهُمْ قَوْمٌ لَا يَعْقِلُونَ۝﴾

பொருள் : நீங்கள் (மக்களைத்) தொழுகைக்கு (அல்லாஹ்வை வணங்க) அழைத்தால் அதை அவர்கள் பரிகாசமாகவும், விளையாட்டாகவும் எடுத்துக் கொள்கின்றனர். மெய்யாகவே அவர்கள் (முற்றிலும்) அறிவில்லாத மக்களாக இருப்பதுதான் இதற்குரிய காரணமாகும்!

(அல்குர்ஆன் 5 : 58)

﴿وَمَا نُرْسِلُ الْمُرْسَلِينَ إِلَّا مُبَشِّرِينَ وَمُنْذِرِينَ وَيُجَادِلُ الَّذِينَ
كَفَرُوا بِالْبَاطِلِ لِيُدْحِضُوا بِهِ الْحَقَّ وَاتَّخَذُوا آيَاتِي وَمَا أُنْذِرُوا
هُزُوًا۝﴾

பொருள் : நற்செய்தி கூறுபவர்களாகவும், அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவர்களாகவுமே நாம் நம் தூதர்களை அனுப்பி வைத்திருக்கிறோம். எனினும், நிராகரிப்பவர்களோ (நம் தூதர்கள் கொண்டு வந்த) சத்தியத்தை அழித்துவிடக் கருதி வீணான தர்க்கங்கள் செய்ய ஆரம்பித்து நம் வசனங்களையும் அவர்களுக்கு அச்சமூட்டி எச்சரிக்கப்பட்ட (தண்டனை வருவ)தையும் பரிகாசமாக எடுத்துக் கொள்கிறார்கள். (அல்குர்ஆன் 18 : 56)

﴿أُولَٰئِكَ الَّذِينَ كَفَرُوا بِآيَاتِ رَبِّهِمْ وَلِقَائِهِ فَحَبِطَتْ أَعْمَالُهُمْ فَلَا
نُقِيمُ لَهُمْ يَوْمَ الْقِيَامَةِ وَزْنًا ۝ ذَٰلِكَ جَزَاؤُهُمْ جَهَنَّمُ
بِمَا كَفَرُوا وَاتَّخَذُوا آيَاتِي وَرُسُلِي هُزُوًا۝﴾

பொருள் : இவர்கள்தான் தங்கள் இறைவனின் வசனங்களையும் அவனுடைய சந்திப்பையும் நிராகரித்து விட்டவர்கள். ஆகவே, அவர்களுடைய நன்மைகள் அனைத்தும் அழிந்துவிட்டன. (நன்மை, தீமையை நிறுக்க) அவர்களுக்காக மறுமை நாளில் எடைக் கோலையும் நாம் நிறுத்த மாட்டோம். அவர்கள் நம் வசனங்களையும், நம் தூதர்களையும் நிராகரித்து பரிகாசமாக எடுத்துக் கொண்டதன் காரணமாக அவர்களுக்குக் கூலி நரகம்தான்.

(அல்குர்ஆன் 18 : 105-106)

﴿وَإِذَا رَأَوْكَ إِنْ يَتَّخِذُونَكَ إِلَّا هُزُوًا أَهٰذَا الَّذِي بَعَثَ اللّٰهُ رَسُولًا○﴾

பொருள் : (நபியே!) இவர்கள் உம்மைக் கண்டால் உம்மைப் பற்றி "இவரையா அல்லாஹ் (தன்) தூதராக அனுப்பி வைத்தான்?" என்று பரிகாசமாகக் கூறுகின்றனர். (அல்குர்ஆன் 25 : 41)

﴿وَمِنَ النَّاسِ مَنْ يَشْتَرِي لَهْوَ الْحَدِيثِ لِيُضِلَّ عَنْ سَبِيلِ اللّٰهِ
بِغَيْرِ عِلْمٍ وَيَتَّخِذَهَا هُزُوًا أُولٰئِكَ لَهُمْ عَذَابٌ مُهِينٌ○﴾

பொருள் : (இவர்களைத் தவிர) மனிதரில் பலர் இருக்கின்றனர். அவர்கள் (பொய்யான கட்டுக்கதைகள் முதலிய) வீணான விஷயங்களை விலைக்கு வாங்கி (அவற்றை மக்களுக்கு ஓதிக் காண்பித்து) அல்லாஹ்வுடைய மார்க்கத்தில் இருந்து ஞானமின்றி மக்களை வழிகெடுத்து அதைப் பரிகாசமாகவும் எடுத்துக் கொள்கின்றனர். இவர்களுக்கு இழிவு தரும் வேதனை நிச்சயமாக உண்டு. (அல்குர்ஆன் 31 : 6)

﴿وَيْلٌ لِكُلِّ أَفَّاكٍ أَثِيمٍ ○ يَسْمَعُ آيَاتِ اللّٰهِ تُتْلَىٰ عَلَيْهِ ثُمَّ يُصِرُّ
مُسْتَكْبِرًا كَأَنْ لَمْ يَسْمَعْهَا فَبَشِّرْهُ بِعَذَابٍ أَلِيمٍ ○ وَإِذَا عَلِمَ
مِنْ آيَاتِنَا شَيْئًا اتَّخَذَهَا هُزُوًا أُولٰئِكَ لَهُمْ عَذَابٌ مُهِينٌ○﴾

பொருள் : (இவ்வாறு நிராகரித்துவிட்டுப் பொய்யான தெய்வங்களைக்) கற்பனையாகக் கூறும் பாவிகளுக்கெல்லாம் கேடுதான்! அவர்கள் அல்லாஹ்வின் வசனங்கள் தங்களுக்கு ஓதிக் காண்பிக்கப்பட்டதை செவிமடுத்து விட்டு பின்னர், அதை செவிமடுக்காதவர்களைப்போல் கர்வம் கொண்டு (நிராகரிப்பின் மீதே) பிடிவாதமாக இருக்கிறார்கள். அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையைக் கொண்டு (நபியே!) நற்செய்தி கூறுவீராக. நம் வசனங்களில் எதை அவர்கள் அறிந்த போதிலும், அதை அவர்கள் பரிகாசமாகவே எடுத்துக் கொள்கின்றனர். இவர்களுக்கு இழிவு தரும் வேதனை உண்டு.

(அல்குர்ஆன் 45 : 7-9)

மேற்கூறப்பட்ட அனைத்து வசனங்களும் கூறக்கூடிய ஒருமித்த கருத்து என்னவென்றால், அல்லாஹ்வின் மார்க்கத்தையோ அவனுடைய நபியையோ நாம் எளிதாக எடுத்துக் கொள்ளக் கூடாது. எந்த ஒரு சட்டத்தையும் பரிகாசம் செய்யக் கூடாது. நமக்குள் ஒருவரின் பேச்சை விளையாட்டாக எடுத்துக் கொள்வது போன்று அல்லாஹ்வின் பேச்சையும் நபி அவர்களின் பேச்சையும் எடுத்துக் கொள்ளக் கூடாது. அது மிக ஆபத்தானதாகும்.

உண்மையான முஸ்லிம் மார்க்கத்திற்கு மிகுந்த மரியாதை கொடுக்க வேண்டும். மார்க்கம் என்ற உடன் உள்ளத்தில் அச்சமும் அன்பும் கண்ணியமும் வர வேண்டும்.

அதாவது, இது அல்லாஹ்வின் சட்டம், இதை நான் பாழாக்கினால் எனக்கு தண்டனை உண்டு என்ற அச்சம் இருக்க வேண்டும். அல்லாஹ்வின் அன்பைக் கொண்டு இந்த மார்க்கத்தின் மீது நமக்கு அன்பும் பாசமும் மார்க்க சட்டங்கள் மீது பற்றும் இருக்க வேண்டும். அல்லாஹ்வின் மீது நமக்கு இருக்கின்ற கண்ணியம் அவனது மார்க்க சட்டங்கள் மீது இருக்க வேண்டும்.

மார்க்கத்தை விளையாட்டாக எடுப்பது என்றால் அதில் இரண்டு விஷயங்கள் உள்ளன.

1. மார்க்கத்தில் அனாச்சாரங்கள் செய்வது, மார்க்கத்தில் இல்லாத

நூதன காரியங்களை செய்வது, மார்க்கத்தின் பெயரால் சடங்கு சம்பிரதாயங்களை செய்வது, வணக்க வழிபாட்டில் மனோ இச்சையை நுழைத்து, புதிய புதிய இபாதத்துகளை செய்வது.

2. மார்க்க சட்டங்களை விடுவது, மார்க்க சட்டங்களை மீறுவது, மார்க்க ஏவல்களை விடுவது, விலக்கல்களை செய்வது, பாவங்கள் செய்வது.

இந்த இரண்டு காரியங்களும் மார்க்கத்தை சரியாக மதிக்காததால் ஏற்படுகின்ற நிலையாகும். மார்க்கத்தை உண்மையாக, சரியாக அறிந்திருந்தால் அவர்கள் அப்படி செய்திருக்க மாட்டார்கள்.

நேர்வழிபெற்ற உண்மை முஸ்லிம் தனது மார்க்கத்தை மதித்து நடப்பார். மார்க்கத்தை மதிப்பது என்பது அதன் சட்டங்களை மதிப்பதாகும். அதாவது மார்க்கத்தில் ஏவப்பட்டதை செய்வதும் தடுக்கப்பட்டதை விடுவதும் பித்அத்துகளை, அனாச்சாரங்களை தவிர்ப்பதும் ஆகும்.

இரண்டாவது சட்டத்தின் விளக்கம் :

**ஹதீஸ் கலை அறிஞர்களை விமர்சனம் செய்வது, அவர்களை குறை பேசுவது கூடாது.**

குர்ஆனை நமக்கு அல்லாஹு தஆலா நபி ﷺ அவர்களின் வாயிலாக வழங்கினான். நபி ﷺ அவர்கள் நமக்கு அல்லாஹ்வை அறிமுகம் செய்தார்கள். அவனை வணங்குவதின் பக்கம் நம்மை அழைத்தார்கள். அவனது மார்க்க சட்டங்களை நமக்கு கற்றுக் கொடுத்தார்கள். அல்லாஹ்வின் வசனங்களைக் கொண்டு அல்லாஹ்விற்கு என்ன நோக்கம் என்பதை நபி ﷺ அவர்கள்தான் நமக்கு தெளிவுப் படுத்தினார்கள். நபி ﷺ அவர்களின் சொல், செயல், வாழ்க்கை அனைத்தும் நமக்கு ஹதீஸ்களில்தான் பாதுகாக்கப் பட்டுள்ளது. ஆகவேதான் இந்த உம்மத்தின் மூத்த அறிஞர்கள் இஸ்லாம் எனபது ஸுன்னா ஆகும் என்றும் ஸுன்னாதான் இஸ்லாம் என்றும் கூறி இருக்கின்றார்கள்.

கண்ணியத்திற்குரிய நபித்தோழர்கள் நபி ﷺ அவர்களுடன் தங்கள் வாழ்நாளை கழித்து மார்க்கத்தை படித்தார்கள். பசி பட்டினியாக கிடந்து ஹதீஸ்களை மனனம் செய்தார்கள். மறந்துவிடாமல் இருக்க அவற்றை தங்களுக்குள் எப்போதும் கல்வி சபைகளில் ஒருவர் மற்றவருடன் பரிமாறிக் கொண்டார்கள். தங்கள் மாணவர்களுக்கு எவ்வித உலகாதாயத்தையும் எதிர்பார்க்கமால் மார்க்கத்தை கற்றுக் கொடுத்தார்கள்; ஹதீஸ்களை மனனம் செய்யவைத்தார்கள்.

நபி ﷺ அவர்களின் உள்ளூர் வாழ்க்கை, பயண வாழ்க்கை, போர், சமாதானம், குடும்ப வாழ்க்கை, இறைவழிபாடு, நற்குணங்கள், இன்னும் நபி ﷺ அவர்களின் கவலை, சிரிப்பு, அழுகை, அமைதி, பேச்சு, கோபம், அதிருப்தி என அனைத்தையும் தங்கள் கண்ணால் பார்த்து அறிந்ததை அடுத்த தலைமுறைக்கு நம்பகத்தன்மையுடன், கூடுதல் குறைவின்றி அறிவித்தார்கள். இதன் பொருட்டால் அந்த தலைமுறை நபியுடன் வாழவில்லை என்றாலும் ஹதீஸ்களை படிக்கும்போது நபியை கண்ணால் பார்ப்பது போன்று ஒரு நிலை அவர்களுக்கு ஏற்பட்டது. இப்படியாக ஒவ்வொரு காலத்தில் வாழ்ந்த ஹதீஸ் கலை அறிஞர்கள் தங்கள் வாழ்க்கையை ஹதீஸ்களுக்காக அர்ப்பணம் செய்து, அவற்றை மனனம் செய்து, அடுத்த தலைமுறைக்கு அவற்றை பாதுகாத்து கொடுத்தார்கள். அல்லாஹு தஆலா அவனது மார்க்கத்தின் பாதுகாப்புக்காக அந்த அறிவிப்பாளர்களை, ஹதீஸ் கலை அறிஞர்களை தேர்ந்தெடுத்தான்.

முதன் முதலாக அவனது மார்க்கத்தை பரப்புவதற்கும் அதன் பக்கம் மக்களை அழைப்பதற்கும் நபிமார்களை தேர்ந்தெடுத்தது போன்று நபிமார்களுக்கு பின்னர் அவர்களின் சொல், செயல்களை பாதுகாத்து கொடுக்கின்ற தோழர்களை அல்லாஹ் தேர்ந்தெடுத்தான். ஆனால், அந்த தோழர்கள் இறந்த பின்னர் மக்கள் மனோ இச்சைக்கு பின்னால் சென்று மார்க்கத்தில் கூடுதல் குறைவு செய்து விட்டனர். நபிமார்களின் மார்க்கத்தை மாற்றிவிட்டனர். பிறகு, அடுத்து ஒரு நபியை அனுப்பி அல்லாஹு தஆலா தனது மார்க்கத்தை புதுப்பித்தான். இறுதியாக நமது நபி ﷺ அவர்களை அல்லாஹ் அனுப்பி இந்த மார்க்கத்தை இறுதிநாள் வரை பாதுகாத்தான்.

நபிமார்களின் வருகையை நமது நபியுடன் நிறைவு செய்து இனி ஒரு நபி வரவேண்டிய தேவை இல்லாமல் செய்துவிட்டான். மற்ற நபிமார்களுடைய உம்மத்துகள் மார்க்கத்தை பாதுகாக்க தவறியது போன்று அல்லாமல் நமது நபியுடைய மார்க்கத்தில் மார்க்கத்தை பாதுகாக்கக்கூடிய கல்விமான்களை அல்லாஹ் தேர்ந்தெடுத்தான். மார்க்கத்தை கற்பதையும் அதை பாதுகாப்பதையும் அதைப் பரப்புவதையும் அந்த அறிஞர்கள் மிக அழகாக செய்தார்கள்.

இதைப் பற்றி நபி ﷺ அவர்கள் இவ்வாறு முன் அறிவிப்பு செய்தார்கள்.

**عَنِ الْمُغِيرَةِ بْنِ شُعْبَةَ رضي الله عنه عَنِ النَّبِيِّ ﷺ قَالَ لاَ يَزَالُ طَائِفَةٌ مِنْ أُمَّتِي ظَاهِرِينَ حَتَّىٰ يَأْتِيَهُمْ أَمْرُ اللهِ وَهُمْ ظَاهِرُونَ رَوَاهُ الْبُخَارِيُّ رحمه الله**

எனது உம்மத்தில் ஒரு சாரார் சத்தியத்தில் என்றும் ஓங்கி உறுதியாக இருப்பார்கள். அல்லாஹ்வின் கட்டளை (உலக முடிவு நாள்) வரும் வரை அவர்கள் (சத்தியத்தில்) ஓங்கி இருப்பார்கள்.[63]

இந்த ஹதீஸில் வந்துள்ள கூட்டம் கல்வியாளர்கள் என்று இமாம் புகாரி رحمه الله அவர்கள் விளக்கம் கூறுகிறார்கள்.

**عَنْ ثَوْبَانَ رضي الله عنه قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ لَا تَزَالُ طَائِفَةٌ مِنْ أُمَّتِي ظَاهِرِينَ عَلَى الْحَقِّ لَا يَضُرُّهُمْ مَنْ خَذَلَهُمْ حَتَّىٰ يَأْتِيَ أَمْرُ اللهِ وَهُمْ كَذٰلِكَ رَوَاهُ مُسْلِمٌ رحمه الله**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள் : எனது உம்மத்தில் ஒரு சாரார் சத்தியத்தில் ஓங்கி உறுதியாக இருப்பார்கள். அவர்களை கைவிட்டவர்கள் அவர்களுக்கு தீங்கு செய்ய முடியாது. இதே நிலையில் அவர்கள் இருப்பார்கள், அல்லாஹ்வின் கட்டளை வரும் வரை.[64]

63. அறிவிப்பாளர் : அல்முகீரா இப்னு ஷுஅபா رضي الله عنه, நூல் : புகாரி, எண் : 7311
64. அறிவிப்பாளர் : சவ்பான் رضي الله عنه, நூல் : முஸ்லிம், எண் : 1920

இந்த ஹதீஸ்களில் கூறப்பட்டுள்ள அந்த சாரார் ஹதீஸ் கலை அறிஞர்கள்தான் என்று பல இமாம்கள் கருத்து கூறி இருக்கின்றார்கள்.

ஹதீஸ்களை கற்பதற்கும் அவற்றை மனனம் செய்வதற்கும் அவற்றை மக்களுக்கு மத்தியில் பரப்புவதற்கும் அவற்றை கற்றுக் கொடுப்பதற்கும் நபி ﷺ அவர்கள் ஏராளமான சிறப்புகளை கூறி இருக்கின்றார்கள். அந்த சிறப்புகளை அடையும் பொருட்டு, அல்லாஹ்வின் பொருத்தத்தை மட்டும் நாடி இந்த உம்மத்தின் இலட்சக்கணக்கான அறிஞர்கள் முன்னோரிலும் பின்னோரிலும் தங்கள் வாழ்க்கையை ஹதீஸ்களுக்காக அர்ப்பணித்துக் கொண்டார்கள். அவர்கள் மூலம்தான் இந்த மார்க்கம் கலப்படம் இல்லாமல் பாதுகாக்கப்பட்டு நம் வரை வந்துள்ளது. இந்த உம்மத்தில் உள்ள பொது மக்கள், அறிஞர்கள் எல்லோரிடமும் மார்க்கம் இருந்தாலும் அது அவர்களிடம் கலப்படமாகி இருக்கின்றது. ஹதீஸ் கலை அறிஞர்களிடம் மட்டும்தான் மார்க்கம் பரி சுத்தமாக இருக்கின்றது. அவர்கள் இந்த மார்க்கத்தில் கூட்டுதல் குறைத்தல் இல்லாமல் மார்க்கத்தை நபி ﷺ அவர்கள் விட்டுவிட்டு சென்ற அதே நிலையில் பாதுகாத்து வைத்துள்ளார்கள்.

ஸஹாபாக்களிடம் மார்க்கம் இருந்தது போன்று ஹதீஸ்கலை அறிஞர்களிடம்தான் இன்றும் மார்க்கம் பாதுகாப்பாக இருக்கின்றது என்று கூறினால் அது மிகை ஆகாது.

நபி ﷺ அவர்கள் நம்முடன் இன்று உயிருடன் இல்லை என்றாலும் நாம் அவர்களின் காலத்தில் வாழ்ந்து அவர்களை கண்ணால் பார்த்தால், அவர்களுடன் பழகினால் எப்படி இருக்குமோ அத்தகைய ஓர் உன்னதமான உணர்வை நமக்கு ஹதீஸ் கலை அறிஞர்கள் ஹதீஸ்களை பாதுகாத்து கொடுத்ததன் வாயிலாக செய்துள்ளார்கள். அல்ஹம்து லில்லாஹ்.

ஆகவே, இந்த உம்மத்தில் ஹதீஸ்களை பாதுகாத்த ஸஹாபாக்கள், குறிப்பாக அவர்களில் ஹதீஸ்களை அறிவித்த அறிவிப்பாளர்கள், மற்றும் அவர்களுக்கு பின்னால் வந்த நம்பத்தகுந்த ஹதீஸ்

அறிவிப்பாளர்களை நாம் கண்ணியமாக நடத்த வேண்டும்; கண்ணியமாக பேச வேண்டும். அவர்களுக்காக துஆ கேட்க வேண்டும்; அவர்களின் நற்குணங்களை எடுத்து சொல்ல வேண்டும். அவர்களை தரம் தாழ்த்தி பேசுவது அறவே கூடாது.

சிலர் கூறுகின்றனர் : ஹதீஸ் அறிவிப்பாளர்கள் எல்லாம் மருந்து விற்பவர்கள்தான். ஃபிக்ஹ் கலை அறிஞர்கள்தான் மருத்துவர்கள்.

அதாவது ஹதீஸ்களை அறிவித்த ஸஹாபாக்களுக்கும் தாபிஈன்களுக்கும் இன்னும் ஹதீஸ் கலை இமாம்களுக்கும் வெறும் ஹதீஸ்தான் தெரியும். அதில் சட்ட நுணுக்கங்கள் ஃபிக்ஹ் கலை அறிஞர்களுக்குத்தான் தெரியும். அவர்கள் இவ்வாறு கூறிவிட்டு அபூ ஹுரைரா ﷺ அவர்கள் ஃபிக்ஹ் அறியாதவர், அவர் சட்ட வல்லுநர் அல்ல என்று கூறுகின்றனர். மேலும் பல நபித்தோழர்களையும் இமாம் புகாரி ﷺ போன்ற ஹதீஸ்கலையின் பல மலைகளையும் பற்றி அவர்கள் ஃபிக்ஹ் -மார்க்க சட்ட நுணுக்கம் அறியாதவர்கள் என்று நாக்கூசாமல் கூறுகின்றனர்.

இது ஒரு மோசமான வழிகேடாகும். முற்காலத்திலும் இந்த சிந்தனை உள்ள சிலர் இருந்தனர். இக்காலத்திலும் அவர்களின் வழித் தோன்றல்கள் இருக்கின்றனர். அவர்கள் தங்களை பெரிய அறிவாளிகளாக மக்களுக்கு முன் காட்டிவிட்டு, ஹதீஸ்களை மனனம் செய்த, ஹதீஸ்களை கற்ற அறிஞர்களை ஆராய்ச்சி ஞானம் இன்னும் சட்டம் எடுக்கும் அறிவு இல்லாதவர்களாக சித்தரிக்கின்றனர்.

உண்மையில் அந்த ஹதீஸ் கலை அறிஞர்களின் கல்விக்கு முன்னால் இவர்களின் கல்வி மலைக்கு முன்னால் ஒரு சிறு மடுவைப் போல்தான். அது கூட இல்லை என்று சொல்லலாம். அவர்களின் கல்வி ஒரு சமுத்திரம் என்றால் இவர்களின் கல்வி ஒரு துளிதான்.

ஆகவே, மார்க்கத்தை பேணக்கூடிய நல்லொழுக்கம் உள்ள முஸ்லிம் ஹதீஸ் அறிவிப்பாளர்களை மதிக்க வேண்டும். அவர்களுக்கு துஆ கேட்க வேண்டும். அவர்கள் மீது எப்போதும் நன் மதிப்பு வைக்க வேண்டும். அவர்களை வாழ்த்தி, அவர்களின் மேன்மைகளையும்

அவர்களின் தியாகங்களையும் மக்களுக்கு எடுத்து சொல்ல வேண்டும்.

இதற்கு மாறாக அவர்களை மட்டமாக, தரக்குறைவாக பேசுவது, அவர்களை புறக்கணிப்பது, அவர்களை இகழ்வது, அவர்களை விமர்சிப்பது ஒரு மனிதனின் மார்க்கப் பற்றுக்கு இழுக்காகும்.

ஹதீஸ் கலை அறிஞர்களையும் ஹதீஸ்களை பின்பற்றுகின்றவர்களையும் யார் விமர்சனம் செய்கிறார்களோ அவர்கள், கண்டிப்பாக மார்க்கத்தில் குறை உள்ளவர்கள்; அனாச்சாரம் செய்பவர்கள்; நூதன சடங்குகளை மார்க்கத்தில் புகுத்துகின்ற பித்அத் வாதிகள்; தர்க்க அறிவை வைத்து மார்க்க ஆதாரங்களை புரட்டுகின்ற வழிகேடர்கள் ஆவார்கள். நமது சான்றோர் உடைய இதுபோன்ற எச்சரிக்கைகள் அதிகம் உள்ளன.

இந்த கவிதையில் அஹ்லுல் ஹதீஸ் என்று கூறப்பட்டுள்ள வார்த்தை இரு கூட்டத்தை எடுத்துக் கொள்ளும்.

1. ஹதீஸ்களை கற்றறிந்த மார்க்க அறிஞர்கள்.

2. ஹதீஸ்களின் படி மார்க்கத்தை பின்பற்றுகின்றவர்கள், கொள்கை, மற்றும் அமல் சார்ந்த பித்அத்துகளை விட்டும் விலகி இருப்பவர்கள். இவர்கள் அறிஞர்களாக இல்லை என்றாலும் இவர்களும் அஹ்லுல் ஹதீஸ் என்ற பெயரில் அடங்குவார்கள்.

ஆகவே, ஹதீஸின் படி தனது மார்க்கத்தை அமைத்துக் கொண்டு, மார்க்க அமல்களை செய்பவர்களை பல பட்டப் பெயர்களை கொண்டு இழிவாக பேசுவது அவர்களை அசிங்கப்படுத்துவது வழிகேடர்களின் செயலாகும். மார்க்கத்தை புரியாத மூடர்கள்தான் இப்படி செய்வார்கள். அவர்கள் பார்ப்பதற்கு அறிஞர்களின் தோற்றத்தில் தெரிந்தாலும் சரி. உதாரணமாக அஹ்லுல் ஹதீஸை அஹ்லுல் ஹதஸ் என்று கூறுவது, கைரு முகல்லித் என்று கூறுவது, இன்னும் இது போன்ற தவறான பட்டப் பெயர்களைக் கொண்டு அவர்களை அழைப்பது பித்அத்வாதிகளின் செயலாகும்.

நபி ﷺ அவர்களின் ஹதீஸ்களை தூய்மையாக பின்பற்றுகின்றவர்கள் உண்மையில் ஸஹாபாக்கள் போன்றவர்கள். அவர்களை மதிப்பதும் அவர்களின் கண்ணியத்தை பேணுவதும் நம்மீது கடமையாகும்.

இந்த கவிதை மற்றும் அதன் விளக்க உரையிலிருந்து நாம் பல விஷயங்களை கற்றுக் கொண்டோம். அவற்றின் சுருக்கத்தை நாம் நினைவுப்படுத்திக் கொள்வோம்.

**சுருக்கம் :**

1. மார்க்கத்தில் மிக கவனமாக இருக்க வேண்டும்.
2. மார்க்க விஷயங்களில், மார்க்க சட்டங்களில் அலட்சியம், விளையாட்டு இருக்கக் கூடாது.
3. மார்க்கத்தின் சிறிய பெரிய சட்டங்கள் அனைத்தையும் மதித்து செய்ய வேண்டியதை செய்து, செய்யக் கூடாததை செய்யாமல் இருக்க வேண்டும்.
4. பித்அத்துகள், பாவங்கள், மாறுபாடுகள் அனைத்தையும் விட்டு விலகி இருக்க வேண்டும்.
5. நபி ﷺ அவர்களை மதிப்பது உண்மை என்றால் ஸஹீஹான ஹதீஸ்களை மதிக்க வேண்டும். இன்னும் ஹதீஸ் கலை இமாம்களையும் அறிஞர்களையும் மதிக்க வேண்டும்.
6. அவர்களை இழிவாக பேசுவதையும், தரம் தாழ்த்துவதையும், விமர்சிப்பதையும் அவர்கள் சட்ட ஞானம் அற்றவர்கள் என்று கூறுவதையும் தவிர்க்க வேண்டும்.

குறிப்பாக கருத்து சுருக்கத்தில் கூறப்பட்ட வழிகாட்டல்களுக்கு மாற்றமாக இருக்கின்ற நிலைப்பாடுகள் அனைத்தும் வழிகேடுகள் ஆகும். அந்த வழிகேடுகளை விட்டு நாம் விலகி இருந்து நமது மார்க்கப் பற்றை பாதுகாத்துக் கொள்ள வேண்டும். ஹதீஸ் அறிஞர்களை விமர்சனம் செய்கிற வழிகேடர்களுக்கு நாம் செவி

சாய்த்து விடக்கூடாது; அவர்களின் பேச்சு நமது காதில் விழுந்து விடாதபடி நமது செவியை பாதுகாக்க வேண்டும். அவர்களின் சபையில் அமர்வது, அவர்களுடன் பழகுவது ஆபத்தானதாகும்.

அல்லாஹு தஆலா நமக்கு குர்ஆன், ஸுன்னாவின் கல்வியை கற்பதற்கும் அதன் படி அமல் செய்வதற்கும் அருள் புரிவானாக! உண்மையான கல்விமான்களுடன் நமக்கு நட்பையும் தோழமையையும் தருவானாக! தீயோர், வழிகெட்டோர், குழப்பவாதிகள் அனைவரிடமிருந்து அல்லாஹ் நம்மை பாதுகாப்பானாக! ஆமீன்.

---------------------

إِذَا مَا اعْتَقَدتَّ الدَّهْرَ يَا صَاحِ هَذِهِ

فَأَنْتَ عَلَىٰ خَيْرٍ تَبِيْتُ وَتُصْبِحُ

**பொருள் :**

என் தோழரே! காலமெல்லாம் இவற்றை நீ நம்பிக்கை கொண்டவனாக இருந்தால் நீ இரவிலும் பகலிலும் நன்மையில் நீடித்திருப்பாய்.

இந்த தொகுப்பை இதன் ஆசிரியர் அபூ பக்ர் இப்னு அபீ தாவூத் அவர்களிடமிருந்து அறிவிக்கின்ற ஹதீஸ் கலை அறிஞர்கள் இப்னு ஷாஹீன், இப்னு ஷாதான், உக்பரி, ஆஜுர்ரி ஆகியோர் இதன் ஆசிரியர் கூறியதாக பின்வருமாறு அறிவிக்கின்றார்கள்:

இதுதான் எனது கூற்றாகும்; இன்னும் எனது தந்தையின் கூற்றாகும்; இன்னும் அஹ்மது இப்னு ஹன்பலின் கூற்றாகும்; இன்னும் கல்விமான்களில் நாங்கள் யாரை சந்தித்தோமோ அவர்களின் கூற்றாகும்; இன்னும் யாரைப் பற்றியெல்லாம் எங்களுக்கு செய்தி கிடைத்ததோ அவர்களின் கூற்றாகும். யார் என் மீது இவை அல்லாத வேறு கூற்றை கூறுவாரோ அவர் திட்டமாக பொய் கூறிவிட்டார்.

**கருத்து :**

இந்த கவிதை தொகுப்பில் கூறப்பட்ட கொள்கைகள்தான் உண்மையும், நேர்வழியும் ஆகும். ஆகவே யார் இந்த கொள்கைகளை நிரந்தரமாக நம்பிக்கைக் கொண்டு, பின்பற்றிவருவாரோ அவர் வாழ்நாளெல்லாம் நல்வழியில் நிலைத்திருப்பார். என்றும் நன்மைகளுடன் வாழ்வார். அல்லாஹ்வின் நன்மைகள் அவரை விட்டு பிரியாமல் இருக்கும்.

**விளக்கம் :**

ஆசிரியர் அவர்கள் இந்த தொகுப்பில் கூறிய அனைத்தும் குர்ஆன் மற்றும் ஸுன்னாவில் நமக்கு போதிக்கப்பட்டுள்ள சரியான கொள்கைகளின் சாராம்சம் ஆகும். நேர்வழியை விரும்புகின்ற ஒவ்வொரு முஸ்லிமுக்கும் இந்த தொகுப்பு மிக பயனுள்ளதாக இருக்கும். ஆகவேதான் இந்த கொள்கையை உனது வாழ்நாளெல்லாம் நீ பின்பற்று என்று ஆசிரியர் நமக்கு அறிவுரை கூறுகிறார்கள்.

இவ்வுலகில் பிறந்த ஒருவர் இஸ்லாமிய மார்க்கத்தின் பக்கம் நேர்வழி பெறுவது அல்லாஹ் அவருக்கு செய்த பேரருள் ஆகும். பிறகு, அவர் அஹ்லுஸ் ஸுன்னா உடைய கொள்கைகளை கற்று அதன் படி தனது நம்பிக்கைகளை அமைத்துக் கொள்வதற்கு வாய்ப்பு கிடைப்பது அவர் மீது அல்லாஹ்வின் இரண்டாவது பேரருள் ஆகும். இஸ்லாமிய மார்க்கத்தின் பெயரில் வழிகெட்டுப் போன கூட்டங்களுக்கு இடையில் அஹ்லுஸ் ஸுன்னா என்ற பிரிவினர்தான் குர்ஆன் மற்றும் ஸுன்னா கூறுகின்ற உண்மையான இஸ்லாமிய நெறியில் நிலைத்து நீடித்து இருக்கின்றனர். மற்றெல்லாப் பிரிவுகளும் மார்க்கத்தில் வரம்பு மீறி விட்டனர்; மார்க்கத்தில் மனோ இச்சையை புகுத்தி விட்டனர்; மார்க்கத்தில் தங்கள் சுய அபிப்ராயப்படி அதிகப்படுத்தி விட்டனர். அல்லது குறைத்து விட்டனர். இவ்வாறு அவர்கள் வழிகேட்டில் ஏதாவது ஒரு பக்கத்தை எடுத்துக் கொண்டு அதை நேர்வழி என்று எண்ணி பின்பற்றி வருகின்றனர். சத்தியம் அவர்களுக்கு சொல்லப்பட்டாலும் உள்ளங்களை பூட்டி வைத்துக் கொண்டதால் அல்லது மூதாதைகளின் மீது இருக்கின்ற அதீத பக்தியால் தங்களது வழிகெட்ட கொள்கையை விட்டு அவர்களால் வெளியேறி வர முடியவில்லை.

பின்வருகின்ற வசனங்கள் அவர்களுக்கு அப்படியே பொருத்தமாக அமைவதை பார்க்கலாம்.

அல்லாஹு தஆலா கூறுகின்றான் :

﴿وَإِذَا قِيلَ لَهُمُ اتَّبِعُوا مَا أَنْزَلَ اللهُ قَالُوا بَلْ نَتَّبِعُ مَا أَلْفَيْنَا عَلَيْهِ آبَاءَنَا أَوَلَوْ كَانَ آبَاؤُهُمْ لَا يَعْقِلُونَ شَيْئًا وَلَا يَهْتَدُونَ﴾

பொருள் : மேலும், அல்லாஹ் இறக்கிவைத்த (இவ்வேதத்)தைப் பின்பற்றுங்கள் என அவர்களுக்குக் கூறப்பட்டால் (அவர்கள்) "இல்லை, எவற்றின் மீது எங்கள் மூதாதைகள் (இருந்து, அவர்கள் எவற்றைச் செய்து கொண்டு) இருக்க நாங்கள் கண்டோமோ அவற்றையே நாங்கள் பின்பற்றுவோம்" எனக் கூறுகின்றனர். அவர்களுடைய மூதாதைகள் ஒன்றையுமே அறியாதவர்களாகவும் நேர்வழி பெறாதவர்களாகவும் இருந்தாலுமா? (அவர்களைப் பின்பற்றுவார்கள்!) (அல்குர்ஆன் 2 : 170)

﴿إِنَّ اللهَ لَعَنَ الْكَافِرِينَ وَأَعَدَّ لَهُمْ سَعِيرًا ○ خَالِدِينَ فِيهَا أَبَدًا لَا يَجِدُونَ وَلِيًّا وَلَا نَصِيرًا ○ يَوْمَ تُقَلَّبُ وُجُوهُهُمْ فِي النَّارِ يَقُولُونَ يَالَيْتَنَا أَطَعْنَا اللهَ وَأَطَعْنَا الرَّسُولَا ○ وَقَالُوا رَبَّنَا إِنَّا أَطَعْنَا سَادَتَنَا وَكُبَرَاءَنَا فَأَضَلُّونَا السَّبِيلَا ○ رَبَّنَا آتِهِمْ ضِعْفَيْنِ مِنَ الْعَذَابِ وَالْعَنْهُمْ لَعْنًا كَبِيرًا ○﴾

பொருள் : மெய்யாகவே அல்லாஹ் நிராகரிப்பவர்களைச் சபித்து, கொழுந்து விட்டெரியும் நெருப்பை அவர்களுக்கு தயார்படுத்தி வைத்திருக்கிறான். அவர்கள் என்றென்றும் அதில்தான் தங்கிவிடுவார்கள். (அவர்களை) பாதுகாப்பவர்களையும் (அவர்களுக்கு) உதவி செய்பவர்களையும் அங்கு அவர்கள் காணமாட்டார்கள். நரகத்தில் அவர்களுடைய முகங்களை புரட்டிப் புரட்டிப் பொசுக்கும் நாளில் "எங்கள் கேடே! நாங்கள் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் கீழ்ப்படிந்திருக்க

வேண்டுமே!" என்று கதறுவார்கள். மேலும் "எங்கள் இறைவனே! நிச்சயமாக நாங்கள் எங்கள் தலைவர்களுக்கும், எங்கள் பெரியவர்களுக்கும் கீழ்ப்படிந்தோம். நாங்கள் தப்பான வழியில் செல்லும்படி அவர்கள் செய்து விட்டார்கள். (ஆகவே) எங்கள் இறைவனே! நீ அவர்களுக்கு இரு மடங்கு வேதனையைக் கொடுத்து, அவர்களை பெரும் சாபத்தால் சபித்துவிடு" என்று கூறுவார்கள்.

(அல்குர்ஆன் 33 : 64-68)

இறை மறுப்பாளர்கள் விஷயத்தில் கூறப்பட்ட இந்த வசனங்கள் வழிகெட்ட கூட்டங்கள் எல்லோருக்கும் பொதுவானதுதான்.

இந்த உலகில் எந்த கொள்கை கோட்பாடுகளிலும் நன்மை இல்லை, இஸ்லாமைத் தவிர. அவ்வாறே இஸ்லாமை யார் வாதிட்டாலும் அவர் இஸ்லாமிய மார்க்கத்தில் அஹ்லுஸ் ஸுன்னா உடைய நேர்வழியைப் பின்பற்றவில்லை என்றால் அவர் நிச்சயமாக பெரிய வழிகேட்டில்தான் இருக்கின்றார். அவரின் வழிகேட்டுக்கு தகுந்தாற்போல் அவர் மறுமையில் அல்லாஹ்வின் தண்டனைக்கு ஆளாகுவார்.

இவ்வுலகத்தில் இஸ்லாமிய மார்க்கத்தின் பரிசுத்தம், சட்டங்கள் இலகுவாக இருப்பது, குணங்கள் உண்மையாகவும், பெருந்தன்மையுடனும் இருப்பது, மனம் உறுதியுடனும் உள்ளம் திருப்தியுடனும் இருப்பது என எண்ணிலடங்கா சிறப்புகள் எல்லாம் அஹ்லுஸ் ஸுன்னாவிற்கே கிடைக்கும். மற்ற பிரிவினர்கள் நேர்வழி கிடைக்கப் பெற்றும் வழிகேட்டையும் மன இச்சையையும் பின்பற்றியதால் அவர்களால் இஸ்லாமிய மார்க்கத்தின் சிறப்புகளை அடைய முடியாது.

வழிகெட்ட பிரிவினர்கள் நடுப்பாதையை தவற விட்டு விட்டனர். பாதையின் இரு ஓரங்களில் ஏதாவது ஒன்றில் ஒதுங்கி விட்டனர். இமாம் இப்னு தைமிய்யா ﵀ அவர்கள் தனது நூல் வாசித்திய்யாவில் அஹ்லுஸ் ஸுன்னா உடைய சிறப்பை இவ்வாறு விவரிக்கிறார்கள் :

அஹ்லுஸ்ஸுன்னா என்று அழைக்கப்படும் நபிவழிகளையும் நபித்தோழர்களையும் பின்பற்றுகின்ற மக்கள்தான் நடுநிலையாளர்கள் ஆவார்கள்.

இஸ்லாமிய சமுதாயம் மற்ற சமுதாயங்களுக்கு மத்தியில் நடுநிலை மிக்க சமுதாயமாக இருப்பது போன்று அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத் என்ற (நபிவழியையும் நபித்தோழர்களையும் பின்பற்றக் கூடிய) கூட்டம் ஏனைய இஸ்லாமியக் கூட்டங்களுக்கு மத்தியில் மிக நடுநிலை மிக்கவர்கள். அல்லாஹ்வின் பண்புகளை மாற்றி, அவனை வருணிக்கும் கூட்டங் களுக்கும், அவனது பண்புகளுக்கு உவமை கூறும் கூட்டங்களுக்கும் இடையில் அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்தினரே நடுநிலையான கொள்கையுடையவர்களாக இருக்கின்றனர்.

இவ்வாறே அல்லாஹ்வின் செயல்கள் பற்றி விவரிக்கும்போது, அவனுடைய விதியை மறுக்கும் கூட்டங்களுக்கும் படைப்பினங்கள், "விதியின் கீழ் நிர்ப்பந்திக்கப்பட்டு, சுய விருப்பத்தை இழந்து இருக்கும் கற்களைப் போன்றவர்கள் எனக் கூறும் கூட்டங்களுக்கு இடையிலும் இவர்கள் நடுநிலையை கொண்டுள்ளார்கள்.

ஈமான் கொண்டால் போதும், அமல் தேவையில்லை என்று கூறும் கூட்டங்களுக்கும், பாவம் செய்தவன் நிரந்தரமாக நரகில் தங்கிவிடுவான் என்று கூறும் கூட்டங்களுக்கு இடையிலும் இவர்கள் நடுநிலையான கொள்கையை கொண்டுள்ளார்கள்.

நபித்தோழர்களை அவமரியாதை செய்து, அவர்களைக் காஃபிர் என்று ஏசும் கூட்டங்களுக்கும், நபியின் குடும்பத்தாரை அளவு கடந்து புகழ்ந்து அல்லாஹ்வின் அந்தஸ்திற்கு உயர்த்தும் கூட்டங்களுக்கு இடையிலும் இவர்கள் நடுநிலையான கொள்கையை கொண்டுள்ளார்கள்.

பெரும்பாவம் செய்தவர் முஃமின் அல்ல என்று சில கூட்டத்தினர் கூறுகின்றனர். வேறு சிலர் பெரும்பாவம் செய்தவர் காஃபிராகி

விட்டார் என்று கூறுகின்றனர். மற்றும் சிலர் ஈமான் கொண்டதன் பின்னர் எவ்வளவுதான் பெரும்பாவங்கள் செய்தாலும் ஈமான் பூரணமாகவே இருக்கும்; அவரது பாவத்தால் ஈமானில் எவ்வித பாதிப்பும் ஏற்படாது என்று கூறுகின்றனர். இம்மூன்று வழி தவறிய கூட்டத்தினர் இடையே அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்தினரே நடுநிலைக் கொள்கை உடையவர்களாக இருக்கின்றனர்.

**நபிவழியையும், நபித்தோழர்களையும் பின்பற்றும் கூட்டத்தினரின் நடுநிலைக் கொள்கை :**

1. அல்லாஹ்வின் அழகிய பெயர்களையும், அப்பெயர்கள் குறிக்கும் பண்புகளையும் அல்லாஹ்வும், அவனது தூதர் முஹம்மது ﷺ அவர்களும் கூறியதுபோல் ஏற்றுக்கொள்ள வேண்டும்.

2. அவனது பெயர்களையும், அப்பெயர்கள் குறிக்கும் பண்புகளையும் படைப்பினங்களின் பெயர்களுடனும், தன்மைகளுடனும் ஒப்பிடக் கூடாது.

3. அல்லாஹ்வின் நாட்டப்படியும், அவனது படைக்கும் ஆற்றலாலும் மனிதனின் செயல்கள் நிகழ்கின்றன என்று கூறுவதுடன் மனிதன் எந்த செயலின் மீதும் நிர்ப்பந்திக்கப்பட்டவன் அல்லன். அவனுக்கு சுய இஷ்டமும், சுய விருப்பமும் உண்டு. அதன் மூலமே ஒரு செயலை செய்கிறான்; அல்லது செய்யாமல் விடுகிறான். ஆகவேதான் நன்மைக்கு நற்கூலியும், பாவத்திற்கு தண்டனையும் கொடுக்கப்படுகின்றான் என்று நம்பிக்கை கொள்ள வேண்டும்.

4. உள்ளத்தால் உறுதியுடன் நம்பிக்கை (ஈமான்) கொள்வதுடன் அமல்களும் செய்ய வேண்டும். பெரும்பாவம் செய்வது குற்றமாகும். பெரும்பாவம் செய்தவர் பாவியாவார். அவர் தவ்பா செய்யாமல் இறந்து விட்டால் அல்லாஹ்வின் நாட்டத்திற்கேற்ப சில காலம் தண்டிக்கப்படலாம். பின்பு சொர்க்கத்தில் அனுமதிக்கப்படுவார். அல்லது அல்லாஹ், அவனது அருளால் அவரை மன்னித்து நரகத்தில் நுழைக்காமலேயே சொர்க்கத்தில் பிரவேசிக்க செய்யலாம் என்று நம்பிக்கை கொள்ள வேண்டும்.

5. பெரும்பாவம் செய்தவர் முஃமின் தான், ஆனால் பாவியாவார். ஈமானை விட்டு வெளியேறி விடவும் மாட்டார்; காஃபிராக ஆகிவிடவும் மாட்டார் என்று நம்பிக்கை கொள்ள வேண்டும். பாவியை "பரிபூரணமான முஃமின் என்றோ காஃபிர் என்றோ கூறமாட்டோம்.

6. நபித்தோழர்களில் நபியின் குடும்பத்தாரை அவர்களுக்குரிய கண்ணியமான அந்தஸ்தில் வைக்க வேண்டும். அவர்கள் முஃமின்கள், முஸ்லிம்கள், நபியின் குடும்பத்தார்கள், உறவினர்கள் என்று அவர்களை நேசிக்க வேண்டும். அவ்வாறே மற்ற நபித்தோழர்களையும் அவரவர்களுக்கு மார்க்கம் வழங்கியுள்ள கண்ணியத்தைக் கொடுத்து அவர்களுக்கு அல்லாஹ்வின் பொருத்தமும், பாவ மன்னிப்பும் கிடைக்க துஆவும் செய்ய வேண்டும். இமாம் இப்னு தைமிய்யாவின் கூற்று முடிவுற்றது

ஆகவே, நபி ﷺ அவர்களும் அவர்களின் உத்தம தோழர்களும் வழிகாட்டிய வழிமுறைதான் அஹ்லுஸ் ஸுன்னா உடைய வழிமுறை ஆகும். நபி ﷺ அவர்களும் அவர்களின் உத்தம தோழர்களும் எந்த கொள்கையில் இருந்தார்களோ அதுதான் அஹ்லுஸ் ஸுன்னா உடைய கொள்கை ஆகும். நபி ﷺ அவர்கள் கொண்டு வந்த இஸ்லாமிய மார்க்கம் அஹ்லுஸ் ஸுன்னாவிடம் கலப்படம் இல்லாமல், கலங்கப் படாமல், கூட்டல், குறைத்தல் இன்றி, பரிசுத்தமாக இருக்கின்றது. அவர்கள்தான் நபி ﷺ அவர்களின் சிபாரிசுக்கு மிகத் தகுதியானவர்கள் ஆவார்கள். அவர்கள்தான் ஸஹாபாக்களுக்கு மிக நெருக்கமானவர்கள் ஆவார்கள். அல்குர்ஆனில் முஃமின்களுக்கு அல்லாஹ் கூறிய நற்செய்திகளுக்கு இவர்கள்தான் தகுதியானவர்கள். முஃமின்களின் பண்புகள், குணங்கள் என்று அல்லாஹ் வர்ணித்த அத்தனை நல்ல குணங்களும் அழகிய பண்புகளும் அஹ்லுஸ் ஸுன்னாவிடம்தான் அதிகமாக இருக்கின்றது. எனவே, யார் அஹ்லுஸ் ஸுன்னா உடைய மன்ஹஜ் - வழிமுறையையும், அகீதா - கொள்கையையும் வாழ்நாளெல்லாம் பின்பற்றி நடப்பாரோ அவர் அல்லாஹ்வின் அருளால் நிச்சயம் நன்மையிலும் நற்பாக்கியத்திலும்

ஈடேற்றத்திலும் வெற்றியிலும் இருப்பார்; ஷைத்தானின் வழிகேடுகளை விட்டும் நஃஃப்ஸ் உடைய தீங்குகளை விட்டும் அவர் பாதுகாப்பு பெறுவார்; குழப்பங்களில் சிக்கி சீரழிய மாட்டார்; மன இச்சைகளை பின்பற்றி நேர்வழி தவற மாட்டார்: சிந்தனையால் சீர் கெட மாட்டார்.

இதைத்தான் ஆசிரியர் அவர்கள் இந்தக் கொள்கையை நீ பின்பற்றினால் எப்போதும் நன்மையில் இருப்பாய் என்று கூறி முடிக்கின்றார்கள்.

அல்லாஹு தஆலா ஆசிரியர் அவர்களுக்கும் அவர்களைப் போன்ற கல்வியாளர்களுக்கும் நல்லருள் புரிவானாக! அவர்களுக்கு சொர்க்கத்தை கூலியாக ஆக்குவானாக! ஆமீன்.

நேர்வழிபெற்ற நல்லோர் வழியில் நாம் நிலைத்திருக்க அல்லாஹ் நமக்கு நல்லருள் புரிவானாக! ஆமீன்!

اَلْـحَمْدُ للهِ رَبِّ الْعَالَمِينَ وَالصَّلَاةُ وَالسَّلَامُ عَلَىٰ رَسُولِهِ وَعَلَىٰ آلِهِ وَصَحْبِهِ أَجْمَعِينَ

سُبْحَانَكَ اللّٰهُمَّ وَبِـحَمْدِكَ أَشْهَدُ أَن لَّا إِلٰهَ إِلَّا أَنْتَ أَسْتَغْفِرُكَ وَأَتُوبُ إِلَيْكَ

--------------------

# حَائِيَّةُ الْإِمَامِ ابْنِ أَبِي دَاوُدَ فِي السُّنَّةِ

نَظَمَهَا الْـحَافِظُ أَبُوْ بَكْرٍ عَبْدُ اللهِ ابْنُ الإِمَامُ الْـحَافِظِ أَبِي دَاوُدَ سُلَيْمَانَ بْنُ الْأَشْعَثِ السِّجِسْتَانِيُّ المتوفى سنة ٣١٦ ﻫ رَحِمَهُ اللهُ

وَضَبَطَ نَصَّهَا أَبُوْ عَبْدِ الرَّحْمَنِ عَمْرُو بْنُ هَيْمَانَ بْنِ نَاصِرِ الدِّيْنِ الْـمِصْرِيُّ السَلَفِيُّ

بِسْمِ اللَّهِ الرَّحْمَنِ الرَّحِيمِ

تَمَسَّكْ بِحَبْلِ اللهِ, وَاتَّبِعِ الْهُدَى

وَلَا تَكُ بِدْعِيًّا لَعَلَّكَ تُفْلِحُ

وَدِنْ بِكِتَابِ اللهِ وَالسُّنَنِ الَّتِي

أَتَتْ عَنْ رَسُوْلِ اللهِ تَنْجُو وَتَرْبَحُ

وَ قُلْ غَيْرُ مَخْلُوقٍ كَلَامُ مَلِيكِنَا

بِذَلِكَ دَانَ الْأَتْقِيَاءُ وَأَفْصَحُوا

وَلَا تَكُ فِي الْقُرْءَانِ بِالْوَقْفِ قَائِلًا

كَمَا قَالَ أَتْبَاعٌ لِـ (جَهْمٍ) وَأَسْجَحُوا

وَلَاتَقُلِ (الْقُرْءَانُ خَلْقٌ قَرَأْتُهُ)

فَإِنَّ كَلَامَ اللهِ بِاللَّفْظِ يُوْضَحُ

وَقُلْ يَتَجَلَّى اللهُ لِلْخَلْقِ جَهْرَةً

كَمَا الْبَدْرُ لَا يَخْفَى وَرَبُّكَ أَوْضَحُ

وَلَيْسَ بِمَوْلُوْدٍ وَلَيْسَ بِوَالِدٍ

وَلَيْسَ لَهُ شِبْهٌ-تَعَالَى الْمُسَبَّحُ-

وَقَدْ يُنْكِرُ الْجَهْمِيُّ هَذَا وعِنْدَنَا

بِمِصْدَاقِ مَا قُلْنَا حَدِيْثٌ مُصَرِّحُ

رَوَاهُ (جَرِيْرٌ)عَنْ مَقَالِ (مُحَمَّدٍ)

فقُلْ مِثْلَ مَا قَدْ قَالَ فِيْ ذَاكَ تَنْجَحُ

وَقَدْ يُنْكِرُ الْجَهْمِيُّ أَيْضًا يَمِيْنَهُ

وَكِلْتَا يَدَيْهِ بِالْفَوَاضِلِ تَنْفَحُ

وَقُلْ يَنْزِلُ الْجَبَّارُ فِيْ كُلِّ لَيْلَةٍ

بِلَا كَيْفٍ جَلَّ الْوَاحِدُ الْمُتَمَدَّحُ

إِلَى طَبَقِ الدُّنْيَا يَمُنُّ بِفَضْلِهِ

فَتُفْرَجُ أَبْوَابُ السَّمَاءِ وَتُفْتَحُ

يَقُوْلُ ألاَ مُسْتَغْفِرٌ يَلْقَ غَافِرًا

وَمُسْتَمْنِحٌ خَيْرًا وَرِزْقًا فَيُمْنَحُ

رَوَى ذَاكَ قَوْمٌ لَا يُرَدُّ حَدِيْثُهُمْ

أَلَا خَابَ قَوْمٌ كَذَّبُوْهُمْ وقُبِّحُوْا

وَقُلْ إِنَّ خَيْرَ النَّاسِ بَعْدَ (مُحَمَّدٍ)

(وَزِيْرَاهُ) قِدْمًا ثُمَّ (عُثْمَانُ)الْاَرْجَحُ

وَرَابِعُهُمْ خَيْرُ الْبَرِيَّةِ بَعْدَهُمْ

(عَلِيٌّ) حَلِيْفُ الْخَيْرِ بِالْخَيْرِ مُنْجِحُ

وَإِنَّهُمْ وَالرَّهْطُ -لَارَيْبَ فِيْهِمْ -

عَلَى) نُجُبِ (الْفِرْدَوْسِ) فِيْ الْخُلْدِ تَسْرَحُ

(سَعِيْدٌ) (وَسَعْدٌ) وَ(ابْنُ عَوْفٍ) وَ(طَلْحَةٌ)

وَ(عَامِرُ فِهْرٍ) وَ(الزُّبَيْرُ) الْمُمَدَّحُ

وَقُلْ خَيْرَ قَوْلٍ فِي (الصَّحَابَةِ) كُلِّهِمْ

وَلَا تَكُ طَعَّانًا تَعِيْبُ وَتَجْرَحُ

فَقَدْ نَطَقَ الْوَحْيُ الْمُبِيْنُ بِفَضْلِهِمْ

وَفِي (الْفَتْحِ) آيٌ فِي الصَّحَابَةِ تَمْدَحُ

وَبِالْقَدَرِ الْمَقْدُوْرِ أَيْقِنْ فَإِنَّهُ

دِعَامَةُ عَقْدِ الدِّيْنِ وَالدِّيْنُ أَفْيَحُ

وَلَا تُنْكِرَنَّ – جَهْلاً – (نَكِيْرًا) وَ(مُنْكَرًا)

وَلَا (الْحَوْضَ) وَ(الْمِيْزَانَ) إِنَّكَ تُنْصَحُ

وَقُلْ يُخْرِجُ اللهُ الْعَظِيْمُ بِفَضْلِهِ

مِنَ (النَّارِ) أَجْسَادًا مِّنَ الْفَحْمِ تُطْرَحُ

عَلَى النَّهْرِ فِي (الْفِرْدَوْسِ) تَحْيَا بِمَائِهِ

كَحَبِّ حَمِيلِ السَّيْلِ إِذْ جَاءَ يَطْفَحُ

وَإِنَّ رَسُوْلَ اللهِ لِلْخَلْقِ شَافِعٌ

وَقُلْ فِي عَذَابِ (الْقَبْرِ) حَقٌّ مُوَضَّحُ

وَلَا تُكْفِرَنْ أَهْلَ الصَّلَاةِ -وَإِنْ عَصَوْا-

فَكُلُّهُمْ يَعْصِيْ وَذُو الْعَرْشِ يَفْصَحُ

وَلَا تَعْتَقِدْ رَأْيَ الْخَوَارِجِ إِنَّهُ

مَقَالٌ لِمَنْ يَهْوَاهُ يُرْدِي وَيَفْضَحُ

وَلَا تَكُ مُرْجِيًّا لَعُوْبًا بِدِيْنِهِ

أَلَا إِنَّمَا الْمُرْجِيُّ بِالدِّيْنِ يَمْزَحُ

وَقُلْ إِنَّمَا الْإِيْمَانُ قَوْلٌ وَنِيَّةٌ

وَفِعْلٌ عَلَى قَوْلِ النَّبِيِّ مُصَرَّحُ

وَيَنْقُصُ طَوْرًا بِالْمَعَاصِي وَتَارَةً

بِطَاعَتِهِ يَنْمِي وَفِي الْوَزْنِ يَرْجَحُ

وَدَعْ عَنْكَ آرَاءَ الرِّجَالِ وَقَوْلِهِمْ

فَقَوْلُ رَسُوْلِ اللهِ أَزْكَى وَأَشْرَحُ

وَلَا تَكُ مِنْ قَوْمٍ تَلَهَّوْ بِدِيْنِهِمْ

فَتَطْعَنَ فِي أَهْلِ الْحَدِيْثِ وَتَقْدَحُ

إِذَا مَا اعْتَقَدتَّ الدَّهْرَ- يَا صَاحِ- هَذِهِ

فَأَنْتَ عَلَى خَيْرٍ تَبِيْتُ وَتُصْبِحُ

قَالَ الْحُفَّاظُ ابْنُ شَاهِيْنٍ وَابْنُ شَاذَانٍ وَالعُكْبَرِيُّ والآجُرِّيُّ ثُمَّ قَالَ لَنَا أَبُوْ بَكْرٍ ابْنُ أَبِي دَاوُدَ هَذَا قَوْلِي وَقَوْلُ أَبِي وَقَوْلُ أَحْمَدَ ابْنِ حَنْبَلِ وَقَوْلُ مَنْ أَدْرَكْنَا مِنْ أَهْلِ الْعِلْمِ وَمَنْ لَمْ نُدْرِكْ مِمَّنْ بَلَغَنَا عَنْهُ فَمَنْ قَالَ عَلَيَّ غَيْرَ هَذَا فَقَدْ كَذَبَ

---------------------


DARUL
HUDA

13. அல்குர்ஆன் சொல்லுக்குச் சொல் தமிழாக்கம் பாகம் 3
(சூரா அர்ரூம் (30) முதல் அந்நாஸ் (114) வரை)

14. அல்குர்ஆன் சொல்லுக்குச் சொல் தமிழாக்கம் (அம்ம ஜுஸ்வு)

15. அல்குர்ஆன் சொல்லுக்குச் சொல் தமிழாக்கம் (ஆலு இம்ரான்)

# தமிழ் புத்தகங்கள்

1. தொழுகை முறை
2. நோன்பு
3. ஹிஜாப் - முஸ்லிம் மங்கையரின் மேன்மை
4. அஹ்லுஸ் ஸுன்னா வல் ஜமாஆ கொள்கைகள்
5. அழைப்புப்பணி - அழைப்பாளர்
6. திருமண வாழ்த்து, காலை மாலை திக்ருகள், இஸ்திகாரா துஆ
7. ஸகாத் - வழிமுறைகள், சட்டதிட்டங்கள்
8. இறுதிப் பேருரை (முழுத் தொகுப்பு)
9. இஸ்லாமியக் கொள்கை. வினா - விடைகள்
10. தடுக்கப்பட்டவை
11. இறைநெறி கூறும் இயற்கைக் கடமைகள்
12. அல்குர்ஆன் துஆக்கள்
13. குர்ஆன் ஹதீஸ் கூறும் பிரார்த்தனை
14. நம்பிக்கையின் அடிப்படைகள்
15. இல்லங்களை அச்சுறுத்தும் அபாயங்கள்
16. இஸ்லாமிய ஒளியில் குழந்தை வளர்ப்பு
17. மூன்று அடிப்படைகள்
18. அலட்சியமாகக் கருதப்படும் ஆபத்தான குற்றங்கள்
19. தஃலீமுல் குர்ஆன் (தஜ்வீது வழிகாட்டி)
20. அத்தவ்ஹீத்
21. அன்றாடம் கடைப்பிடிக்க 1000 சுன்னத்துகள்
22. வெற்றிக்கு வழி
23. அழைப்புப் பணி கேள்வி-பதில்
24. உம்ரா வழிகாட்டி (ஆர்ட் பேப்பர் 18x12 cm)
25. அழகிய துஆக்கள் மற்றும் ருக்யாக்கள் (10.5x14 cm)
26. முன்மாதிரி முஸ்லிம் குடும்பம்
27. இயற்கை மதம்
28. ஹிஸ்னுல் முஸ்லிம் (மஸ்னூன் துஆக்கள்)
29. இஸ்லாமின் இறைக்கோட்பாடு
30. மீளாப்பயணம் (ஜனாஸாவின் சட்டங்கள்)
31. இப்னு தைமிய்யா வாழ்க்கை வரலாறு

32. முன்மாதிரி முஸ்லிம்
33. ஹிஸ்னுல் முஸ்லிம் (21x14 cm)
34. ஹஜ். உம்ரா வழிகாட்டி
35. அழகிய துஆக்கள் மற்றும் ருக்யாக்கள் (21x14 cm Single Colour)
36. தப்சீர் முதல் ஜுஸ்வு
37. முன்மாதிரி முஸ்லிம் பெண்மணி
38. அர்ரஹீக் அல்மக்தூம் (18x24 cm)
39. அழகிய துஆக்கள் மற்றும் ருக்யாக்கள் (14x21 cm Full Colour)
40. இறைமார்க்கம் இறைவேதம் ஓர் அறிமுகம்
41. இஸ்லாம் நீங்கள் அறியவேண்டிய மார்க்கம்
42. சான்றோர்கள் பாடசாலை (பாகம் 1)
43. இறைவனுக்கு உருவம் கொடுக்க முடியுமா?
44. கவலைப்படாதே!
45. இயேசுவின் அழைப்பு
46. ஒரு தெய்வமா? பல தெய்வமா?
47. வஸிய்யத்தீ
48. ரஹ்மத்தான ரமழான்
49. இஸ்லாமிய சிறப்பு கல்வி வகுப்பு
50. உலக முடிவு
51. இறைத்தூதரின் தூய வரலாறு
52. அல்குர்ஆன் பாக்கியம் நிறைந்த வேதம்
53. தூய திருகலிமா
54. அத்தஹாரா - தூய்மை - ஃபிக்ஹ்
55. தொழுகை - ஃபிக்ஹ்
56. ஸகாத் - ஃபிக்ஹ்
57. ஹஜ் - ஃபிக்ஹ்
58. நோன்பு - ஃபிக்ஹ்
59. இல்முத் தஜ்வீத்
60. இஸ்லாமில் சொத்துரிமை சட்டங்கள்
61. நபியவர்களின் சரியான தொழுகை முறை
62. முஸ்லிம் பெண்மனியின் நற்குணங்கள்
63. லும்அத்துல் இஃத்திகாத்
64. ஹதீஸ் கலை இமாம்களின் கொள்கை
65. ஷர்ஹுஸ் ஸுன்னா - பர்பஹாரி
66. உஸுலுஸ் ஸுன்னா - அஹமது இப்னு ஹன்பல்
67. அல் அகீததுல் வாஸிதிய்யா - இப்னு தைமிய்யா
68. அஹ்லுஸ் ஸுன்னா வல் ஜமாஆ கொள்கை - உஸைமீன்
69. அல்குர்ஆன் விரிவுரையின் சில அடிப்படைகள் - உஸைமீன்

# ENGLISH BOOKS

1. The Ideal Husband & The Ideal Wife
2. 33 Ways Developing Inner Fear
3. 40 Guidelines & Dangers That Threaten
4. Situations & Questions - Answers
5. Prohibited & Problems And Solutions
6. Aqeeda Attawheed
7. The True Message of Jesus Christ
8. Fortification of The Muslim
9. Funeral Rites In Islaam
10. Explanation of Aayat Alkursi
11. Gateway To Arabic, Starter Book, (1-5 Parts) each book
12. Search for Happiness
13. What Must Be Known About Islaam?
14. The Sunnah Out Spread Flags of...
15. The Book of Tawheed
16. The Ideal Muslim
17. Ideal Muslimah
18. Noble Quran in The English Language
19. Arraheeq Al Makhtoom
20. About Islam
21. Glorious Quran
22. Precious Invocations and Ruqyas (21x14 cm)
23. Dua and Ruqya from Quran and Sunnah (10.5x14 cm)
24. The Quran with English Meanings and Notes
25. English Meanings and Notes of The Quran

----------------------